இலந்தை சு. இராமசாமி



# இலக்கியச் சீனி - அ.சீ.ரா.

## வாழ்வும் வாக்கும்

# இலக்கியச்சீனி - அ.சீ.ரா.

## வாழ்வும் வாக்கும்

**இலந்தை சு. இராமசாமி**



**சுந்தர் பதிப்பகம்**
2, 29 வது தெரு, தில்லைகங்காநகர்,
சென்னை - 600 061.
✆ : 2233 4949

முதற்பதிப்பு : அக்டோபர் 2005
First Edition October 2005

## BIBILIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Titile | : | Ilakkiacheeni A.S.R. (Vazhvum Vakkum) |
| Subject | : | Biography |
| Author | : | Kavimamani Elandhai S. Ramasami |
| Copy Right | : | By the Author |
| Language | : | Tamil |
| Paper | : | 11.6 White Printing |
| Size of the Book | : | 18 X 12.5 cm Double Crown |
| Fonts | : | 11 Pts |
| No. of Pages | : | 240 |
| Printer | : | Jay Orr printers, Ch:15 |
| Publishers | : | The Author<br>**SUNDAR PATHIPAGAM**<br>2, 29th Street, Thillaiganga Nagar,<br>Chennai - 600 061<br>✆ : 2233 4949 |
| Price | : | **60/-** |

# பொருளடக்கம்

# முன்னுரை

"சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்"

என்ற பாரதியின் எதிர்பார்ப்பை நனவாக்கியவர்களில் முதல் இடம் பிடிப்பவர் செந்தமிழ்ச் செம்மல் பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்கள்.

அவர் தமிழறிஞர், கவிஞர், இலக்கிய விமரிசகர், பத்திரிகை ஆசிரியர், எல்லாவற்றிற்கும் மேலாக அவர் ஆசிரியர்.

ஆசிரியருக்கெல்லாம் ஆசிரியர். அவரிடம் பயின்றோம் என்பதைப் பெருமையாகச் சொல்லிக் கொள்ளுமளவுக்குப் பேர்பெற்ற ஆசிரியர்.

வேற்றுமொழி இலக்கியங்களைத் தமிழில் கொணர்ந்து சேர்த்தவர். தமிழ் இலக்கியங்களை ஆங்கிலத்தில் ஏற்றியவர். ஆங்கிலத்திலும் தமிழிலும் அபாரத் திறமை பெற்று இரண்டு மொழியிலக்கியங்களையும் அற்புதமாக எடுத்துச் சொல்லும் ஆற்றல் பெற்றவர்.

அவரது 'சிந்தனை'ப் பத்திரிகை வெளிவந்த காலம் கொஞ்சம்தான் என்றாலும் அந்தக் குறுகிய காலத்தில் தமிழிலக்கியத்தில் ஒரு முத்திரையைப் பதித்துச் சென்றது. தூய இலக்கியப் பத்திரிகைகளில் அதற்கிணையில்லை.

எத்தனையோ மாணவர்களை அவர் உருவாக்கினார். பிறர் அறியாமல் எத்தனையோ மாணவர்களுக்குப் பொருளுதவி செய்து வாழவைத்தார்.. இன்னும் ஒருபடி மேலே போய் என்னை அவர் வீட்டிலேயே தங்கவைத்துப் படிக்கவைத்தார்.

அவர் வரலாறு புதுமை இலக்கியத் திறனாய்வின் வரலாறு. அவரது நூற்றாண்டு விழாவை ஒட்டி அவர் வாழ்க்கை வரலாற்றை எழுதவேண்டும் என்று முனைந்தேன். பிறரிடம் கேட்டும் நானே அறிந்தும் சேகரித்த செய்திகளைத் தொகுத்தேன். என்றாலும் எனக்குத் திருப்தியில்லை. சொல்லக்கூடியவர்கள்

சொல்லவில்லை. சொல்பவர்களிடம் முறையான செய்தி இல்லை. இந்த நிலையில் அல்லயன்ஸ் நிறுவனத்தினர் திரு. மு. சீனிவாசன் அவர்களின் உதவியுடன் அ.சீ.ரா எழுத்துக்கள் ஏழு தொகுதிகளை வெளியிட்டார்கள். அவருடைய எழுத்துக்களில் தமது வாழ்க்கைச் செய்திகளைப் பொதிந்து வைத்திருக்கிறார் பேராசிரியர். எனது பணியும் எளிதாயிற்று. பேராசிரியரின் தங்கை திருமதி கமலாகோவிந்தன் பேராசிரியரின் இளவயதுச் செய்திகளைச் சொன்னார். டாக்டர் திருமதி வசந்தா சீநிவாசன் சிலசெய்திகளைச் சொன்னதோடு அ.சீ .ரா வை நன்கு அறிந்தவர்களிடமிருந்து விவரம் சேகரிக்க உதவினார்.

இதோ இலக்கியச் சீனி அ.சீ.ராவின் வாழ்க்கை வரலாறு உங்கள் கையில். சொன்னது கொஞ்சம். சொல்ல வேண்டியவையோ ஏராளம்.

படித்துப்பாருங்கள். அ.சீ.ரா எவ்வளவு பெரியவர் என்பது புரியும்.

இப்புத்தகம் வெளிவர உதவியவர்கள் அனைவருக்கும் நன்றி

கோவை ஸ்ரீகிருஷ்ணா ஸ்வீட்ஸ் நிறுவனத்துக்குத் தனி நன்றி! கம்பன் கலைச்செம்மல் கோவை திரு. நஞ்சுண்டன் அவர்களுக்கு நன்றி.

இந்நூலை அழகிய முறையில் அச்சிட்டுக் கொடுத்த சைதை ஜே.ஆர். பிரிண்டர்ஸ்க்கு என் நன்றி.

அன்புடன்

**இலந்தை சு. இராமசாமி**

சென்னை-61
16-10-2005



# இலக்கியச் சீனி - அ.சீ.ரா.

# வாழ்வும் வாக்கும்

## 1. பொருநையில் கலந்த காவிரி

மகிழ்ச்சியோடு சிறுவர்கள் ஓடியாடி விளையாடிக் கொண்டிருந்தனர். இரண்டு குடும்பங்கள் அருகருகே அமர்ந்திருந்தன.

ஒருகுடும்பம் திருநெல்வேலியிலிருந்து வந்திருந்தது. மற்றொன்று தஞ்சையிலிருந்து. அடுத்துவரும் புகைவண்டிக்காக அவர்கள் காத்திருந்தார்கள். ஓடிப்பிடித்து விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள் கால்பட்டு இரண்டு குடுவைகள் உருண்டன. ஒன்றிலிருந்து தாமிரபரணித் தண்ணீர் கொட்டி ஓடியது. இன்னொன்றிலிருந்து காவிரித் தண்ணீர் கொட்டி ஓடியது. இரண்டும் சங்கமித்தன.

பொருநைத் தண்ணீருக்கு மிகுந்த மகிழ்ச்சி.

"காவிரியக்கா, நீ என்னோடு கலந்துவிட்டாய்" என்றது

" யார் யாரோடு கலந்தது? " என்று கேட்டது காவிரி "அக்கா என்னுடைய கரையில் இருப்பவர்கள் அதிகமாக இலக்கியம் படிக்கிறார்கள்" என்றது பொருநை.

"ஆமாம், என்னுடைய நீரைப் பருகியவர்களுக்குத் தானாகவே சங்கீதம் வந்துவிடுகிறது" என்றது காவிரி.

பொருநை பாடியது

"தென்றல் தவழ்ந்தது பொதிகையிலே
செந்தமிழ் வந்தது பொதிகையிலே"

"அக்கா, உங்கள் தண்ணீர் என்னிடம் கலந்ததும் எனக்கும் பாடத் தோன்றுகிறது" என்றது.

" காவிரி நீரில் கணிதமும் ஓங்கிடும்
தாவில்சங் கீதமும் தான்"

பார்த்தாயா எனக்குள் இலக்கியம் ஓடுகிறது" என்றது காவிரி.

இரண்டும் சிரித்துக்கொண்டே ஓடின.

சங்கமம்



"நம் இரண்டின் சங்கமம் முன்னரே நிகழ்ந்துவிட்டது தெரியுமா" என்று கேட்டது காவிரி.

"அப்படியா" வியப்போடு கேட்டது பொருநை.

'ஆமாம். நான் என்கரைப்பகுதியில் இருந்து ஒருவரை உன்பகுதிக்கு அனுப்பினேன்".

"யாரது?"

"அ. சீநிவாச ராகவன் "

"ஓ, தெரியுமே, அவர் எங்கள் பக்கத்து ஆளென்றல்லவா நினைத்துக்கொண்டிருந்தேன்,"

" அதுதான் எங்கள் மண்ணின் சிறப்பு. எங்குச் சென்றாலும் அதைத் தனதாக்கிக் கொண்டுவிடுவார்கள்".

" அவரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடு கிறார்களாம்".

"அப்படியா, நாமும் கொண்டாடிவிட வேண்டியதுதான். ஆமாம் அவர் உங்கள் பகுதியிலிருந்து வந்தாரென்றால் எந்த ஊர்" என்று கேட்டது பொருநை. "கண்டியூர் " அந்த ஊர் திருவையாற்றிலிருந்து இரண்டுகல் தொலைவில் இருக்கிறது. அங்கே பிறந்தவர்தான் சீநிவாச ராகவன்.,. அது தந்தை பெயர் அண்ணாதுரை அய்யங்கார்." என்றது காவிரி,

மேற்கொண்டு அவை பேச்சைத் தொடருமுன் இரயில் வந்தது. எல்லோரும் ஏறிச் சென்றார்கள். அடித்த வெய்யிலில் சிந்திய தண்ணீர் வற்றிப்போனது,

அவை சொல்லாது விட்டதை நாம் தொடர்வோம்.

எல்லோரும் இங்கே

அவரது ஊர் கண்டியூர் அவரது வீடு உண்டியூர்

இன்னார் இனியர் என்றல்லாது வாரி வழங்கிய வள்ளல் அவர்.

அவர் தனிமையில் இருந்ததில்லை. எப்பொழுதும் அறிஞர்கள் அவரைச் சூழ்ந்திருப்பார்கள்.

அவரது கைத்தலங்கள் எப்பொழுதும் தாங்குவது புத்தகங்கள்.

"கம்பனைப் பார்க்கலாமா?" அவர் கேட்கும் தொனி ஏதோ பக்கத்து அறையில் கம்பன் உட்கார்ந்து கொண்டிருப்பதைப் போலவும் நம்மைக் கைப்பிடித்து அவரிடம் அழைத்துக்கொண்டு செல்லுவது போலுமிருக்கும்.

அவர் மெலிதாகப் புன்னகைத்துக்கொண்டு தலையைத் தூக்கிப் பார்க்கும் போது " அடே , பயலே, நாம் அவ்வளவு தூரம் போக வேண்டாம், அவர் இங்கே தான் இருக்கிறார்" என்று சொல்வதுபோலிருக்கும்.

"ஓஹோ, அங்கிருந்து கம்பராமாயணப் புத்தகத்தை எடுத்துப் படிக்கப்போகிறார் என நினைத்தால்

உடனே " கம்பனை நன்கு புரிந்து கொள்ள வேண்டுமா நாம் ஷேக்ஸ்பியரிடம் போகவேண்டும்" என்பார்.

"தமிழ்நாட்டுக் கவிஞர்களையே இன்னும் புரிந்து கொள்ளவில்லை, ஷேக்ஸ்பியரிடம் எங்கே போவது?"என நினைத்தால்

"கவலைப்படாதே அவரும் இங்கே தான் இருக்கிறார்" என்று சொல்லிக் குறும்பாகப் புன்னகைப்பார்.

இப்படிப் போய்க்கொண்டே இருந்தால் அங்கே கம்பனையும் ஷேக்ஸ்பியரையும் மட்டுமா பார்க்க முடியும்!

தொல்காப்பியர் தொடங்கி அன்றுதான் பத்திரிகையில் எழுதத்தொடங்கிய கவிஞன் வரை பார்க்கலாம்.

ஹோமர் கம்பனுடன் கைகுலுக்குவார். பாரதியுடன் ஷெல்லியும் கீட்சும் இரகசியம் பேசிக்கொள்வார்கள்.

வங்காளத் தாகுர் அங்கே வலம் வருவார்.

நாயன்மார், ஆழ்வார்கள், ஆண்டாள், மீரா, எல்லோரையும் தரிசிக்கலாம்.

வானொலியில் திருப்பாவையும் திருவெம்பாவையும் ஒலித்துக்கொண்டிருக்கும்.

அவருக்கு, படுக்கையில் கூடப் பாரதி தரிசனம்

கனவில் கூடக் கம்ப நாடகம்

அவர் மேல்காற்றைத் தமிழ்த் தென்றலாக்கியவர்

தாகுரைத் தமிழராக்கியவர்

பாரதியை நாடுகடத்தியவர்.

அவர் வாழும் இடத்தில் இயற்கை கொலுவிருக்கும்,

அவர் கையிலிருந்து மயில் உணவெடுக்கும்.. செந்தாமரைக் குளத்தில் தென்றல் சிந்து பாடும்.

வெண்டாமரைக் குளத்தில் வண்டுகள் கீதமிசைக்கும். சவுக்கைத்தோப்பு சங்கீதம் பாடும்.

ஆங்கில இலக்கியம் தமிழ்ச்சிவிகை ஏறும். தமிழ் இலக்கியம் ஆங்கிலச் சிம்மாசனத்தில் அமரும்.

காளிதாசன் தூதனுப்புவான். சங்கரரும் இராமானுஜரும் சந்தித்துக்கொள்வார்கள்.

**தேசபக்தி**

சுதந்திரப் போரில் பாரதியின் பாடல் எழுச்சிதந்தது.

சீனப்போரில் நாணலின் பாடல் உணர்ச்சி தந்தது

தூத்துக்குடியில் அவர் வாழ்ந்த இல்லத்தின் பெயர் “பாரதி இல்லம்”

அங்கே நிகழ்ந்த இலக்கியப் பேச்சுகள் சர்க்கரை, தேன்,பாகு, வெல்லம்.

“பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்” என்றார் பாரதி.

அந்தப் ‘பாரதி இல்லத்தில்’ அந்தக் கனவு நனவாகிக் கொண்டிருந்தது.

ஆங்கிலேயரை விரட்டப் பாரதி பாடிய பாடல்கள், அ.சீ.ராவின் முயற்சியால் ஆங்கிலத்தின் முதுகில் ஏறி அமர்ந்துகொண்டன..

அவரது வகுப்பு பல இடங்களிலிருந்தும் வந்து குவிந்த மாணவர்களின் தொகுப்பு.

அவர் குரலே இசையாக வரும். அது அவர் பெற்ற வரம்.

காமதேனுவின் உடலில் எல்லாத் தெய்வங்களும் குடியிருப்பார்களாம்.

அ.சீ.ராவின் உள்ளத்தில் பன்மொழி இலக்கியவாதிகளும் குடியிருந்தனர்.

அங்கேதான் எத்தனை சிம்மாசனங்கள்.!

கம்பன், இளங்கோ, வள்ளுவர், சங்கப்புலவர்கள், பாரதி, தாகுர், ஷேக்ஸ்பியர், மில்டன், வோர்ட்ஸ்வர்த், டென்னிசன், ஹோமர், கீட்ஸ், ஷெல்லி, பிரான்ஸிஸ் தாம்சன், உமர்கய்யாம், காளிதாசன், வால்மீகி, ஆதிசங்கரர் ஆழ்வார்கள், நாயன்மார்கள் என எத்தனை எத்தனைபேர் அங்கே அமர்ந்திருந்தனர்!

அவர் உள்ளத்திலே அவர்களே பேசினர். அவர்களே தம்மை ஒப்பிட்டுக்கொண்டனர். இலக்கியம் அங்கே நிலைக்களமானது.



# 2. உப்பும் சீனியும்

உப்பிலே சீனி கலந்தால் உப்புக்குப் பெருமையா, சீனிக்குப் பெருமையா?

பொதுவாக இரண்டுக்கும் இல்லை.

ஆனால் இரண்டுக்கும் பெருமை வந்தது?

எப்படி?

தூத்துக்குடி பேராசிரியர் சீநிவாசராகவன் அவர்களால் பெருமை பெற்றது. அவரும் தூத்துக்குடியால் பெருமை பெற்றார்.

தூத்துக்குடி ஒரு கடற்துறைமுகம்

அ.சீ.ரா ஒரு இலக்கியத் துறைமுகம்

எல்லா இடங்களிலிருந்தும் கப்பல்கள் துறைமுகத்தில் தங்கும்.

எல்லா நாட்டு இலக்கியங்களும் அ.சீ.ரா நெஞ்சத்தில் பொங்கும்

வ.உ.சி யின் கப்பல் அந்தக் கடலிலே பவனி வந்தது. அ.சீ.ரா வின் இலக்கியப் பேச்சு அந்தக் கடலிலே எதிரொலித்தது. அலை புரளும் தூத்துக்குடி வெளியில் அ.சீ. ராவின் அருமைப் பேச்சில் அடங்கிப் போனது.

சாதி, மதம், இனம் கடந்து மக்கள் அவரை நேசித்தனர்.

தங்கள் நகர் பெற்ற சொத்து என அவரைப் பூசித்தனர்.

கப்பல்கள் தூத்துக்குடித் துறைமுகத்தில் நங்கூரம் போட்டன.

அ.சீ.ராவும் தூத்துக்குடியில் நங்கூரம் போட்டார்.

அவர் வாழ்க்கையின் மூன்றில் ஒருபகுதி அங்கேதான் கழிந்தது. [illegible]ல் அவர் அங்கே வந்தது முதல் [illegible]ல் தன் [illegible] விட்டுச் சென்றது.

சக்திவாய்ந்தவை. அவற்றை நேரடியாகச் சிறிது நேரம் யாரும் பார்க்க முடியாது. அப்படியொரு சக்தி. கண்ணாடி அணிந்திருப்பார்.

மாலையில் கையில் ஒரு தடியுடன் நடக்கப் புறப்பட்டுவிடுவார். அவர் தனியாக நடந்து செல்வது அபூர்வம்.. அவர் தடி தூக்கி நடக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் அவர் கையில் தடியிருக்கும். வளைந்த அழகிய கைத்தடி. அவர் தூத்துக்குடிக்கு வந்த புதிதில் வ. உ. சி கல்லூரி வளாகம் பூங்காவாகவோ எழில்கொஞ்சும் இடமாகவோ இருந்ததில்லை. முள் மரங்கள் அடர்ந்த காடு, பூச்சி பொட்டுகள் அதிகம். எனவேதான் கைத்தடியோடு நடக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டு அதுவே ஒரு பழக்கமாக ஒட்டிக்கொண்டு விட்டது. ஆனால் வெளியே செல்லும் போது கைத்தடி எடுத்துச் செல்லுவதில்லை.

இன்னொரு முக்கியமான அங்கம் வெத்திலைப் பெட்டி. தஞ்சாவூர் மண்ணின் வாசனை. .அவர் வெற்றிலைபோடும் அழகே தனி.

மழிக்கப் படாத முகத்தோடு அவரை நான் பார்த்ததே இல்லை. சிலசமயங்களில் ஒரு நாளைக்கு இரண்டு தரம் ஷேவ் செய்து கொள்வதும் உண்டு.

ஆணழகர். புருஷ மோகினி என்று அவரை அவரது நண்பர்கள் குறிப்பிடுவதுண்டு. வெள்ளை வெளேரென்ற கதராடை. கல்லூரிக்குச் செல்லுகின்ற போது குளோஸ் கோட்..

**பேசினாலே இசை**

அவரது குரல் வெங்கலக் குரல். சிலர் பேசுகிறபோது சிறிது நேரமே கேட்டாலும் அவர் எவ்வளவு சுவையாகப் பேசிய பொழுதிலும்- தூக்கம் வந்துவிடும். ஆனால் அ.சீ. ரா எவ்வளவு நேரம் பேசினாலும் அலுப்புத்தட்டாது. அவரது குரல் கனத்த குரலல்ல. கனிந்த குரல். சுவையைக் கூட்டும் குரல். பிரபல எழுத்தாளர் ஜெயகாந்தன் ஒரு கூட்டத்தில் குறிப்பிட்டது போல அவரது பேச்சைக் கேட்டால் ஒரு வீணைக் கச்சேரி கேட்டதைப் போலிருக்கும். எம்.எஸ் சுப்புலக்ஷ்மி கச்சேரியைக் கேட்டது போலிருக்கும்.

சிலர் பாடினால் இசை. ஆனால் அ. சீ. ரா பேசினாலே இசை. அவருக்கு அபார இசைஞானம் உண்டு. நன்றாக வயலின் வாசிப்பார். பலரோடு அவர் இருக்கிற போது அவர் தனியாகத் தெரிவார்.

ஒருமுறை தூத்துக்குடி ஆறுமுகசாமி அன்பு ஆசிரமத்தில் நடந்த கல்சுரல் அகாதமி நிகழ்ச்சியில் மகாகவி தாகுரைப் பற்றி அ. சீ ரா பேசினார். பேச்சைத் தொடங்கி அடித்தளம் அமைத்து அவர் தொடர்ந்த போது இந்த மண்ணுலகை விட்டு வேறு ஏதோ ஞானாகாசத்தில் மிதப்பது போன்ற ஒரு இன்ப உணர்வு. பேச்சு நிறைவுறுந் தறுவாயில் மெல்ல மெல்ல இந்த உலகிற்குக் கொண்டுவரப் பெற்றது போன்ற உணர்வு. உரை முடிந்துவிடப் போகிறதே என்ற தவிப்பு. இவற்றையெல்லாம் முதன்முதல் ஒரு இலக்கியப் பேச்சில் நான் அன்றுதான் உணர்ந்தேன்.. மூன்று மணி நேரம் போனதே தெரியவில்லை.

சோகம் கலக்காத ஒரு இலக்கியப் பேச்சைக் கேட்டு அழுதவர்களைப் பார்த்திருகிறீர்களா!

அ. சீ. ரா சொற்பொழிவுக்குப் பின் அந்த விந்தை நிகழ்ந்ததை நான் பார்த்திருக்கிறேன். அது உரை நிகழ்ச்சியல்ல. உள்ளத்தின் நெகிழ்ச்சி. ஏதோ வாய்ப்பேச்சோ வாய்வீச்சோ இல்லை. உள்ளத்தின் உண்மை ஒளி அது. கிச்சுக் கிச்சு மூட்டுவது அவர் பேச்சில் இருக்காது. ஆனால் பொருளோடு சிந்திக்க வைக்கும் நகைச் சுவை ஊடாடும். தாம் மிகவும் இரசித்த ஒன்றை அவர் பேசத் தொடங்கும் போது அவர் கண்களில் ஒரு துடிப்புத் தெரியும். அது மற்றவர்களை இரசனை உலகத்துக்குத் தூக்கிச் செல்லும் தூண்டுகோல். வங்காளத்தில் அவரது ஆங்கிலப் பேச்சைக் கேட்டு விட்டு பல வங்காளிகள் அவரது காலைத்தொட்டு வணங்கினார்களாம். ஒரு முதியவர் கண்கலங்கினாராம். இதைப் பேராசிரியரே சொல்லக் கேட்டிருக்கிறேன்.

ஒரு பொருளைப் பற்றி எத்தனை முறைதான் பேசியிருந்தாலும் அதை மீண்டும் பேச நேர்கிறபோது இன்னும் புதிதாக ஏதாவது சொல்ல முடியுமா என்று சிந்திப்பார்.

வாகீச கலாநிதி கி. வா. ஜகன்னாதன் அவர்கள் அ.சீ.ரா வின் பேச்சைப் பற்றி கூறுகிறார்.

*"அவருடைய மேடைப் பேச்சு ஒரு காவியம் அல்லது ஒரு அழகான ஓவியம்., அல்லது சாணையிடப்பட்ட வைரம் அல்லது நல்லசங்கீத இசைக்கச்சேரி. அவருடைய உரையாடலோ அனுபவக் களஞ்சியம். குலுங்கக் குலுங்கச் சிரிக்கவைத்துத் தானும் சிரிக்கப் பேசுவார். தம்முடைய அனுபவங்களைச் சொல்லுவார். அவருக்கு நையாண்டி பண்ணத் தெரியும், ஆனால் நையாண்டியில் அற்பத்தனமோ பொறாமையோ இராது. அதில் ஒரு பெருந்தன்மை இருக்கும். நையாண்டிக்கு ஆளானவரே அதை இரசித்துச் சிரிக்கலாம்"*

இவ்வளவு பெரிய நாவலர் பிறந்த பொழுது அழாமல், ஆடாமல் அசையாமல் கிடந்தாராம்.

"ஏன் இப்படியொரு பிள்ளையைப் பெற்றாய்?' என அவரது தாயை உறவினர் திட்டினராம்.

ஒடுங்கிய நிலையும் ஓங்கிடத்தானா?



# 3. காட்சி இலக்கியம்

திருவையாறுக்கு இரண்டு கல் தொலைவில் இருக்கும் கண்டியூரில் அ.சீ.ராவின் தாய் மாமா வீடு இருந்தது. கோவிலுக்கு அருகே உள்ள வீடு. இயற்கை எழில் கொஞ்சும் கிராமம் அது.

அண்ணாதுரை அய்யங்காரின் மனைவி இரங்கநாயகி அம்மாள் பிரசவத்துக்குக்காகத் தனது தாய்வீட்டுக்கு வந்திருந்தார். அவருக்கு ஏற்கனவே இரண்டு பிள்ளைகள் பிறந்து இறந்துவிட்டன. சகோதரன் குடும்பத்தில் பெண்குழந்தைகள் இல்லாததனால் பெண்குழந்தை பிறக்கவேண்டும் என்று விரும்பினார்கள். எனவே சகோதரர்கள் மிகப் பொறுப்போடு தனது சகோதரியைக் கவனித்துக் கொண்டனர். ஆறாவது மாதத்திலேயே வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்துவிட்டனர். ஏழாவது மாத இறுதியில் அவருக்கு ஆண்குழந்தை பிறந்தது.

"என்ன குழந்தை?" என்று கேட்டார் சகோதரர்.

"ஆண்குழந்தை." என்றனர்.

"யாருக்கு வேண்டும் ஆண்குழந்தை. பெண்குழந்தைதான் வேண்டும் என்று எவ்வளவு ஆசைப்பட்டேன்"என்று துண்டை உதறித்தோளில் போட்டுக்கொண்டு வெளியே சென்றுவிட்டார். இதோ அதைப் பற்றி அ.சீ.ரா வின் இளைய சகோதரி எழுதியிருப்பதைப் பார்க்கலாம்

பிச்சை



*"எனது பாட்டி மற்றும் மாமா கூறிய தகவல்களின்படி அவரது பிறப்பே ஒரு அதிசயம்தான். எங்கள் பெற்றோர் திரு அண்ணாத்துரை அய்யங்கார், திருமதி ரங்கநாயகி ஆகியோருக்கு ஏற்கனவே இரண்டு குழந்தைகள் பிறந்து இறந்துவிட்ட நிலையில் மூன்றாவது அருமைப் பிள்ளையாகக் கண்டியூர் என்ற தஞ்சைக் குக்கிராமத்தில் ஏழுமாதத்தில் குறைப்பிரசவமாகப் பிறந்தார்*

*1905 ம் வருடம் அக்டோபர் மதம் 23ம் தேதி இவர் பிறந்தார். குழந்தை உடம்பு முழுதும் ஒரே கொப்புளங்கள். குழந்தையை வாழை இலையில் கிடத்தி, கிட்டே யாரும் நெருங்காமல், பஞ்சிலே பாலை நனைத்து உதட்டில் தடவிக் கவனமாக பார்த்துக் கொண்டுவந்தார்கள். ஒட்டிக்கொண்டிருந்த கைகால்கள் மெதுவாகப் பிரிந்து குழந்தை உயிர் பிழைத்தது. அவருக்கு மூக்குக் குத்தி "பிச்சை" என்று பெயர் வைத்தனர். பிறகுதான் ஆண்டவன் பிச்சையான அவருக்குச் சீநிவாசராகவன் என்று பெயர் சூட்டினர்".*

**நம்மாழ்வார்**

கைகால்கள் ஒட்டி, உடல் குறுகி ஒரு பொந்துக்குள் இருப்பதுபோல் கிடந்ததால் அந்தக் குழந்தையைப் பார்த்து உறவினர் " நம்மாழ்வார் நம்வீட்டுக்கு வந்திருக்கிறார்" என்று சொல்வார்களாம். அவர்கள் என்ன நினைத்துச் சொன்னார் களோ, அவர் அமரர் ஆகுமுன் எழுதிய கடைசி நூல் "நம்மாழ்வார்" நம்மாழ்வாரின் அருள் அவருக்குப் பரிபூரணமாக இருந்தது.

திருமதி கமலா மேலும் சொல்கிறார்:

*" அவருக்கு இரண்டு வயதாகும் போது அவர் அம்மா நிறைமாதக் கர்ப்பிணி. கூடத்தில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தபோது அவர் தலை மாட்டில் ஒரு பெரிய பாம்பைப் பார்த்துப் பதறிய பாட்டி "பிறக்கும் குழந்தைக்கு சேஷாத்ரி என்று பெயர் வைக்கிறேன். போய்விடு" என்று சொன்னாராம். அதன்படி பாம்பு போய்விட்டதாம். பிறந்த ஆண்குழந்தைக்குச் சேஷாத்ரி என்று பெயர் சூட்டினார்கள். அண்ணன் தம்பி இருவரும் இராம லக்ஷ்மணர் போல வாழ்ந்தார்கள்."*

தனது தம்பியைப் பற்றிப் பேராசிரியர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். அண்ணன் சொல்லுக்கு மறுபேச்சுக் கிடையாதாம். ஒருமுறை பஜனைக்குச் சென்றுவிட்டு அவரது தம்பி இரவு 11 மணிக்கு வீடு திரும்பியிருக்கிறார். வீட்டின் உள்ளே அண்ணன் உறங்கிக் கொண்டிருக்கிறார் என்று தெரிந்ததும் அவரது தூக்கத்துக்கு இடைஞ்சல் விளைவிக்கக் கூடாது என்று அந்த மார்கழிப் பனி இரவில் வாசல் படியை

ஒட்டிப் படுத்துத் தூங்கினாராம். மறுநாள் அவரிடம் ஏன் கதவைத் தட்டவில்லை என்று கேட்ட பொழுது 'முத்தாவின் நிம்மதியான தூக்கம்தான் எனக்கு முக்கியம். என்னைப் பற்றிக் கவலையில்லை"என்றாராம்.

பெண்குழந்தை வேண்டும் என்ற சகோதரர்களின் ஆசையும் விரைவில் பூர்த்தியாகியது. இரங்கநாயகியம்மையார் ஒரு பெண்குழந்தையைப் பெற்றார். அந்தக் குழந்தையை அடுத்த வீட்டுக்கு நான்கணாவுக்கு விற்றுப் பின் வாங்கிக்கொண்டார்கள். அது ஒரு சம்பிரதாயம். அந்தக் குழந்தைக்குக் கண்ணம்மா என்று பெயர் வைத்தார்கள்

கண்ணம்மாவிற்குப்பின் நான்கு குழந்தைகள் பிறந்து இறந்தன, பத்தாவதாகக் கமலா பிறந்தார். அ.சீ.ரா வின் "சோலைக்கனலோ' கவிதையில் வரும்" நீலக் கடலோ குமுறும், நிலைதளர்ந்து நெஞ்சம் பழைய நினைவிற் புரளும்"என்பதைப் போல அவரது நினைவலைகளில் நெஞ்சம் புரள்கிறது என்கிறார் திருமதி கமலா.

மாவட்டக் கலக்டர் அலுவலகத்தில் எழுத்தராகப் பணியாற்றி வந்த அண்ணாத்துரை அய்யாங்காரின் பூர்வீகம் திருக்கருகாவூர். அங்கே அவருக்குப் பத்துவேலி நிலம் இருந்ததாம். அதை விற்றுவிட்டு அவர் நாகப்பட்டினத்தில் மாடத் தெருவில் வீடு வாங்கிக் குடியேறினார்.

### குரங்கு பயில்வான்

நாகப்பட்டினத்தில் தான் அ.சீ.ராவின் பள்ளிப் படிப்புத் தொடங்கியது. அவரது நாகப்பட்டின வாழ்க்கையைப் பற்றி மிகச் சுவையாகக் கலைமகள் பத்திரிகையில் "எங்களூர்" என்ற தொடரில் "பாம்புப் பட்டினம்" என்ற தலைப்பில் எழுதியுள்ளார்.

அந்த ஊரில் குரங்கு பயில்வான் என்றொரு மகா பராக்கிரமசாலி வாழ்ந்தாராம். அவரைக் கண்டு சிறுவர்களும் பெரியவர்களும் அஞ்சுவராம். அவருடைய உண்மையான சாமர்த்தியத்தை விடக் கற்பனையாகக் கட்டிவிடப்பட்ட கதைகள் அவரைப் புராண காலக் கதாநாயகனாகவே ஆக்கி வைத்திருந்தது . கம்பராமாயணத்தில் அனுமன் வாலியைப் பற்றிய கற்பனைகளை அனுமன் வாயிலாக வெளியிடுவதை

விளக்க இந்தக் குரங்குப் பயில்வானை எடுத்துக்காட்டாக தனது 'காவிய அரங்கில்' என்ற நூலில் கடல் கடைந்த கை என்ற கட்டுரையில் அ.சீ.ரா காட்டியிருக்கிறார். இதோ அந்தக் குரங்குப் பயில்வானைப் பற்றி அவர் சொல்லும் அழகைப் பாருங்கள்.

*"எங்கள் ஊர்க் குரங்குப் பயில்வானை உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. எப்படித் தெரிந்திருக்கும். அவன் போன இடம் புல் முளைத்துவிட்டது. ஆனால் அவன் இருந்த காலத்தில்- அதாவது முப்பது வருஷங்களுக்கு முன் - எங்கள் ஊரில் அவன் பெயரைச் சொன்னால் அழுத பிள்ளையும் வாய்மூடும். நமக்கேன் வம்பு என்று இருந்தவர்கள் அவன் பேச்சை எடுக்க மாட்டார்கள். ஊர்வம்பை விலைக்கு வாங்கும் புண்ணியவான்கள் கூட அவன் சம்பந்தப்பட்ட மட்டில் எச்சரிக்கையாக இருப்பார்கள். மாரியம்மன் கோவில் திருவிழா என்றால், குரங்குப் பயில்வான் வைத்ததுதான் சட்டம். அவன் எடுக்கும் பாற்காவடிதான் கடைசிக் காவடி. அவன் காவடி வந்த பிறகுதான் அது எவ்வளவு நேரமானாலும் - அம்மனுக்கு அபிஷேகம் நடக்கும். ஊரிலே போராடி என்றால் களத்துமேட்டிலே பயில்வானைக் காணலாம். . " என்னாங்க, நல்ல விளைச்சல்தானே?" என்று குசலம் விசாரித்துவிட்டு அவன் போய்விடுவான். அவனைத் தொடர்ந்து ஊர்க் காணிக்கையாகக் கண்டுமுதல் நெல்லின் ஒருபகுதி அவனுடைய வீட்டில் போய் நிற்கும்.: இது 'வளமை'. இதிலிருந்து யாராவது தவறிவிட்டால் அவருடைய வைக்கோற்போர் திடீரென்று தீப்பற்றி எரியும். படுக்கப் போகும்போது கட்டிவைத்த சேர் காலையில் எழுந்து பார்த்தால் சூன்யமாக இருக்கும். புதிதாகப் பிடித்து வந்த மாடு ஊர்நோக்கித் திரும்பிவிடும். அவருடைய வாழைக்கொல்லையில் தாரைக் காண முடியாது. புளிய மரம் பழத்திற்குப் பதிலாக பழுப்பைத்தான் தரும். பூத்துக்குலுங்கும் மாமரத்திலிருந்து பூ மட்டுந்தான் அவருக்குக் கிடைக்கும்.*

*ஆகவே , போலீஸ்காரர்களுக்கும் குரங்குப் பயில்வான் பேரில் ஒரு கண். அவர்களைக் கேட்டால்" குரங்குப் பயில்வானா? ஆறடி உயரம், நல்ல கருப்பு நிறம், மாறுகண், இடக்கை வாகு, குஸ்தியில் கைதேர்ந்தவன், ஊரில் நடக்கும் அனைத்துக்கும்*

ஜவாப்தாரி" என்று சொல்லுவார்கள். இது உண்மைதான். ஆனால் இந்த உண்மையை உங்கள் அனுபவமாக நீங்கள் பற்ற முடிகிறதா? குரங்குப் பயில்வானை நேரில் கண்ட உணர்ச்சி , போலீஸ் வர்ணனயின் மூலமாக உங்களுக்குக் கிடைக்கிறதா? இல்லை

ஆனால் எங்கள் பேச்சைக் கேளுங்கள். அது அந்தக் காலத்துச் சிறுவர் பேச்சு.

" அடே, நம்ம ;'குரங்கு;' சுண்டு விரலால் தட்டினால் போதும் .டிரில் வாத்தியார் நூறு குட்டிக்கரணம் போடுவார்" என்பான் ஒருவன்.

இது நடக்கக் கூடிய காரியமா? நடக்காவிட்டால் என்ன, இதைச் சொல்வதே எங்களுக்குப் பரம திருப்தி. நாங்கள் இந்தச் செய்தியை ஆரவாரத்தோடு வரவேற்போம்.

'உப்பனாற்றுப் பாலத்திலே 'குரங்கு' நடந்து வந்தானாம். பாலம் ஒரே அடியாய் ஆடிச்சாம். உனக்குத் தெரியுமா" என்பான் இன்னொருவன்.

"இதென்னடா பிரமாதம்,? பெருமாள் கோவில் தோப்பில் போன மாதம் 'குரங்கு' என்ன பண்ணினான் தெரியுமா? தென்ன மரத்திலே சாய்ந்தான். அவ்வளவுதான் மரம் மடமடவென்று கீழே விழுந்ததைக் கண்ணாலே பார்த்தேன்' என்று சாதிப்பான் உண்மை விளம்பி.

"எங்கப்பா சொன்னார்" குரங்கு லைட் ஹவுஸ் பக்கமே போகக் கூடாதென்று கலெக்டர் உத்தரவு போட்டிருக்கானாம். குரங்கு மூச்சுவிட்டால் லைட் ஹவுஸ் கீழே விழுந்திடுமே" என்று பெருமைதொனிக்கப் பேசுவான் தாலுக்காக் குமாஸ்தாவின் புத்திர சிகாமணி.

ஒரே இரவில் தனியாக நின்று உப்பனாற்று வெள்ளத்தைப் பயில்வான் அணைபோட்டுத் திருப்பியது, ரயில்வே எஞ்ஜினை இழுத்து ஓடாமல் நிறுத்தியது, மடத்து யானையை ஒரே அறையில் கீழே வீழ்த்தியது, கொள்ளிடம் முதலையை வாயைக் கிழித்துக் கொன்றது, இப்படியாக அப்ராக்ருத சம்பவங்கள் பலவற்றை எங்கள் மனம் சிருஷ்டி செய்து அவற்றின் மூலமாகப் பயில்வான் வலிமையைத் தொட்டுப் பார்க்கும்."

*சிறுவயதிலே அவர் பார்த்த ஒவ்வொன்றும் அவரது மனத்திலே ஆழமாகப் பதிந்தன. அந்த நினைவு அவர் இலக்கியங்களைச் சிந்திக்கும் போது அவருக்குக் கைகொடுத்தது. மேலே கூறிய குரங்கு பயில்வானை ஒரு ஆழமான இலக்கியச் சிந்தனையை வெளிக்கொணரப் பயன்படுத்திக் கொண்டார்.*

இளவயதுக் காட்சி இலக்கியமானது

அவர் சொல்கிறார்:

*"எதற்காக இதைச் சொல்லவந்தேன் என்றால் கவிதையும் இப்படித்தான். செய்தி ஒன்றைக் கற்பனை மூலமாகத்தான் கவிதை அனுபவமாக மாற்றுகிறது. கவிதை என்பது தினசரிக் குறிப்பில் நாம் எழுதும் 'பெருங்காயம் ஒன்றரையணா" என்று எழுதும் சிறுமைக்கணக்கன்று. அது உள்ளத்தை உள்ளபடி கூறுவதும் அன்று. உள்ளதை மனிதனுடைய உள்ளம் உணர்ந்தபடி கூறுவதே கவிதை. கற்பனைச் சிறகை விரித்துப் பறந்து சென்று ஒவ்வொரு உணர்ச்சியின் தொடுவான வளைவையும் கவிஞன் அளந்து வருகிறான். இந்த உணர்ச்சிப் பெருக்கின் ஒளியிலேதான் அவன் செய்திகளைப் பார்க்கிறான், நமக்குச் சொல்லவும் வருகிறான், அவனுடைய அனுபவ முகடு எங்கே, நம்முடைய வீட்டுக்கூரை எங்கே? ஏணி வைத்தாலும் எட்டாதே என்று அவன் மயங்குவதில்லை. கதை என்ற அற்புதத்தால் நம் மனத்திற்குக் கற்பனைச் சிறகு அமைக்கிறான். நாமும் அவனுடைய வானத்தின் அளவுக்கு உயரப் பறந்து அவன் உணர்ந்த படி உலகைக் கண்டுவிடுகிறோம்."*

இளவயதுக் காட்சி ஒன்று இலக்கியமாக இப்படித்தான் மாறுகிறது.



# 4. பாம்புப் பட்டினம்

அ.சீ.ராவின் தந்தை தீவிர வைஷ்ணவர் . கோபக்காரர். அவரை நெருங்கவே பயப்படுவார்கள். ஆனால் தமிழ்ப்பற்று உடையவர். வில்லிபுத்தூராரின் பாரதத்தில் ஆழங்கால் பட்டவர். காவிரிக்குக் குளிக்கச் செல்கிறபோது தனது இரு புதல்வர்களையும் உடன் அழைத்துச் செல்லுவார். செல்லும் வழியில் வில்லிபுத்தூரார் பாடல்களைக் கற்றுக்கொடுப்பார். மாலையில் அப்பாடல்களை அவர்கள் திரும்பச் சொல்லியே ஆகவேண்டும். அவரது சினத்துக்குப் பயந்து இருவரும் அவற்றை மனனம் செய்துவிடுவார்கள். அ.சீ.ரா ஒருமுறை சொன்னால் அப்படியே பிடித்துக்கொண்டுவிடுவார். ஆகையால் அவருக்கு மனனம் செய்வது ஒன்றும் கடினம் இல்லை. அவரது தம்பி சேஷாத்ரிக்கு இசையிலே நல்ல ஆர்வம். எனவே பக்திப்பாடல்கள் பாடுவதிலும் பஜனைப் பாடல்கள் பாடுவதிலும் அதிக ஆர்வம் காட்டினார். அ.சீ.ரா இலக்கியத்தில் ஆர்வம் கொண்டார்.

**புத்தகப் பித்து**

சிறுவன் இராகவன் நாகப்பட்டினத்தில் படித்துக்கொண்டிருந்த போது எப்பொழுதும் புத்தகமும் கையுமாகத்தான் தென்படுவான். குறிப்பாக ஆங்கில இலக்கியம் படிப்பதில் ஆர்வம் அதிகம்.

ஒரு சமயம் சார்லஸ் டிக்கன்ஸின் "இருநகரங்களின் கதை'(TALE OF TWO CITIES) எனும் நாவலை நூலகத்தில் இருந்து எடுத்துவந்து தந்தைக்குத் தெரியாமல் கோயில் வாசலில் தூணின் மறைவில் இருந்து படித்துக்கொண்டிருந்தான்

அதைப் பற்றி அவர் சொல்கிறார்.

*" முப்பது ஆண்டுகளுக்கு முன்னே நடந்த சம்பவம்,. மார்கழி மாதத்து இரவு. வாடைக்காற்றுக் கொடுக்கைத் தூக்கிக் கொண்டு கோயில் வாசலைச் சுற்றிச் சுற்றித் துள்ளுகிறது. கோயிலில் ஏதோ திருவிழா. உள்ளே கொட்டுமேளம் அமர்க்களப் படுகிறது. கோயில் வாசலில் ஒரு மூங்கிற் கம்பின் உச்சியில்*

*செருகப்பட்டிருக்கும் காடா விளக்கின் சுடர், காற்றில் தள்ளாடி ஒளியைவிட நிழலை வீசுகிறது. அதன் மங்கல் ஒளியில், வாடைக் காற்றின் ஈட்டி முனையில், மார்கழிப் பனியில், சிறுவன் ஒருவன் உட்கார்ந்திருக்கிறான். அவன் கையிலே ஒரு புத்தகம். அதிலே ஆழ்ந்திருக்கிறான். திருவிழாவின் ஆரவாரம் எல்லாம் அவனுடைய சிந்தையைக் கலைக்கவில்லை. புத்தகத்திலே அழுந்தி வேறொரு உலகத்திலேயே பையன் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறான். அவன் காதிலே ரத்த வெறி கொண்டலையும் பாரிஸ் நகர மக்களின் கோஷம், பாஸ்டில் சிறைவிழுகிற அமளி, பிரபுக்கள் தூக்கு மேடைக்குச் செல்வதை அறிவிக்கின்ற முரசின் ஒற்றைக் கொட்டு, அவன் கண்முன்னே புரட்சியின் ரத்த ஆறு. மிருக உணர்ச்சிகள் உழுத பயங்கரமான மனித முகங்கள், மனிதனுடைய பேயாட்டம்,சுதந்திர சுவர்க்கத்திற்குச் செல்லும் நரகப்பாதை"*(அ.சீ.ரா எழுத்துக்கள்-தொகுதி 6 – பக்கம்171)

அப்படிப் புத்தகம் அவனுள் விளைத்த கற்பனையில் அந்தச் சிறுவன் மிதந்து கொண்டிருந்த பொழுது அவன் கையிலிருந்து அந்தப் புத்தகம் பறிக்கப் பட்டது. அவன் தந்தை அதை வாங்கிக்கொண்டு சென்றுவிட்டார்.

பையனின் கனவிலும் அந்தக் காட்சிகளே வட்டமிட்டுக்கொண்டிருந்தன. புத்தகத்தைப் படித்து முடிக்காவிட்டால் தீராது என்ற நிலை. அந்த ஆர்வம், அந்தத் துடிப்பு அவனை நோயில் தள்ளியது. கடுமையான காய்ச்சல். காய்ச்சலில் அவன் பினாத்தினான், சிட்னி கார்ட்டன் மற்றும் அந்த நாவலில் வரும் பெயர்கள் அவனது பேச்சில் வெளிப்பட்டன. "படிக்கணும், படிக்கணும்" என்று புலம்பிக் கொண்டிருந்தான். நிலைமை மிக மோசமாகப் போகவே அவனது தாய் அவன் தந்தையிடம் கெஞ்சிக் கூத்தாடி அந்தப் புத்தகத்தை வாங்கி அவன் கையில் கொடுத்தாள். அதை ஆவலோடு படித்து முடித்தான். காய்ச்சலும் விலகியது. பெரியவனான பின்பும் அந்தப் புத்தகம் அ.சீ.ரா நெஞ்சை விட்டு அகலவில்லை.

அதைப் பற்றி அவர் சொல்கிறார்:

*"அந்தப் பையன் இப்போது வளர்ந்து விட்டான். இன்று உங்களிடம் பேசிக்கொண்டிருக்கிறான்.ஆனால் இன்னும் அந்தப் புத்தகத்தை மறக்க முடியவில்லை. இந்தப் புத்தகத்தைப் படித்த பிறகு பல மாசங்களுக்கு எந்தப் புத்தகமும் "சப்" என்றிருந்தது. வேறு எங்கேயாவது மனித உணர்ச்சிகள் இப்படிப் பிரும்மண்டமான ஆகிருதியோடு வளைய வருகின்றனவா என்று பையன் தேடினான். ஒன்றும் அகப்படவில்லை. மற்றைய நாவல்களில் விவரிக்கப் பெற்ற காதலும், கோபமும், பொறுமையும், தியாகமும் ஏதோ குழந்தைகள் மணல்வீடு கட்டி விளையாடுகின்ற கணக்கில் இருந்தனவே தவிர "சுரீர்" என்று நெஞ்சைக் கவ்வவில்லை"*

அவருக்குப் புத்தகம் படிக்காமல் இருக்கவே முடியாது. ஒருசமயம் அகத்தியரைப் பற்றி யாரோ எழுதிய புத்தகம் அவர் கையில் கிடைத்தது. சற்றே கரடு முரடான புத்தகம். அதைப்பற்றி அவர் எழுதியிருப்பது ஒரு இனிமையான நகைச்சுவை.

*"இதோ பாருங்கள் அகத்தியரைப் பற்றிப் புலவர் தரும் செய்தி.*

*'இனி அமிழ்தினுமினிய நந்தமிழ் மொழிக்கு எவ்வாற்றானும் ஆக்கந்தேடி அம்மொழிக்கு உயிராதாரமாய் இவர் உற்றிருந்தமையால் , அவ்வியையு தோன்ற அகத்தியர் என இவர் ஆகி நின்றார் எனினுமாம். என்னே இயைபு எனின், 'அகர முதல் னகர இறுவாய்' என்ற ஆன்றோர் இயலுரை வழுவாமல் , அகரத்தை முதலிலும் , னகரத்தை இறுதியிலும் தமிழ்மொழி அமையப் பெற்றிருத்தல் போல், அதனைப் பேணிய இவர் பெயரும் அவ்வாறே முதலில் அகரமும், முடிவில் னகரமும் முடியக் கொண்டுள்ளமை அறிக.'*

*எப்படி இருக்கிறது? தமிழ் கொஞ்சம் கரடுமுரடாய் இருக்கிறது என்றா நினைக்கிறீர்கள்?. அதற்கென்ன செய்வது? தமிழ் முனிவரைத் தேடிக்கொண்டு பொதிகைமலைக் காட்டுக்குள் போகும் போது பாதை கரடு முரடாகத்தானே இருக்கும்.? 'அவ்வியையு' அகத்தியரைப் பற்றிப் பேசும் தமிழ் நடையிலும் தோன்ற வேண்டாமா? தவிரவும் இது ஆராய்ச்சி. 'உயர்ந்த' தமிழில் அமைய வேண்டாமா? என்ன மலைக்கிறீர்கள்! ஆராய்ச்சிதான். இடுப்பும் , 'இரும்பும்' இகர முதலாய், புகர*

இறுதியாய் அமைந்திருத்தலின் இரும்புக்கும் இடுப்புக்கும் தொடர்பு என்பது போதரவில்லையா?

இப்படியும் புத்தகங்கள் வெளிவருகின்றன. இருந்தாலும் எனக்கு மட்டும் புத்தகங்களைப் படிக்காமல் இருக்க முடியவில்லை. என்ன செய்வது?" என்ன அருமையான கிண்டல்!

தாம்பூல் சாதனை

சிறுவயதில் அவரொத்த சிறுவர்களெல்லாம் சேர்ந்து கடற்கரையில் யாருக்கும் தெரியாமல் வெற்றிலை போடுவது வழக்கம். அந்தப் பழக்கம்தான் பின்னாளில் அவரைத் தாம்பூலத்திற்கு அடிமையாக்கி இருந்தது.

." அந்தக் காலத்தில் மாணவர்கள் அகற்ற வேண்டிய பஞ்சமா பாதகங்களில் ஒன்றாக வெற்றிலை போடுவது கருதப்பட்டது . எங்கள் ஆசிரியர்களுள் மிகவும் இரைந்து பேசுபவரும் மிகவும் ஆங்கில இலக்கணம் தெரிந்தவரும் குள்ளப்புலி என்று எங்களால் நாம கரணம் சூட்டபெற்றவருமான எஸ் வி என் சித்தாந்தம் செய்த சாதனை, பஞ்சமத்தின் முதல் பிரகரணம்,"வெற்றிலை போடக்கூடாது" என்பதே.

ஆகவே வெற்றிலை போடுவதில் எங்களில் சிலருக்கு எல்லையற்ற மோகம் ஏற்பட்டது. கடற்கரைக்குச் சென்று அங்கே மரக்கட்டை மலைகளுக்கு இடையிடையே இருந்த சிறு பள்ளத்தாக்குகளில் உட்கார்ந்து ஏதோ பிரமாதமான சதியாலோசனை செய்கின்ற பாவனையுடன் வாடிய வெற்றிலை , சொத்தைப் பாக்கு, உலர்ந்த சுண்ணாம்பு-இவற்றை ஒன்றாக வாயிலே குதப்பிக்கொண்டு , உலகத்தையே வென்றுவிட்ட இறுமாப்புடன் வானத்தையும், மேற்கே மாலை வெயிலில் மின்னிய மாதாகோயில் கோபுரச் சிலுவையையும் பார்த்துத் தலையாட்டிக்கொண்டு இருந்தால் காலம் ஓடாமல் நின்றுவிடாதா?

ஒருநாள் இந்த அமர நிலையில் நாங்கள் இருந்த போது, மாதா கோயில் கோபுரச் சிலுவையையும் மறைத்துக்கொண்டு மரக்கட்டைச் சரிவிலே ஒரு மனித உருவம் தோன்றியது. யாரோ வருகிறார்கள் என்று தணிந்த குரலில்- அது என்னுடைய குரலாகவே இல்லை, பயத்தால் இறுகிவிட்டது- நான் கூவினேன்.

*"நம்முடைய தமிழ் ஐயாவாடா?" என்றான் எங்கள் கோஷ்டித் தலைவன். வந்தவர் தமிழ் ஐயாவே. அவருடைய கம்பீரமான தோற்றமும் தமிழ்ப்பாட்டுக்களை அவர் பாடும்போது கனிந்த இனிமையும், அவரது அன்பும் எங்கள் எல்லோரையும் அவருக்கு அடிமையாக்கி வைத்திருந்தன. எங்கள் தமிழய்யாவை உங்களுக்குத் தெரியாதே, ஒருவேளை கேள்விப்பட்டிருக்கலாம். நாகை "நீலலோசனி' பத்திராதிபர்., சதாசிவம் பிள்ளையவர்களே எங்கள் தமிழய்யா. எனக்கு வேறொரு தமிழாசிரியரும் இருந்தார்கள். அவர் திருவாரூர் 'இலக்கணவிளக்க'க் குடும்பத்தைச் சேர்ந்தவர். அவரிடம்.. நான் .. ஆனால் இதெல்லாமெதற்கு?"*

**சுட்டுப்போட்டாலும் தமிழ் வராது**

'இதெல்லாமெதற்கு?" என்று அவர் மரியாதை கருதி சொல்லாமல் விட்டாலும் அதிலும் ஒரு சுவாரஸ்யமான கதை இருக்கிறது. அ. சீ. ரா வின் தந்தை தனது பையன் தமிழ்கற்க வேண்டும் என்பதற்காக ஒரு தமிழ் அறிஞரிடம் தமிழ் கற்க ஏற்பாடு செய்தார். அ.சீ.ராவின் மனம் ஆங்கிலத்தில் ஈடுபாடு கொண்டிருந்ததாலும், சதாசிவம் பிள்ளையைப் போலல்லாது அவரது ஆசிரியர் சற்றுக் கடுமையாக இருந்ததாலும் தமிழ் கற்பதில் அவ்வளவாக அக்கறை காட்டவில்லை. எனவே ஒருநாள் அவரது ஆசிரியர் அவரைப் பார்த்து,

"பாப்பாரப் பிள்ளை நீ, உனக்குத் தமிழ் சுட்டுப்போட்டாலும் வராது" என்று சொன்னார். அதைக் கேட்டு அ. சீ.ரா அழுதுவிட்டார். தமிழ் சுட்டுப்போட்டாலும் வராது என்று சொன்ன ஆசிரியர் வியக்குமாறு தமிழ் கற்றே ஆகவேண்டும் என்று தீர்மானித்து முயன்று தானே தமிழ் கற்றார். பல ஆண்டுகளுக்குப் பிறகு ஒருநாள் அ.சீ.ரா வின் சொற்பொழிவைக் கேட்ட ஒரு பெரியவர் அவரிடம் வந்து அவரை வெகுவாகப் பாராட்டினார்.

அவரைப் பார்த்தவுடன் அவர் யாரென்பது புரிந்து போய்விட்டது.

அவரை வணங்கி "ஐயா இது தாங்கள் போட்ட பிச்சை" என்றார் அ. சீ. ரா. அவருக்கு விளங்கவில்லை. ஆச்சர்யத்தோடு பார்த்தார்.

" சுட்டுப்போட்டாலும் தமிழ் உனக்கு வராது என்று அன்று தாங்கள் கூறியதால்தான் ஆர்வத்தோடு தமிழ் கற்றேன். இன்று தங்களுடைய பாராட்டையும் பெற்றேன்" என்றார் அ.சீ.ரா.

**பாம்பு பிடிக்கப்போன கதை**

நாகப்பட்டணத்தில் அவர் இருந்தபோது மற்றச் சிறுவர்களுடன் சேர்ந்து பாம்பு பிடிக்கப் போவதுண்டு. பாம்பு பிடிக்கத் தேவை அரளிப்பூக்கள், பூவரசு இலை மகுடி ஆகியன. அவர் பாம்பு பிடிக்கப் போன கதை மிகவும் சுவையானது.

*"நாகம் என்றால் 'பாம்பு' என்ற அளவுக்கு மொழிப்புலமை எனக்குக் கிட்டிய அந்த நாளில் அந்தக் கிருத யுகம் இனி திரும்பப்போகிறதா?- நானும் அரளிப் பூக்களை எடுத்துக்கொண்டு , பாம்பு பிடிப்பதற்காக உப்பனாற்றங்கரையில் அலைந்தது எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. நல்ல வெயில். ஆகாச வெளியில் மந்தை மந்தையாய் வெண்மேகங்கள். வழியில் பூவரச மரங்களைப் பார்த்ததும் , பாம்பு பிடிப்பதற்கு மகுடி வேண்டும் என்பதும் , பாம்பைப் பிடித்தவுடன் அதனோடு ஆடுவதற்குத் துணியால் மறைபடாத முழங்கால் வேண்டுமென்பதும் எனக்குப் பளிச்செனத் தோன்றின. வேட்டியை மடக்கிக் கட்டிக்கொண்டு முழங்காலைத் தயாரித்துக் கொண்டேன். பிறகு மகுடி ஒன்று நிருமிக்க எண்ணிப் பூவரச மரத்தின்மேல் ஏறினேன். " ஏ, விழுந்திறப் போறே! " என்று சண்முக சுந்தரம் எச்சரித்தான். விழுவதாக எனக்கு உத்தேசமில்லை. மேலே வளைந்து சென்ற கிளையொன்றை இறுகப் பற்றிக்கொண்டு ,"உனக்கு என்னடா தெரியும்? மகுடி வேண்டாமா, மகுடி. முற்றிய பூவரச இலையாப் பார்த்து ஒரு மகுடி பண்ணி....." என்றேன்*

*அப்பொதுதான் அந்த முசுக்கட்டைப் பூச்சி என்கையில் ஏறியது. "ஐயோ, பாம்பு, !" என்று அலறிக்கொண்டு கீழே விழுந்தேன். "எங்கேடா?" என்று கூக்குரலிட்டுக்கொண்டு , எங்கே இருந்தாலும் தேடிப் பிடித்துக்கொண்டு வருபவன் போல். ஒரே ஓட்டமாய் வட்டமிட்டு ஓடி மறைந்துவிட்டான் சண்முகசுந்தரம்.. என்னுடன் அவன் வந்ததற்கு அடையாளமாய் நாலைந்து தங்க அரளிப்பூக்கள் கீழே கிடந்தன. முழங்காலைத் தடவிக் கொண்டே அவற்றைப் பார்த்தேன்.*

*"பாம்பு பிடித்தால் இன்றைக்கு முழங்காலை ஆட்ட முடியாதே, என்ன செய்வாய்?" என்று வதங்கிய தங்க அரளிகள் பேசின. இதைக் கேட்ட பூவரச மரம் கிழட்டுச் சிரிப்புச் சிரித்தது. முசுக்கட்டைச் சரம் காற்றில் ஊசலாடியது.*

*எனக்குச் சொல்ல முடியாத வேதனை. முழங்காலில் அப்படி ஒன்றும் பிரமாதமாக அடிபட்டுவிடவில்லை. கொஞ்சம் சிராய்த்திருந்தது. இரத்தம் வரப் பார்த்தது. ஆனால் வீட்டிற்குத் தெரிந்துவிட்டால்? மடக்கிக் கட்டிய வேட்டியைத் தளர்த்தி முழங்காலை மறைத்துக் கொண்டேன். " எல்லாம் இந்தச் சண்முக சுந்தரந்தான் காரணம். வரட்டும் சொல்லுகிறேன் என்று முணுமுணுத்துக் கொண்டு, கீழே கிடந்த தங்க அரளிப் பூக்களை ஆத்திரத்துடன் பிய்த்து எறிந்தேன். எனக்கு அழுகை வந்தது. மகுடி இல்லை. முழங்காலோ வீங்கிவிட்டது. பாம்பாவது ஏதாவது கண்ணில் பட்டதா ? அதுவும் இல்லை."*

சிறுவயதிலேயே இயற்கைக் காட்சிகள் அ.சீ.ரா வை வெகுவாகக் கவர்ந்திருக்கின்றன. அந்தச் சிறுவனுள்ளே கற்பனை கொடிகட்டிப் பறந்திருக்கிறது .ஆம் அந்தக் கற்பனையால் நீண்டு படுத்துக்கிடந்த உப்பனாறு அந்தப் பையனுக்கு எப்படித் தெரிகிறது பாருங்கள்!

*"கலங்கிய கண்களுடன் பரக்கப் பரக்க விழித்து நின்ற என் முன் அப்போதுதான் நீண்டு துவண்டு வெளியில் மின்னிய பாம்பு ஒன்று பிரசன்னமாயிற்று. அடேயப்பா, எவ்வளவு நீளம்! கண்ணுக்கு எட்டிய தூரம் வரையில் நீண்டு வளைந்தது அந்தப் பாம்பு. அந்தப் புறம் ரயில்வேப் பாலமும் அதன் கண்கள் வழியே தெரிந்த கோரைக் காடும், இடையே வளைந்து நெளிந்தது பாம்பு. அதன் முதுகின் மேலே உட்கார்ந்து கொண்டு பிடாரன் ஒருவன் ஒய்யாரமாக முழங்கால் ஆட்டினான். என் துக்கமெல்லாம் மாயமாய் மறைந்தது. ஆச்சரிய மிகுதியில் , சண்முக சுந்தரத்திடம் இருந்த கசப்பையும் மறந்து "அடே சம்மு, பாம்பைப் பாரடா"* என்று கூவினேன்

ஆம். உப்பனாற்றுக்குக் கரை உயரமாய் இல்லை. நான் நின்றுகொண்டிருந்த இடத்திலிருந்து உப்புப் பூத்த கரிசல் தரை சரிந்து ஆற்று வெள்ளச் சுருளின் அடியிலே மறைந்தது.

வெயிலில் மின்னிச் சிற்றலை மோதப் புரண்டு சென்ற உப்பனாற்று வெள்ளத்தின் வளைவுதான் என்கண்ணிற்குப் பிரமாண்டமான பாம்பாகிவிட்டது. பழுதையைப் பாம்பாக நினைப்பது, பாம்பைப் பழுதையாக நினைப்பது, பழுதையும் பாம்பும் இல்லாத நிலையில் ஏதோ ஒன்று இருப்பதாக மலைவது, இவற்றைப் பற்றியெல்லாம் தத்துவ விசாரணை செய்து தடுமாறும் மனித அறிவு பேசியிருக்கிறது. இப்போது எனக்கு அதொன்றும் விளங்குவதில்லை. ஆனால் அந்தக் காலத்தில் ஆற்றை அரவமாக எண்ணி அத்வைத சாதனையின் முதற்படியை எப்படியோ தொட்டுவிட்டேன்."(அ.சீ.ரா எழுத்துக்கள் தொகுதி4-பக்கம் 194)

**ஸஹஸ்ரநாமம்**

அந்தக் காலத்தில் நாகப்பட்டினத்தில் தண்ணீர்ப் பஞ்சம் அதிகம் இருந்திருக்கும்போல் தெரிகிறது. முனிசிபாலிட்டி குழாயடியில் அடிக்கடி சண்டை நடக்கும். அந்தக்காட்சியை சிறுவன் இராகவன் அடிக்கடி பார்க்க நேர்ந்தது. அது அவனது மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டது.

அந்தக் காட்சியை அவர் படம் பிடிக்கும் அழகே தனி.

சொற்கள்தாம் எப்படிக் குதிபோட்டு வருகின்றன பாருங்கள்

*"எத்தனை விதமான குடங்கள்! சிறிய பித்தளைக் குடங்கள், நீண்ட கழுத்தை நெளித்துக் கொண்டு பச்சை படர்ந்த உடலை வெயிலில் உலர்த்தும் தாமிரக் குடங்கள், தாய் மடியிலே கிடக்கும் குழந்தையைப் போல் சாந்தியோடு தெருப்புழுதியில் தூங்கும் மண்குடங்கள், . இவைதவிர செம்புகள், தவலைகள், அண்டாக்கள், காதைச் சிலிர்த்துக்கொண்டு நிற்கும் கங்காளங்கள், "*

தண்ணீர் பிடிக்கும் பெண்களிடையே நடக்கும் குழாயடிச் சண்டை எப்படி?

*" குடங்கள் குழாயருகிலே கணீர் , டணார் என்று மோதிக்கொள்ளும். ஒவ்வொரு பெண் தெய்வத்தினுடைய ஸஹஸ்ரநாமங்களையும் மற்றப் பெண்தெய்வங்கள் உச்சாடனம் செய்வார்கள்; அவள் முகத்தின் கோணல், அவள் கணவன் வம்சாவளி, அவளுடைய புடவைக் கிழிசல் , அவள் குஜிலிப்*

*பொட்டு வைத்துக் கொள்வது, .. இம்மாதிரியான விஷயங்கள் குழாய் அருகிலே அலசப்படும்."*

**குரோட்டன் பிரமாண்டங்கள்**

சிறுவன் இராகவனைக் கவர்ந்த மற்றொன்று நாகப்பட்டினத்தில் நடந்த தொழிலாளர் கூட்டங்கள்



*"ஸ்டேஷனுக்கும் அதையடுத்த போலீஸ் ஸ்டேஷன் சிகப்புக் கட்டிடத்திற்கும் இடையே உள்ள சிறுவெளியில் சாலை ஆல மரங்களுக்கும் பக்கத்திலிருந்த பங்களாக் குரோட்டன் மரங்களுக்கும் (ஆம், குரோட்டன் மரங்கள், இரண்டு பெரிய மஞ்சள் குரோடன் பிரமாண்டங்கள் என் நினைவை விட்டு அகலவில்லை.) மத்தியில் பெரிய கூட்டமொன்று, மேஜை, நாற்காலி தலைவர்கள், தீர்மானங்கள், வந்தனோபசாரங்கள், கூச்சல்கள், காந்த விளக்குகள், அவற்றை அணிவகுத்துப் பாதுகாக்கும் கொசுக்கள், இத்தனை வைபவங்களோடு நடைபெறும் தொழிலாளர் உரிமை , தனி ஒரு மனிதனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழிப்பது, தொழிலாளியினுடைய மரத்துப்போன இரத்தம் படிந்த கையே தொண்டைமானுடைய கிரீடத்தைத் தாங்கி நிற்பது, தெய்வப் புலமைத் திருவள்ளுவர்கூட இதைப் பற்றித் திருவாய் மலர்ந்திருப்பது- இவையெல்லாம் அப்போதே வந்துவிட்டன. வர்க்கப்போர், சம உரிமை, பொது உடைமை, சிவப்புக் கொடி, நீண்ட ஜிப்பா..... இவை ஜனனமாகவில்லை".*

**இராவணன் மீசை**

இராவணன் மீசை பார்த்திருக்கிறீர்களா.? அது ஒருவகையான புல். எடுத்துவிட்டால் காற்றில் பறந்து செல்லும். அதனோடு போட்டி போட்டுக்கொண்டு சிறுவர்கள் ஓடுவதுண்டு. அதைக் கடந்து முதலில் செல்பவர் வெல்பவராகக் கருதப்படுவார். சிறுவன் இராகவன் இத்தகைய

ஒட்டப்பந்தயங்களில் கலந்து கொள்வதுண்டு. சில சமயங்களில் காற்று வேகமாக அடிக்கும் போது இராவணன் மீசையோடு போட்டி போட முடியாது. அப்பொழுது அது எவ்வளவு தூரம் செல்கிறது என்பதைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பார்கள். சிலசமயங்களில் அது எந்தப் பக்கம் சென்று மறையும் என்று போட்டி வைத்துக்கொள்வது முண்டு. இராகவன் இராவணனோடு போட்டி போட்டது சரிதானே!

### கலையாகும் அலைகடல்

நாகப்பட்டினக் கடற்கரையை ஒட்டி நம்பியான் குப்பம் என்ற நெய்தல் நிலக்குடிசைப் பகுதி இருந்தது. அங்கே அவனுக்கு முத்துசாமி என்று ஒரு நண்பன் இருந்தான். இருவரும் கடலின் நிறத்தைப் பற்றி அதிகம் பேசுவதுண்டு. அவனது குடும்பத்தில் இருவரைப் பலிகொண்ட கடலைப் பத்திப் பேசும் போதுகூட மிகுந்த பெருமையுடன் "பொல்லாப் பயலுக!" என்பான். அவனைப் பொறுத்த மட்டில் கடல் எப்போதும் நீலந்தான். அன்று முத்துசாமியோடு கடலை ரசித்த காட்சியைப் பற்றி அ.சீ.ரா எழுதியிருப்பதைப் படிக்கும் போது பாரதி அந்திப்பொழுதை வர்ணித்திருப்பதைப் படிக்கும் போது பெறும் மகிழ்ச்சி வருகிறது. அந்த வருணனையே ஒரு இலக்கியம்

*""கடல் இன்று நீல-நிறமாக இல்லை. பச்சையும் பழுப்பும் கலந்த ஒரு அரைவட்டம். அதன் நடுவே சாம்பலும் வெண்மையும் மாறி மாறி நுரையாகக் கவிந்தன. இந்த வட்டத்தைச் சுற்றி ஓர் ஊதா வளையம். அதற்கப்பால் இன்ன வர்ணம் என்று சொல்ல முடியாத ஒரு கலவை. அதன் பின்புறம் தொடு வானத்தின் பூங்காரம். நாலைந்து கட்டுமரங்கள் பச்சை வெளியில் மிதந்தன. ஊதா வளையத்தைக் கடந்து சிவப்புத் தொந்தியை மெல்ல அசைத்துப் படகொன்று சென்றது. முதுகொடிந்த ஒட்டகம் போல் , ஒரு புகைக் கப்பல் வான வளைவைத் தன் உடைந்த பல்லால் கவ்வி நின்றது."*

முச்சாமியுடன் நின்று கொண்டு அந்த நாகைக் கடலைப் பலவாறாக ரசித்த அந்தச் சிறுவயது அனுபவம்தான் பின்னர் கடலைப் பலவகை நாய்களாகக் கண்டு கவிதை பாட வைத்தது.



# 5. குருவும் சீடனும்

இராகவனுக்குப் பறவைகள் என்றால் அதிகம் பிடிக்கும். குழந்தையாயிருக்கும் போதே அவனுக்கு வேடிக்கைப் பொருள் பறவைகள்தாம். தத்திச் செல்லும் சிட்டுக்குருவிகள், கழுத்தைச் சாய்த்துக் கரையும் காகம், கொக்கரக்கோ என்று கூவும் சேவல் எல்லாமே அவனுக்கு விளையாட்டுத் தோழர்கள். வாசலில் தானியங்கள் காயவைத்திருப்பார்கள். அவற்றைத் தின்ன வரும் பறவைகள் அவனை ஈர்க்கும். அவை தத்தித் தத்திச் செல்லும் அழகும் சிறு மூக்கால் டொக்டொக் என்று தானியத்தைக் கொத்தித் தின்னும் அழகும் அவனைக் கவர்ந்தன. அவற்றைப் பார்த்துக் கொண்டே கைகொட்டிச் சிரிப்பான். அம்மாவுக்குத் தெரியும், அந்த நேரம்தான் அவனுக்கு உணவூட்டச் சரியான நேரமென்று . கொடுப்பதை உடனே சாப்பிட்டுவிடுவான். ஆனால் அதில் கொஞ்சம் குருவிகளுக்கும் போட வேண்டும். அவ்வளவு அழகாகத் தானியங்களைத் தின்னும் குருவிகளை ஏன் விரட்டுகிறார்கள் என்று பெரியவர்களிடம் அவனுக்குக் கோபம் வரும். அழுது ஆர்ப்பாட்டம் செய்து விடுவான்.பறவைகளைக் கண்டு வியந்த அழகுணர்ச்சிதான் பின்னாளில் பறவைகளை அதிகமாகப் பாடவைத்தது. ஏன், அ.சீ ராவுக்கு சாகித்ய அகாதமிப் பரிசு பெற்றுத் தந்த நூலுக்குப் பெயரே "வெள்ளைப் பறவை"

பறவைகள் மட்டுமல்ல, மரங்கள், செடிகள், கொடிகள் வானம் கடல் எல்லாம் அந்தச் சிறுவனைக் கட்டிப்போட்டன.

**இயற்கை ரசனை**

இராகவனுக்கு நான்கு வயதிருக்கும். தஞ்சாவூர் மாவட்டத்தில் பெரிய புயலடித்து மரங்கள் ஒடிந்து விழுந்தன. கனத்த மழை. தெருவெல்லாம் வெள்ளக் காடு. தான் தினமும் விளையாடும் வீட்டு வாசலில் தண்ணீர் பெருக்கெடுத்து ஓடுவதை இராகவன் பார்த்தான். ஊரின் மத்தியில் இருந்த குளத்தில் தெருத்தண்ணீரெல்லாம் ஓடி விழுந்தது. ஆர்வத்தோடு தெருவெள்ளத்தைக் குழந்தை பார்த்துக்கொண்டிருப்பதைக் கவனித்தாள் வேலைக்காரி. திண்ணையின் விளிம்பு வரை சென்று மழை நீரைக் கையில் பிடித்தான். அவனது மகிழ்ச்சி கரை

கடந்தது. தெருவில் இறங்க முயன்றான். குளத்தில் பெருஞ்சத்தத்தோடு விழும் தண்ணீரைப் பார்த்தால் குழந்தை மகிழும் என்ற நல்லெண்ணத்தில், சற்று மழை விட்டதும், குழந்தையைத் தூக்கிக்கொண்டு குளத்தின் அருகில் சென்றாள். நீர் கொட்டுவதைக் கைகொட்டி ரசித்தான். அதற்குள் சிறுவனைக் காணவில்லை என்று பதறி அவனது மாமாவும் தாயும் அவனைத் தேடிக்கொண்டு வந்துவிட்டார்கள். அங்கே குழந்தை கைகொட்டி வெள்ளத்தை ரசிப்பதைக் கண்டு அவர்களது கோபம் ஓரளவு தணிந்தது.

### குறும்புச் சிறுவன்

பையனுக்கு ஐந்து வயது. கண்டியூரிலிருந்த பெருமாள் கோவிலுக்கு உறவினர்களோடு சென்றான். சக்கரத்தாழ்வார் சன்னதியில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். பையன் அங்கிருப்பது தெரியாமல் மற்றவர்கள் வெளியே வந்துவிட்டார்கள்.. கிராமத்துக் கோவில்கள் எப்படி இருக்கும் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதானே! ஒவ்வொரு சன்னதியிலும் ஒரு எண்ணெய் விளக்கு எரிந்து கொண்டிருக்கும். அதன் சன்ன ஒளியில்தான் சாமியைப் பார்க்க முடியும். கோவிலின் வாசற்கதவு திறந்திருந்தாலும் கர்ப்பக் கிரஹம் விளக்கணைந்தால் கறுப்புக் கிரகமாக மாறிவிடும். விளையாடிக்கொண்டிருந்த பையன் சன்னதியிலிருந்த எண்ணை விளக்கை ஊதி அணைத்தான். ஒரே இருட்டு. அவ்வளவுதான். அன்று அவன் போட்ட சத்தம் ஆலயத்தின் வாசல்வரை கேட்டது. கோவில் ஊழியர் ஒருவர் சத்தம் வந்த திசையை நோக்கி ஓடிப் பையனைத் தூக்கிக் கொண்டுவந்தார்.

### தனிக் கவனம்

நாகப்பட்டினத்தில் படித்துக்கொண்டே அங்கே வேலையும் பார்த்தார் அ.சீ.ரா. பள்ளிப் படிப்பு முடிந்ததும் கல்லூரிப் படிப்புக்கு நாகைப்பட்டினத்தில் வசதி இல்லாத காரணத்தால் அவரைத் திருச்சியிலுள்ள செயின்ட் ஜோசெஃப் கல்லூரியில் சேர்த்தார்கள். அங்கே ரசாயனப் பட்டப்படிப்புப் படித்தார். அவருக்கு இருந்த ஆங்கில ஈடுபாட்டை அறிந்த பேராசிரியர் ஃபாதெர் லீ என்பவர் அ.சீ.ரா விடம் தனிக்கவனம் செலுத்தினார்.

அவர் அங்கே பட்டப் படிப்பு முடித்ததும் அவரை ஆங்கில முதுகலையில் படிக்க வைத்தார் லீ. அவர் ஸ்ரீரங்கம் அருகே இருந்த அம்மா மண்டபத்திலிருந்து திருச்சிக்குச் சென்று படித்தார்.

அங்கே படித்துக்கொண்டிருந்த பொழுது ஒருசமயம் அன்று எந்தப் பாடத்தில் தேர்வோ அதை மறந்துவிட்டு வேறொரு பாடத்தில் தேர்வு என்று நினைத்துக்கொண்டு அந்தப் பாடத்தைத் தயார் செய்துகொண்டு சென்றார். அ.சீ.ரா. அங்குப் போன பிறகுதான் தன் தவறு அவருக்குப் புரிந்தது. ஆனால் அ. சீ. ரா பதறவில்லை. தேர்வை எழுதினார்.. அந்தத் தேர்வில் முதல் மாணவனாகவும் வெற்றி பெற்றார்.

இன்னொரு சமயம் அம்மாமண்டபத்திலிருந்து கல்லூரிக்கு வரும்போது வழியில் போக்குவரத்துப் பிரச்சினையால் சரியான நேரத்துக்குச் செல்ல இயலவில்லை தேர்வுக்கு அரைமணி நேரத்துக்குமேல் தாமதமாக வந்தால் அனுமதிக்க மாட்டார்கள். அ. சீ. ரா வரவில்லை என்பதை அறிந்த ஃபாதர் லீ ஒரு பையனை அனுப்பி அ.சீ.ரா வருகிறாரா என்று பார்த்து வரச் சொன்னார். அ.சீ.ரா வேக வேகமாக வருவதைப் பார்த்தார் லீ. இன்னும் ஒரு நிமிடம்தான் பாக்கியிருந்தது. எனவே அவரை வழியிலேயே மடக்கி அங்கேயே ஒரு நாற்காலி மேஜையைப் போடச் சொல்லி தேர்வை எழுதச் சொன்னாராம். அந்தத் தேர்வை மற்ற மாணவர்கள் எழுதி முடிக்கு முன்னமே எழுதி முடித்து விட்டுச் சென்றார் அ.சீ.ரா.

ஆங்கிலப் பாடத்தில் கடைசித் தேர்வு. மற்றப் பாடங்களைச் சரியாக எழுதவில்லை என்று தோன்றவே அ.சீ.ரா கடைசித் தேர்வை எழுத வரமாட்டேன் என்று ஒரு மாணவரிடம் சொல்லியிருக்கிறார். இதை அறிந்த பேராசிரியர் லீ ஆளை அவரது வீட்டுக்கு அனுப்பி அவரை இழுத்துவரச் செய்து தேர்வு எழுத வைத்தாராம். வேடிக்கை என்னவென்றால் அவர் எழுதிய எல்லாப் பாடங்களிலும் அவரே முதல் மாணவராகத தேறியிருந்தார்.

ஃபாதர் லீயுடன் நடந்துகொண்டே பல பாடங்களைக் கற்றாராம் அ.சீ.ரா.

ஒரு சமயம் லீ அவரைச் ஜனநாயகம் என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதச் சொல்லியிருக்கிறார். அவரும் எழுதினார். அதில் அவருக்குப் பிடித்த பகுதிகளை நீக்கச் சொன்னாராம். பிறகு நீக்கப்பட்டு எஞ்சியிருக்கும் பகுதியைப் படிக்கச் சொன்னாராம். அந்தப் பகுதியும் பொருள் பொதிந்ததாக இருந்தால்தான் அது நல்ல கட்டுரை என்றாராம் லீ. அப்படித் தாயன்போடு அவருக்கு ஆங்கில இலக்கியத்தைக் கற்றுக்கொடுத்தார் அந்தப் பேராசிரியர். அங்கேயே ஆங்கில ஆசிரியராகப் பணியில் சேர்ந்தார்.

### முதல் வகுப்பு

முதல் நாள் வகுப்பு. பல மாணவர்கள் அ.சீ.ராவை விட வயதில் மூத்தவர்கள். இன்னும் சிலர் அவரோடு படித்தவர்கள். எனவே அவர் பாடம் நடத்தும் பொழுது கலாட்டாப் பண்ணுவது என்று முடிவெடுத்திருந்தார்கள். அ.சீ.ரா வகுப்பில் நுழைந்ததும் சிறிது கசமுசாத் தொடங்கியது. அவர் புத்தகத்தைத் திறக்காமலேயே அன்றையப் பாடத்தை நடத்தத் தொடங்கினார். கசமுசா சற்றுக் குறைந்தது. அவர் தொடரத் தொடர மாணவர்கள் வியப்பில் ஆழ்ந்தார்கள். அதன் பிறகு அந்த மாணவர்கள் அவரது ரசிகர்களாக ஆகிவிட்டார்கள். அவரது வகுப்பை அவர்கள் தவறவிடுவதில்லை. சிறந்த ஆசிரியர் என்று பெயர் பெற்றார்.

### திருமணம்



அந்தச் சமயம் அவருக்குத் திருமணத்திற்கு ஏற்பாடு செய்தனர். அவரது தந்தையின் நண்பர் திரு. கிருஷ்ணசாமி ஐயங்கார் அம்மா வட்டத்தில் சர்க்கிள் இன்ஸ்பெக்டராக இருந்தார். எப்பொழும் குதிரையில் கம்பீரமாக வருவார். அவர் அண்ணாத்துரை அய்யங்காரைச் சந்தித்து " உங்கள் மூத்த பையன் இராகவனுக்கு என்னுடைய பெண்

இராஜத்தை விவாஹம் செய்துகொள்ளத் தேவரீர் திருவுளங்கொள்ளவேணும்" என்று சொன்னார். அண்ணாத்துரை அய்யங்கார் கலெக்டர் அலுவலக குமாஸ்தா. அவரோ சர்க்கிள் இன்ஸ்பெக்டர். எப்படி மறுப்பது? சம்மதம் தெரிவித்தார். அந்தக் காலத்தில் பையனிடம் சம்மதம் கேட்கும் வழக்கமில்லை. தந்தை சொல்வதைத் தனயன் கேட்டாக வேண்டும். அ.சீரா நல்ல உயரம். மணப்பெண்ணோ மிகவும் குள்ளம். அ.சீ.ரா நல்ல சிகப்பு. பெண் மாநிறம். எழுதப்படிக்கத் தெரியாது. எப்படிப்பொருந்தும்? இதையெல்லாம் அவருடைய தந்தை சிந்தித்துப் பார்க்கவில்லை. நல்ல கௌரவமான குடும்பம் என்னும் ஒரே தகுதிதான். அ.சீ.ரா வுக்கு அந்தத் திருமணத்தில் சம்மதமில்லை. தந்தையிடம் தனது விருப்பமின்மையை எடுத்துச் சொன்னார். ஆனால் எடுபடவில்லை. மிகச் சிறப்பாக மாப்பிள்ளையின் விருப்பமின்றி அவரது திருமணம் நடந்தது.

அ.சீ.ரா. சிறந்த நீச்சல் வீரரர். காவிரி நதியில் ஒரு கரையிலிருந்து மறுகரை வரை நீச்சல் அடிப்பாரம். அங்கே பல நீச்சல் போட்டிகளிலும் வென்றிருக்கிறார்.

**நெல்லையை நோக்கி**

திருச்சியில் இருந்தால் இராகவனின் தகுதிக்கேற்ற வாய்ப்புக் கிடைக்காதென்பதனால் ஃபாதர் லீ பாளையங்கோட்டையில் உள்ள செயிண்ட் சேவியர்ஸ் கல்லூரிக்கு ஆங்கில ஆசிரியராக அனுப்பினார். இது நடந்தது 1931ல். அப்போது அவருக்கு வயது 26. குறுகிய காலத்திலேயே மிகச் சிறந்த புகழ் பெற்றார். மற்ற வகுப்பு மாணவர்கள் அவர் வகுப்புக்கு வந்து அமர்ந்து பாடம் கேட்பார்களாம். பின்னாளில் உயர்நீதி மன்ற நீதிபதியாய் இருந்த மஹாராஜன் அவர்கள் அங்கே அவரிடம் பயின்றவர்.

அங்கே அ.சீ.ராவிடம் அவர் படித்ததைப் பற்றி என்ன சொல்கிறார் பார்ப்போமா?

*"1931 ல் பாளயங்கோட்டை அர்ச் சவேரியார் கல்லூரிக்கு அவர் ஆங்கிலப் பேராசிரியராக வந்தபோது அவருடைய மாணவனாக இருந்தேன். குயிலினும் இனிய குரலிலே சார்லஸ்*

*லேம்ப்பைப்((CHARLES LAMB) பற்றி அவர் பேசிய முதல் பேச்சே என்னை அவருக்கு அடிமையாக்கிவிட்டது. பரந்து விரிந்த அவரது புலமையையும் அறிவுத் தெளிவையும் அசாதரணமான பேச்சாற்றலையும் நினைக்க நினக்கப் பெருமிதம் அடைகிறேன் "*

வழிகாட்டி

அந்தக் கல்லூரியில் அவரிடம் படித்தவர் கல்கியின் வரலாற்றை"பொன்னியின் புதல்வர் ' என்ற தலைப்பில் புத்தகமாக எழுதிய சுந்தா அவர்கள். அவர் டெல்லியில் பணியாற்றிய போது , நேருஜி தலைமை தாங்கிய மாநாட்டு நிகழ்ச்சியைப் பற்றி விரிவாக எழுதியிருக்கிறார். அவர் அர்ச் சவேரியர் கல்லூரியில் படிக்கும் போது அ. சீ.ரா காட்டிய வழிதான் அவரது வாழ்க்கைப் பாதையையே மாற்றியது. அதைப்பற்றி அவர் எழுதுகிறார்.

*"பாளையங்கோட்டை அர்ச் சவேரியார் கல்லூரியில் அ.சீ.ரா அவர்கள் . இளம் ஆங்கில ஆசிரியராய்ச் சேர்ந்த அதே ஆண்டில் புது மாணவனாய்ச் சேர்ந்தேன். ஆங்கில இலக்கியத்தின் அருமை பெருமைகளை விளக்கி அவர் நிகழ்த்திய உரைகளை ஆவலுடன் பருகினேன். வாய்ச்சொல்லாலும் எழுத்தாலும் கருத்தை நன்றாக வெளியிடுவதற்கு, வாய்ப்பானதொரு மொழி ஆங்கிலம் என்ற வாக்கியத்தை அவர் அடிக்கடி சொல்லுவார். ஆங்கிலத்தில் எழுதவேண்டும் என்று ஏற்கனவே நான் சிறிதளவு கொண்டிருந்த ஆசை, அவருடைய உரைகளின் மூலம் பெரிதாக வளர்ந்தது.*

*முதன் முதலாக , கல்லூரி விழா ஒன்றை ஒட்டிச் 'சானட்' ' ஒன்றை எழுதி அவரிடம் காட்டினேன். அவர் அதைத் திருத்திக்கொடுத்து அதை அச்சிட்டு எல்லா மாணவர்களுக்கும் கொடுக்க அனுமதியும் அளித்தார். ஆங்கிலக் கவிதையையோ அவரையோ விடுவதாக இல்லை. நான் எதையெதையோ பற்றி ஏகப்பட்ட கவிதைகளை எழுதி அவற்றை எல்லாம் ஒரே கற்றையாக அவரிடம் சுமத்தித் திணறவைத்தேன்.*

*அவற்றைப் பார்வையிட்ட ஆசிரியர் என் பைத்தியத்தைத் தெளியவைக்க முன்வந்தார். "எழுதுவதில் உனக்குள்ள ஆசையை நான் கெடுக்க விரும்பவில்லை. ஆனால், ஆங்கிலத்தில்*

*எழுதாதே எனக் கண்டிப்பாய் எச்சரிக்கை செய்கிறேன். எழுதத்தான் வேண்டுமென்றால், தமிழிலே எழுதேன்? "என்றார்.*

*ஆங்கில ஆசிரியர் தமிழிலே எழுதச் சொல்லுகிறாரே என்று எனக்கு ஆச்சரியமாயும் வருத்தமாயும் இருந்தது. அவற்றை ஒருவாறு மறைத்துக்கொண்டு, தமிழிலே எனக்கு எழுதவரும்போல் தோன்றவில்லை." என்று சொன்னேன். அதற்கு அவர் கூறினார். "ஆங்கிலத்தில் எழுத வந்திருப்பதாய் நீ நினைத்துக் கொண்டிருப்பது தவறு. உன்னாலும் சரி, என்னாலும் சரி, ஆங்கிலத்தில் நல்ல கவிதைகள் எழுத முடியாது. நிச்சயமாய் உன்னால் தமிழில் எழுத முடியும். பாரதியாரை வழிகாட்டியாகக் கொண்டு, எளிய சந்தத்தில் எளிய பாடல்களை எழுதிப் பார். ஆங்கிலத்தில் நீ சுவைத்த நயங்களை அவற்றில் நீ பொதியலாம். குற்றமில்லை. ஆனால் ஆங்கிலத்தில் எழுதாதே!" என்றார். உண்மையிலேயே அன்று அவர் என் மனப்போக்கை மாற்றி என் இலக்கிய முயற்சியில் நல்லதொரு திருப்பத்தைத் தோற்றுவித்தார். அவருடைய புத்திமதியையும் இலக்கிய நல்லுரைகளையும் மனத்தில் கொண்டு தமிழிலேயே பாடல்கள் எழுதத் துவங்கினேன். ஆரம்ப காலத்திலேயே எனக்குச் சிறப்பான வெற்றி கிடைத்தது. "வாலிபர் கானம்" என்ற என்னுடைய பாடல் ஒன்றுக்குக் கலைமகள் தங்கப் பரிசு கிடைத்தது.".* சுந்தாவுக்கு அகில இந்திய வானொலியில் வேலை வாங்கிக் கொடுத்து அவரை வாழ்விலும் முன்னேற்றினார் அ.சீ.ரா.



## மும்மணிகள்

அர்ச் சவேரியர் கல்லூரியில் அவர் இரண்டாண்டுகள் மட்டுமே பணியாற்றினார். அவரது பேராற்றலையும் மாணவர்கள் அவரிடம் கொண்டிருந்த மதிப்பையும் மரியாதையையும் கேள்விப்பட்டு நெல்லையில் இயங்கிவந்த மதுரைத் திரவியம் தாயுமானவர் இந்துக் கல்லூரியில் வந்து பணியேற்கும்படி அழைப்பு விடுத்தனர். அந்தக் கல்லூரியில் அப்பொழுது மிகவும் புகழ்பெற்றிருந்த அலக்சாண்டர்

ஞானமுத்து என்பவர் கல்லூரி முதல்வர். கண்டிப்பு மிகுந்தவர். ஆங்கிலப் புலமை வாய்ந்தவர். அவரிடம் நெருங்கிப் பேசவே ஆசிரியரும் மாணவர்களும் அஞ்சுவராம். அவர் அ.சீ.ராவின் புலமையைக் கருதியும் பாடம் நடத்தும் திறமையைக் கண்டும் வியந்து அவரிடம் தனி அபிமானம் வைத்திருந்தார். அந்தக் கல்லூரியில் அப்பொழுது தமிழ்த்துறையில் பேராசிரியர் அருணாசலக் கவுண்டர் பணியாற்றிவந்தார். பேராசிரியர் முத்துசிவன், பேராசிரியர் அருணாசலக் கவுண்டர், பேராசிரியர் அ. சீ.ரா மூவரும் மும்மணிகளாகத் திகழ்ந்தனர். நெல்லைப் பகுதியில் நடக்கும் இலக்கியவிழாக்களில் பெரும்பாலும் இவர்களின் பங்கு உண்டு.

தமிழக அரசில் சபாநாயகராக இருந்த செல்லப்பாண்டியன் அவர்கள் 1934ம் ஆண்டு அவரிடம் ஆங்கிலம் பயின்றார். நீதியரசர் இரத்தினவேல் பாண்டியன் அவ்வயமம் இந்துக்கல்லூரி மாணவர்.அவரிடம் அங்குப் பயின்ற மாணவர் பலர் பின்னாளில் பெரும்புகழ் பெற்றார்கள்.

**நான் என்ன மனிதன்!**

இந்துக்கல்லூரியில் அப்பொழுது அவரிடம் பயின்ற ஆர். பி. எம் கனி என்பவர் தென்காசியில் வழக்குரைஞராகப் பெயர்பெற்றார். அவர் பல நூல்களையும் எழுதியிருக்கிறார்.

அவர் அ.சீ. ராவிடம் பயின்றதைப் பற்றிச் சொல்லுவது மிகச் சுவையானது. இதில் வேடிக்கை என்னவென்றால் அவரிடம் படித்த மாணவர்கள் ஒவ்வொருவரும் மற்ற எவரையும் விடத் தான்தான் அவரை அதிகம் நேசிப்பதாகவும் மதிப்பதாகவும் சொல்லுவர். ஜஸ்டிஸ் மகராஜன் எழுதிய கடிதம் ஒன்றில் வேறு எந்தக் கொம்பனும் அவரைவிட அ.சீ.ரா வை நேசித்துவிட முடியாது என்கிறார். திரு கனியோ "ஐயா அவர்களுடைய மாணவன் என்று சொல்லிக்கொள்வதில் பெருமைப்படும் பல்லாயிரக்கணக்கானவர்களுள் நானும் ஒருவன். ஆனால் ஐயா அவர்களிடம் அன்பு பாராட்டுவதில் நான் எவர்க்கும் சளைத்தவன் அல்லன். நான் 1946ல் நூல்கள் எழுதத் தொடங்கி இடையிடைவிட்டு இதுவரை சுமார் ஐம்பத்திரண்டுக்கு மேற்பட்ட சிறிய பெரிய நூல்களை ஆக்கியுள்ளேன்.

இத்தகைய ஆக்கம் தழைக்க நல்லாசி வழங்கிய ஐயா அவர்களிடம் அத்துணை அன்பு கொண்டிராவிட்டால் நான் என்ன மனிதன்!"

அவர்களுடைய மாணவர்கள் பலர் கல்லூரி வகுப்பில் மட்டும் அன்றி அவரது வீட்டிலும் இலக்கியம் கற்க வந்துவிடுவர்.அவரது வீடு எப்பொழுதும் இலக்கிய மாணவர்களால் நிறைந்திருக்கும்.

திரு கனி தொடர்ந்து சொல்கிறார்:" *இலக்கியம் படைக்கும் ஆற்றலை என்னில் ஊக்கிவிட்டவர்கள் ஐயா அவர்கள். பரந்த இதயத்தோடு யாவையும் அணுகும் பண்பை என்னில் வளர்த்தவர் ஐயா அவர்கள். ஐயா அவர்களிடம் நான் கல்லூரியில் கற்றது கைமண் அளவு என்றால் கல்லூரிக்கு வெளியில் கற்றது உலகளவு எனத்தகும். அவர்கள் வீட்டிலும் தாமிரபரணி ஆற்று மணலிலும் பூங்காவிலும், குற்றாலத்து அருவிக் கரையிலும் இன்னும் அவை போன்ற இடங்களிலும் அவர்கள் காலடியில் அமர்ந்து பெற்ற அறிவு அனுபவங்கள் எத்துணை எத்துணையோ அதிகம். பல்லாண்டு காலம் அமர்ந்து படிக்கவேண்டிய நூல்களை எல்லாம் சில நிமிடங்களில் நம்மனத்தில் ஏற்றிவிட்டுவிடும் ஐயா அவர்களுடைய திறனை ஓரளவு நன்கு பயன்படுத்திக் கொண்டுள்ளேன்."*

*இரசிகமணி டி.கே.சி அவர்களுக்குப் பொதுவாகப் பேராசிரியர்களைப் பற்றி அவ்வளவு நல்ல அபிப்பிராயம் கிடையாது. இளம் மாணவர்களின் இதயங்களைக் கெடுப்பவர்கள் பேராசிரியர்கள் என்று அவர் கருதினார். ஆனால் பேராசிரியர் அ.சீ.ராவிடம் அவருக்குத் தனி மதிப்பு உண்டு. இலக்கிய ஆராய்ச்சியில் இரண்டு பேருடைய அணுகுமுறைகளும் வெவ்வேறாக இருப்பினும் பேராசிரியரின் புலமையையும் பயிற்றுவிக்கும் திறனையும் டி.கே சி மதித்தார்.".*

**அப்படியானால் சரி**

ஒரு சுவையான நிகழ்ச்சியை திரு கனி சொல்கிறார்.:

*"நான் பி.ஏ வில் வெற்றி அடைந்த எக்களிப்போடு குற்றாலத்தில் இருந்த பொதிகை முனிவர் ரசிகமணி டி கே சி அவர்களைக் காணச் சென்றேன். ரசிகமணி அவர்கள் தங்களுக்கே உரிய புன்னகையுடன் "பி.ஏ பாஸ்*

*செய்துவிட்டாயா? பேஷ்!" என்றார்கள். "இனித்தான் நீ படிக்கவேண்டியதெல்லாம் ஆரம்பமாகப் போகிறது. இந்தப் பி.ஏவில் வெற்றி பெற்றுவிட்டாய். அத்துடன் அவற்றையெல்லாம் மறந்துவிட்டு உண்மையான படிப்பை இனித்தான் தொடங்கப் போகிறாய்" என்றார்கள்.*

*"அது சரி, ஆனால் நான் பேராசிரியர் சீனிவாசராகவன் அவர்களிடம் அவருடைய நேர்பார்வையில் வளர்ந்தவன்" என்றதும்,*

*" அப்படியா , அப்படியானால்நீ ஏற்கனவே படிக்க ஆரம்பித்துவிட்டவன்தான் " என்று திருப்தியோடு தலையாட்டினார்கள் ரசிகமணி.*

பேராசிரியர் அ.சீ.ரா மிகவும் அடக்கமானவர். ஆனால் அவருக்குக் கோபம் வந்துவிட்டால் எதிர்த்து யாரும் நிற்கமுடியாது. கோபம் அதிக நேரம் நிற்காது. நியாயத்துக்குப் புறம்பாக யாராவது பேசிவிட்டால் அ.சீ.ராவுக்குக் கோபம் வரும். அது தார்மீகக் கோபம். அது எப்படி வெளிப்படும் என்று சொல்ல முடியாது. சிலசமயங்களில் வெடித்துக் கிளம்பும். அல்லது ஊசி குத்துவதுபோல நையாண்டியாகவோ நாசூக்காகவோ வெளிப்படும்.

ம.தி.தா இந்துக்கல்லூரியின் முதல்வர் அலெக்சாண்டர் ஞானமுத்து கல்லூரியில் மாணவர்கள் மட்டுமின்றிப் பேராசிரியர்களே நடுநடுங்கும் கட்டுப்பாட்டை நிலை நிறுத்தியவர். இந்து கல்லூரி தொடர்ந்து நடைபெறுமா என்று ஒரு இக்கட்டு நேர்ந்த பொழுது அ.சீ. ரா தனக்கு வந்த ஊதிய உயர்வுப் பதவி அழைப்புகளையெல்லாம் உதறிவிட்டு இந்துகல்லூரியின் நலன் ஒன்றையே கருத்தில் கொண்டு சிறிதும் தன்னலமின்றித் தொடர்ந்து அங்கே பணியாற்றினார். அ.சீ.ரா அங்குப் பணியாற்றுகிறார் என்பதாலேயே அந்தக் கல்லூரிக்கு மாநிலத்தின் பல பாகங்களிலிருந்தும் மாணவர்கள் வந்து பயின்றனர். அந்தக் கல்லூரி முதல்வரையே ஒரு சமயம் அ.சீ.ரா எதிர்க்க நேர்ந்தது. அதை நேரடியாகக் கண்ட கனி சொல்கிறார்:

## தார்மிகக் கோபம்

*"நான் கல்லூரி மாணவர் மன்றச் செயலாளனாக இருந்த சமயம். ஐயா அவர்களுடைய 'நிழல்கள்" நாடகத்தை அவர்களுடைய வழிகாட்டுதலோடு மேடையேற்றினோம் திறந்த வெளி அரங்கம். சமாளிக்க முடியாத கூட்டம். நாங்கள் பல இடைஞ்சல்களிடையே கஷ்டப்பட்டு நாடகத்தை வெற்றிகரமாக நடத்திக்கொண்டிருந்தோம். இடையில் முதல்வர் திரு ஞானமுத்து அவர்களை அழைத்து இரண்டொரு வார்த்தைகள் பேசுமாறு கேட்டுக்கொண்டேன். அவர் சென்னை சென்றுவிட்டு அப்போதுதான் திரும்பியிருந்தார். அங்கே ஜப்பானியர் தாக்குவார்களோ என்ற யுத்த பயமும் பீதியும் நிலவிக்கொண்டிருந்த நேரம் அது. இங்கோ சமாளிக்க இயலாத கூட்டம். முதல்வர் நாடகம் நடத்திய எங்களைப் பாராட்டவில்லை.*

*" சென்னையில் யுத்தபயம். இங்கே நிம்மதியாக நாடகம் போடுகிறீர்கள்.."என்று சாடிச் சில நிமிடங்கள் பேசினார். நான் அவருக்கு மாலையைப் போட்டேன். அவர் ஒரு ஓரமாக அமர்ந்துகொண்டார். அடுத்து ஐயா அவர்களைப் பாராட்டி மாலை போடவேண்டிய கட்டம். சற்றுத் தொலைவில் மேடையில் என்னை அழைத்துப்போனார்.*

*" நான் இவருக்குப் பதில் தந்து பேசப் போகிறேன். எனக்கு மாலை போட்டுவிடாதே" என்றார்.*

*என்னால் தாங்க முடியவில்லை.*

*"ஐயா, உங்களுக்கு மாலை போடாமல் எப்படி இருக்க முடியும்?" என்றேன். ஐயா அவர்கள் கோபத்தோடு என்னை விழித்துப்பார்த்தார்கள். "அட இடியட், நான் சொன்னபடி கீழ்ப்படியப்போகிறாயா , இல்லையா?" என்றார். என்னுடைய பல ஆண்டுப் பழக்கத்தில் அவர்களுக்குக் கோபம் உண்டாகும் வகையில் எத்தனையோ தடவைகள் நடந்திருக்கிறேன். என் முட்டாள்தனமான செயல்களால் அவர்களுக்குக் கோபம் உண்டாகும் சூழ்நிலைகளை உருவாக்கியிருக்கிறேன். ஆனால் அப்பொழுதெல்லாம் தங்கள் புன்னகையாலும், உன்னதமான*

ஹாஸ்ய உணர்வாலுமே என்னைத் திணற அடித்த ஐயா அவர்கள் இவ்வாறு கோபம் கொப்பளிக்க நடந்துகொண்டது அந்த மேடையில்தான். "சரி ஐயா" என்றேன்

அடுத்த கணம் ஒலிபெருக்கிமுன் நின்றார்கள்.

" மதிப்பிற்குரிய பிரின்ஸிபால் அவர்கள் சென்னை நகரிலெலாம் யுத்த அபாயம், ஆனால் நெல்லை அதை விட்டு வெகு தூரத்தில் இருக்கிறது என்று சொன்னார்கள். யுத்தத்தைவிட்டு மட்டுமல்ல, கலை விஷயத்திலும் அது தூரமாய் வெகுவெகு தொலைவில் இருக்கிறது,": என்று ஆரம்பித்தார்கள். வார்த்தைகள் கனற்கங்குகளாகத் தெறித்தன. அதுவரை பிரின்ஸிபால் அவர்கள் பேசும் போதுகூடச் சற்றுக் கசமுச என்று இருந்த அந்தப் பெருங்கூட்டம் ஐயா அவர்கள் பேசிய பத்து நிமிடங்களும் ஸ்தம்பித்து விட்டது. பேச்சை முடித்து மைக்கின் அருகில் நின்ற அவர்களிடம் முதல்வர் வந்து ஐயாவின் கையைப் பிடித்து பலமாகக் குலுக்கி "Well done, Mr. Raghavan" என்றார் பாருங்கள்!."

அ. சீ. ராவுக்குக் கோபம் வந்த இன்னொரு நிகழ்ச்சியைப் பேராசிரியர் நாரணதுரைக்கண்ணன் அவர்கள் எழுதிய ஒரு கட்டுரையில் சொல்லியிருக்கிறார்.

"கோமள குணம் படைத்த இராகவனிடம் கோபம் கொப்பளித்துவரும் போது அவர் முகத்தையும் பேச்சையும் பார்க்கவேண்டுமே! என்னைப் போலவே அவருக்கும் அநியாயத்தையும் கொடுமையையும் கண்டால் பொல்லாத கோபம் வரும். 1946-ஆம் ஆண்டில் பாரதி விடுதலைக் கழகம் என்று ஓர் அமைப்பை நிறுவிப் பாரதி பாடல்களைப் பொதுவுடைமையாக்க நாங்கள் மும்முரமாக முயன்று கொண்டிருந்தோம். இந்நன்முயற்சிக்கு, அச்சமயம் சென்னையில் முதலமைச்சராயிருந்த ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் பேராதரவு தந்தார். எங்கள் வேண்டுகோளின் படி பாரதி பாடல்களை எல்லா மக்களும் பலவகையிலும் பயன்படுத்திக் கொண்டு எங்கும் பரவச் செய்வதற்கு ஏற்ற விதமாகச் சட்டம் பிறப்பிக்கவும் அவர் முன்வந்தார். அதற்குமுன் அரசாங்கச் சட்ட ஆலோசகரின் யோசனைப் படி பாரதியாரின் மனைவி மக்களிடம் ஒரு பத்திரத்தில் கையெழுத்து வாங்கிவர

நானும் பேராசிரியர் இராகவனும் , கலைஞர் தி.க சண்முகம், நண்பர் வல்லிக்கண்ணன் ஆகியவர்களுடன் திருநெல்வேலி சென்றோம். நண்பர் கணபதியை(மாறன்) அழைத்துக்கொண்டு போக நாங்கள் திருச்சியில் இறங்கிப் பின்னர் அன்றிரவே திருநெல்வேலிப் பயணத்தைத் தொடர்ந்தோம். ஆனால் எங்களுக்கு இரண்டாம் வகுப்பில் இடங்கிடைக்கவில்லை. சென்னையிலிருந்தே அதற்கான டிக்கெட்டை வாங்கியுள்ள எங்களுக்கு இடமுண்டுபண்ணிக் கொடுக்க வேண்டியது இரயில்வே அதிகாரிகளின் பொறுப்பாயிருந்தும் "இடமில்லையே, நாங்கள் என்ன செய்வது என்று கையை விரித்துவிட்டனர். எங்களது நியாயமான உரிமையை விட்டுக்கொடுக்கக் கூடாது என்று எண்ணிய இராகவன் இரயில்வே ட்ராஃபிக் சூப்பெரிண்டெண்டிடம் வாதாடலானார். அச்சமயம் அமைதியே உருவான அவர்பால் காணப்பட்ட சீற்றத்தையும் லாகவமாக ஆங்கிலத்தில் தர்க்க ரீதியாக வாதஞ்செய்த வாதத் திறமையையும் கண்டு அந்த இரயில்வே பெரிய அதிகாரி மட்டுமல்ல நாங்களும் பிரமித்துப் போனோம். இது போன்றே மற்றொரு நிகழ்ச்சி அடுத்த இரண்டாண்டுகளில் நடந்தது. எட்டையாபுரத்தில் பாரதி மண்டபத் திறப்புவிழா மிகக் கோலாகலமாக நடந்துகொண்டிருந்தது. இராகவனும் நானும் காலை திறப்புவிழா நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பகலுணவு முடிந்ததும் நாங்கள் தங்கியிருந்த மாப்பிள்ளை ராஜா மாளிகைக்குத் திரும்பினோம். அதற்கிடையே பாரதி குடும்பத்தைச் சந்திக்க வேண்டுமென்று எண்ணிய நாங்கள் அவர்கள் தங்கியிருந்த இடத்துக்குச் சென்றோம். எங்களைக் கண்டதுமே பாரதியாரின் அருமை மனைவியான செல்லம்மா பாரதியும் மகள் தங்கம்மாள் பாரதியும் , லலிதாபாரதி முதலியோரும் கோவென அழலாயினர். காரணமறியாது நாங்கள் அப்படியே திகைத்துப் போய்விட்டோம்.

"பாரதிக்குச் சிரார்த்தம், நாங்கள் குழந்தைகளுடன் பச்சைத்தண்ணீர் கூட வாயில் விடாமல் உபவாசம் இருக்கிறோம், என்று செல்லம்மா ஆத்திரத்துடன் சொன்னார். விஷயம் என்னவென்றால் பகல் இரண்டு மணிக்கு மேலாகியும்

*அவர்களை யாரும் அழைத்துக்கொண்டு போய்ச் சாப்பிட வைக்கவில்லை.*

*அதுமட்டுமன்று. அவர்களை விழாவின் போது விழாவின் நடுமண்டபத்தில் நுழையவிடாமல் யாரோ தடுத்துவிட்டனர் என்றும் தங்கம்மா சொல்ல நாங்கள் தெரிந்துகொண்டோம். இது கேட்டு எங்களுக்கு ஏற்பட்ட மனவேதனை சொல்லிமுடியாது.*

*விழா முடிந்து சென்னை வந்ததும் இராகவன் தினமணியில் நீண்ட கடிதமொன்று எழுதினார். நான் என் பத்திரிகையில் எழுதினேன். இது பத்திரிகை உலகில் ஒரு பெரிய புயலையே உண்டாக்கிவிட்டது. குணக்குன்றான அவருக்குக் கோபம் வந்துவிட்டால் , என்ன ஆகும் என்பதை அச்சந்தர்ப்பம் வெளிப்படுத்தியது."*

நானும் அவரது கோபத்தைப் பலமுறை சந்திருக்கிறேன். அதிகபட்சத் திட்டாக நான் வாங்கியது" மடையா, மண்டு" என்பதுதான்.

அ.சீ.ரா சொன்ன இன்னொரு நிகழ்ச்சி.

கோவில்பட்டியில் இலக்கிய விழா. பேராசிரியர்கள் அ.சீ.ரா, அருணாசலக் கவுண்டர், முத்துசிவன் மூவரும் அன்று பேசுவதாக ஏற்பாடு. அவர்கள் பேசுவதற்குச் சற்று முன் அந்த அமைப்பைச் சார்ந்த இருவர் பேராசிரியர்களின் காதில்படும்படி " இன்று இவர்கள் என்ன பேசப்போகிறார்கள். கம்பன், பாரதி வள்ளுவர் இவர்களைப்பற்றித்தானே!. எங்கே போனாலும் இதே பேச்சு" எனறு பேசினார்கள். அதைக் கேட்டதும் பேராசிரியருக்குக் கோபம் வந்தது. ஒரு கூட்டத்தில் பேசியதை இன்னொரு கூட்டத்தில் பேசுவதில்லை என்று திட்டம் போட்டுக்கொண்டு மூவரும் பேசிவந்த காலமது. எனவே எந்தக் கூட்டமென்றாலும் புதிதாக ஏதாவது சிந்தனையைக் கொடுப்பார்கள். அதற்காகத் தம்மைத் தயார் செய்துகொள்வார்கள். அப்படியிருக்கும் போது அந்த இருவரின் பேச்சு பேராசிரியருக்குக் கோபத்தை உண்டாக்கியதில் வியப்பில்லை. அதற்காக விழா ஏற்பாடு

செய்தவர்களை அவர்கள் சாடவில்லை. அவர்கள் என்ன செய்வார்கள் பாவம்! அதே சமயம் பேசாமல் ஒதுங்கிவிடவும் விழையவில்லை. மூவரும் ஒரு தீர்மானத்துக்கு வந்தார்கள். தம்முள் பேசி ஒரு முடிவு எடுத்துக்கொண்டார்கள். முதலில் பேசியவர் சங்க காலத் தமிழில் யாருக்கும் புரியாத படி கால்மணி நேரம் பேசினார். அடுத்து மற்ற இருவரும் அதே மாதிரிப் பேசினார்கள். விழா எற்பாடு செய்தவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. அவையினரும் குழம்பிப்போனார்கள். முதலில் குற்றஞ்சாட்டிய இருவருக்கும் காரணம் என்ன என்பது தெளிவாகியது. அவர்கள் இருவரும் பேராசிரியர்களிடம் வந்து மன்னிப்புக்கேட்டனர். அதன் பிறகு அன்றைய இலக்கியக் கூட்டம் மறக்கமுடியாத கூட்டமாக மிகச் சிறப்பாக அமைந்தது.

பேராசிரியர் கோபப்பட்டால் உடனே மறந்துவிடுவார். அதை வெஞ்சினமாக மனத்தில் சுமப்பதில்லை. அவரது கோபத்துக்கு ஆளானவர்கள் அவரால் பெரும்பயனடைந்தனர்.

பட்டிமண்டப மேடைகளில் அவர் சீண்டப்பட்டுவிட்டால் அன்று அவையினருக்குக் கன விருந்துதான்.



# 6. கைலாசபுரம் வீடு ஒரு கலைக்கோவில்

நெல்லை இந்துக் கல்லூரியில் அவர் பணியாற்றியபோது அவர் கைலாசபுரத்தில் சிவன் கோவிலை ஒட்டிய வீட்டில் குடியிருந்தார். அந்த வீடு எப்பொழுதும் இலக்கிய அன்பர்களால் நிரம்பியிருக்கும். அ.சீ.ராவுடன் பேசிக் கொண்டிருப்பதே ஒரு சுவையான அனுபவம். இலக்கியப் பேச்சுக்காக யாராவது வந்தால் அவர் அவரை இடைஞ்சலாகக் கருதுவதில்லை. எதைப்பற்றிப் பேசினாலும் அதிலும் அறிவு பூர்வமாகக் கலந்து கொள்ளும் பரந்துபட்ட அறிவை உடையவர் அவர். அவரது சிறிய தங்கை கமலாவைத் தன்னோடு வைத்து வளர்த்துவந்தார். அதைப்போலவே அவரது மனைவியின் தம்பி கண்ணனையும் வளர்த்துவந்தார். அவரது தந்தை முதலில் திருநெல்வேலிக்கு வர மறுத்துவிட்டார்.

ஸ்மார்த்தர்கள் வாழும் பகுதி திருநெல்வேலி, அங்கு எப்படி வருவது என்பதுதான் அவரது மறுப்புக்குக் காரணம். நவதிருப்பதிகள் இருக்கும் இடம் என்பதைச் சுட்டிக்காட்டி அவரை அங்கே அழைத்துச் சென்றார் அ.சீ.ரா.

அந்த வீடு எப்போதும் இலக்கிய அன்பர்களாலும் மாணவர்களாலும் நிரம்பி வழியும். அப்பொழுது அவரது மாணவர்களாக இருந்தவர்களில் மிகவும் முக்கியமானவர்கள் துறைவன் கந்தசாமி, சிதம்பர ரகுநாதன், பாஸ்கரத் தொண்டைமானின் மகள் இராஜேஸ்வரி நடராஜன்,

மீ. பா . சோமசுந்தரம்(சோமு), ஆர். திருமலை, காஜா, டி.டி திருமலை, முகம்மது கனி ஆகியோர் .

**பித்துக்குளி முருகதாஸ்**

பிரபலப் பாடகர் பித்துக்குளி முருகதாஸ் அவர்கள் அ.சீ.ராவின் பரம ரசிகர். அவர் இளைஞராக இருந்தபோது சேரன்மாதேவியில் ரங்கோன் சுப்பையர் என்ற பெரியவர் வீட்டில் தங்கியிருந்தார். அ.சீ.ராவின் இலக்கியப் பேச்சைக் கேட்பதற்காகவும் அவருடன் உரையாடவும் அவர் அடிக்கடி கைலாசபுரம் வீட்டுக்கு வந்துவிடுவார். 1945ம் ஆண்டு பெங்களூரில் நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை அவர்களுக்குப் பொற்கிழி கொடுக்கும் நிகழ்ச்சி புட்டண்ணச்

செட்டி ஹாலில் நடைபெற்றது. பேராசிரியர் அ. சீ.ரா அந்த நிகழ்ச்சிக்குச் சென்றிருந்தார். அதே மேடையில் முருகதாஸ் இறைவணக்கம் பாடினார். அவரது பாட்டை இரசித்த அ.சீ.ரா 'நெல்லையில் பாட அழைத்தால் வருகிறீர்களா?' என்று கேட்டாராம். வருகிறேன் என்றார் முருகதாஸ். சொன்னது போலவே நெல்லை சங்கீத சபா திறப்பு விழாவுக்கு அழைத்தார். நெல்லை சங்கீத சபாவை நிறுவியவர்களுள் முதன்மையானவர் அ.சீ.ரா. அந்த விழாவில் பிரபல சங்கீத வித்வான் வி.வி. சடகோபன் பாடினார் அவர் பாடும் பொழுது "எந்த வேடுகோ ஓ ராகவா" என இராகவன் என்று பெயர் வருமாறு பாடினாராம். பித்துக்குளி முருகதாஸ் கலைவாணியைப் பற்றிப் பாடினாராம். அந்தத் திறப்புவிழாவில் அ. சீ. ராவின் இயல் பேச்சு இசைக் கச்சேரியை விட இனிமையாக இருந்தது என்கிறார் பித்துக்குளி முருகதாஸ்.

நெல்லையில் முத்துக்குமாரசாமி திருப்புகழ் சபா திருப்புகழ் மணி திறந்துவைத்தார். அ.சீ.ரா. திருப்புகழைப் பற்றிப் பேசினார். அவர் பேசியதைக்கண்டு அதிசயித்த பலர் ஒரு வைணவருக்குத் திருப்புகழில் இவ்வளவு பாண்டித்தியமா என வியந்தார்களாம் . அதில் ஒவ்வொரு ஆண்டும் அ.சீ.ராவின் சொற்பொழிவு தவறாது உண்டாம். கல்லிடைக்குறிச்சியில் வருடாவருடம் முருகா அகண்ட நாமா நடக்கும் . அ.சீ.ரா பேச்சு இல்லாமல் அவ்விழா இல்லை.

. 1967ல் அ.சீ.ரா வுக்கு மணிவிழா நடந்த போது பித்துக்குளியவர்கள் எங்கிருந்தோ விழாவுக்கு வந்துவிட்டார். என்னை விழாவில் கலந்துகொள்ள அழைக்காவிட்டாலும் உரிமை பற்றி இந்த மேடையில் நான் பாடத்தான் போகிறேன் என்று சொல்லி அரைமணி நேரம் மிக அருமையாகப் பாடினார்.

திருநெல்வேலியிலே பல இலக்கிய அன்பர்களோடு அ.சீ.ராவுக்குத் தொடர்பிருந்தது. பாஸ்கரத் தொண்டைமான், பெ.நா அப்புசாமி, ரா.பி .சேதுப்பிள்ளை, புதுமைப்பித்தன் வக்கீல் மகரபூஷணம், வக்கீல் பக்ஷிராஜன், கம்பராமயணத்தைப் பதிப்பித்த பெரியன் சீனிவாச அய்யங்கார், சிதம்பர ரகுநாதன், டிகேசி , ஜஸ்டிஸ் மகராசன் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்.

வானத்து அமரன் வந்தான் காண்

ஒருநாள் அவர் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தபோது ஒருவர் அவரைப் பார்க்க வந்து கொண்டிருந்தார். அப்பொழுது பலத்த காற்று வீசியது .வீதி எங்கும் தூசி. வந்தவர் கண்களிலும் தூசி புகுந்துகொண்டது. கண்ணைக் கசக்கிக்கொண்டே அருகில் வந்து" நீங்கள் தானே நேற்று மாணவர் சங்கத்தில் பேசியது? என்றார். அதன் பிறகு என்ன நடந்தது. அ.சீ.ரா சொற்களிலே பார்ப்போமா?

*"வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தேன். வெளியிலே ஒரே வெயில். தெரு மனித நடமாட்டமே இல்லாமல் வெறிச்சோடிப்போய்க் கிடந்தது. அதுவரை எங்கேயோ பதுங்கியிருந்த ஆடிக்காற்று மேலத் தெரு வீதிமுனையைச் சுற்றிப்பாய்ந்து வந்தது. தெருவோடு தாண்டவம் ஆடிச் சென்றது. அவ்வளவுதான், புழுதிப் படலம் புறப்பட்டு வெளியை நிறைத்தது, வெயிலை மறைத்துச் சுழன்றது. வீட்டுக்குள் பின்வாங்கத் தொடங்கிய நான் தெருக்கோடியில் காற்றோடும் புழுதியோடும் போராடிக்கொண்டு யாரோ ஒருவர் வருவதைப் பார்த்துச் சிறிது நின்றேன்.*

*ஒல்லியான உருவம் ஒடிந்து விழுந்துவிடும் போல் இருந்தது. ஆனால் ஒரு கண்ணைக் கசக்கிக் கொண்டு ஒரு கையால் பறந்தோட முயலும் வேட்டியைப் பற்றிக்கொண்டு அந்த நிலையிலும் வந்த அவருடைய ஆத்திரமும் வேகமும் வெளிப்பட்டன. இதற்குள் என் கண்ணிலேயும் புழுதி புகுந்தது. "அட ,சனியனே'என்று முன்பே பின்வாங்காத என்னை நானே நொந்துகொண்டு கண்ணைக் கசக்கியபடி உள்ளே திரும்பினேன்.*

*"............. அவர்கள் தானே ? எனது ஒரு குரல். அந்த ஒல்லியான மனிதர்தான் நின்றார்.*

*"ஆம் நான்தான்., தாங்கள் யாரென்று தெரியவில்லையே?" என்றேன்.*

*"எப்படித் தெரியும் இந்தப் புழுதியிலே, கண்ணையே திறக்க முடியலையே? ........... நேற்று நீங்கள் கூட்டத்தில் பேசுவதைக் கேட்டேன். உங்களை நண்பராக்கிக் கொள்ள வந்திருக்கிறேன்".*

*என்றார் அந்த அதிசய மனிதர். கண்ணைக் கசக்கிக் கொண்டே .*

*"அதற்குத்தான் அழுது கொண்டே வந்தீர்களா?" என்றேன் சிரித்துக்கொண்டே.*

*" நீங்களுந்தான் அழுதுகொண்டே இருக்கிறீர்கள். இந்த மண்ணின் வலிமை யாரைவிட்டது.? ஆனால் ஒன்று. சந்திக்கும் பொழுது அழுதால், பிரியும் பொழுது சிரிக்கலாம் அல்லவா?" என்றார் அவர்.*

*இப்படித்தான் ஏற்பட்டது எனக்கும் புதுமைப் பித்தனுக்கும் நட்பு."*

புதுமைப்பித்தனை தனது சிறுகதைகளைப் பற்றி தான் பணியாற்றிய கல்லூரியில் பேசுமாறு அழைத்திருந்தார் அ.சீ.ரா. அந்தக் கூட்டத்திற்கு அவர்தான் தலைமை. பேசத்தொடங்கிய புதுமைப்பித்தன் பொதுவாக மற்றவர்கள் பேசுவதைப் போல் பேசாமல் ஒரு புதுமையான முறையைக் கையாண்டார். தனது கதாபாத்திரங்களுடன் ஒன்றி, மேஜைமேலேறிக் குதிப்பதும் நடப்பதும் அமர்வதும் ஆடுவதுமாக அபிநயங்களோடு பேசினாராம்.

புதுமைப் பித்தனும் பிரபல எழுத்தாளர் ந-பிச்சைமூர்த்தியும் அ,சீ.ராவும் திருச்சியில் ஓரிடத்தில் தங்கியிருந்தனர். பேச்சுவாக்கில் புதுமைப்பித்தன் பேராசிரியரைப் பார்த்து " நீங்கள் சொற்பொழிவாற்றுகிறீர்கள். நாடகம் எழுதுகிறீர்கள். கவிதை எழுதுகிறீர்கள். உங்களால் சிறுகதை எழுத முடியவில்லையே ஏன்?" என்று கேட்டார்.

" எழுத முடியவில்லை என்று யார் சொன்னது. நான் சிறுகதை எழுதத் தொடங்கினால் உங்களைப்போன்றவர்கள் பிழைப்புக் கெட்டுவிடும்" என்றாராம்

" சும்மா சால்ஜாப்புச் சொல்லாதீர்கள். எழுத முடியுமென்றால் ஒரு கதையாவது எழுதிக்காட்டுங்களேன்"என்றார் புதுமைப் பித்தன்.

"அதற்கென்ன. செய்தால் போயிற்று. பொழுது புலர்வதன் முன் ஒரு கதை எழுதிக்காட்டுகிறேன்." என்றார். அன்றிரவே

"பிரிவு" என்ற தலைப்பில் ஒரு சிறுகதை எழுதினார். சாகித்ய அகாதமியின் தமிழ்ச் சிறுகதைகள் தொகுப்பில் அந்தக் கதை இடம்பெற்றிருக்கிறது.

புதுமைப்பித்தன் மறைந்த போது பேராசிரியர் புதுமைப்பித்தனைப் பற்றி ஒரு கட்டுரையை அவர் நடத்தி வந்த "சிந்தனை" பத்திரிகையில் எழுதினார். மிக உருக்கமான கட்டுரை.

*"இன்று அந்தக் கவியுள்ளத்தின் ஓயாத பரபரப்பும் சலனமும் ஒய்ந்துவிட்டது. எத்தனையோ ஆயிரம் வாசகர்களின் சிந்தனையைத் தூண்டிச் சிறுமையை விரட்டிய புரட்சிக்குரல் ஒடுங்கிவிட்டது. "காலனும் கிழவியும்" என்ற அவரது கதையில் "உன்னாலே என் உசிரைத் தானே எடுத்துக்கிட்டுப் போகமுடியும்!இந்த உடலைக் கூடத் தூக்கிக்கிட்டுப் போவ திறமை இருக்கா? யோசிச்சுப் பாரு . உன்னாலே அழிக்க முடியுமா? அடியோடு இல்லாம ஆக்கமுடியுமா / அது உன்னைப் படைச்ச கடவுளாலேயே முடியாது." இதை உண்மையென்று நம்பத் துடிக்கிறது என்மனம். முடியவில்லை. எதைச் சொல்லவேண்டாமென்று புதுமைப் பித்தன் எச்சரித்தாரோ அதைச் சொல்லாமல் இருக்க முடியவில்லையே!*

*"வானத்து அமரன் வந்தான் காண். , வந்ததுபோல் போனான் காண் என்று புலம்பாதீர்" என்று அவர் எழுதியதும், "பிரியும் போது சிரிக்கலாம்" என்று அவர் சிரித்ததும் என் மனத்தில் அழுத்தமாக நிற்கின்றன. ஆனால், புலம்பாமல் இருக்கவும் சிரிக்கவும் அந்த "வானத்து அமரனால் தான் முடியும். நானோ அவர் வந்த வகையும், போன மாயமும் தெரியாமல் அவர் தந்த நட்பை எண்ணி ஏங்குகிறேன்.*

*சூறைக்காற்றிலே வந்தார். சாவென்னும் சூறையிலே மறைந்தார். என்னைச் சுற்றித் துயரப் புழுதிசுழல்கிறது. "வானத்து அமரன் , அவன் வந்ததுபோல் போனான்" என்று பேசுகிறேன். இதனால் சூன்யம் நிரம்பவா போகிறது?"*

*பேசாத பேச்சு*

நட்புக்குத் தன்னை முழுமையாக ஆட்படுத்திக்கொண்டவர் அ,சீ.ரா. அவருடைய இலக்கியத்தோழர், சக ஆசிரியர்,

எல்லாவற்றுக்கும் மேலாக நண்பர், பேராசிரியர் முத்துசிவனின் மறைவு அவரை வெகுவாகப் பாதித்தது. பல இலக்கியக் கூட்டங்களில் அவர்கள் ஒன்றாகவே கலந்து கொண்டிருக்கிறார்கள். இருவரும் போட்டி போட்டுக்கொண்டு அவையோரை வியப்பில் ஆழ்த்துவதுண்டு. இருவரும் கலந்து கொள்ளும் கூட்டம் என்றால் அவை நிரம்பி வழியும். அப்படிப்பட்ட நண்பரின் மறைவுக்கு நினைவாஞ்சலி ஏற்பாடு செய்திருந்தார்கள். பேராசிரியர் அ,சீ,ராவும் அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டார். பலரும் பேசினார்கள். பேராசிரியர் பேச எழுந்தார். மேடை அனுபவம் மிகவும் உள்ள அவருக்கு அன்று பேச வரவில்லை, சோகம் வார்த்தைகளைத் தின்று கண்களின் வழியே வெளிப்பட்டு, கட்டுப்படுத்தமுடியாமல் தேம்பித் தேம்பி அழுதுவிட்டார். பேசாமல் மேடையை விட்டு வெளியேறினார். பேசினால் ஏற்படுத்தி இருக்கும் உணர்ச்சியைவிட அதிக இறுக்கத்தை அவரது பேசாத பேச்சு அன்று ஏற்படுத்தியது.

**உதவி வரைத்தன்று உதவி**

மீ. பா . சோமசுந்தரம் அவருடைய மாணவர். அவரது குடும்பத்தையும் அவருக்குத் தெரியும். சோமுவின் குடும்பத்திலே ஒரு பெரும் குழப்பம். அப்பொழுது மாணவனாக இருந்த சோமுவுக்கு அதிலிருந்து எப்படி மீண்டுவருவது என்று தெரியவில்லை. பேராசிரியர் அ. சீ. ரா அந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதில் பெருமுயற்சி எடுத்துக்கொண்டார். தனது நண்பர்களின் உதவியோடு ஏற்பட்ட கடன் பிரச்சினையைத் தீர்த்து சோமுவுக்கு உதவினார்.. அதுமட்டுமின்றி அவருக்கு வேலைக்கு ஏற்பாடு செய்தார். ஆனால் சில காரணங்களால் அவருக்கும் சோமுவுக்கும் இடையே மனஸ்தாபம் ஏற்பட்டது. என்றாலும் சோமு ஆசிரியரை மதிப்பதும் ஆசிரியர் மாணவனை நேசிப்பதும் குறையவில்லை. சோமு எழுதிய ஒரு புத்தகத்தைப் பேராசிரியருக்கு அர்ப்பணம் செய்தார். சோமு எழுதிய " அக்கரைச்சீமையில் ஆறு மாதங்கள்" என்ற புத்தகத்துக்குச் சாகித்ய அகாதமி பரிசு கிடைத்த போது அ.சீ.ரா. அகமகிழ்ந்தார்.

" சோமு என்ன அருமையாக எழுதியிருக்கிறான் பார்" என்று பேராசிரியர் என்னிடம் சொன்னார். அந்தச் சமயத்தில் இன்னொரு அரசியல் பிரமுகர் எழுதிய பயணநூலும் வெளிவந்தது. இரண்டையும் ஒப்பிட்டு அரசியல் வாதி எழுதுவதற்கும் இலக்கியவாதி எழுதுவதற்கும் வேறுபாட்டைப் படித்துப் பார்" என்று சொன்னார்.

1966ம் ஆண்டு பேராசியர் சென்னை வந்திருந்த போது என்னை மீ. பா. சோமுவிடம் அறிமுகப்படுத்தி வைத்தார். சோமு அ.சீ.ராவைப் பற்றிப் பேசும்போது"வாத்தியாரய்யா" என்றுதான் குறிப்பிடுவார்,.

அ.சீ.ரா அவர்களின் மணிவிழா மலரில் சோமு அவர்கள், அவர் தனக்குச் செய்த உதவியைக் குறிப்பிட்டிருக்கிறார்.

"சின்னஞ் சிறிய வயதினிலும்
சிறியன் என்று பாராமல்
என்ன விதங்கள் அன்புண்டோ
எல்லாம் சேர்த்தே என்மீது
கன்னற் சாறு போற்பிழிந்து
கற்கண் டாக உறவுணர்த்தி
நன்ன லத்தில் வளர்க என
நாளும் ஊக்கம் தந்திடுவான்

அந்த நாள்தொட் டிதுகாறும்
அன்போ டாசி வழங்கிடுவான்
சிந்தை இனிய பண்பாளன்
சீனிவாச ராகவ மால்
செந்தில் முருகன் திருவருளால்
சீரும் சிறப்பும் உயர்ந்தோங்கி
எந்த நாளும் உகப்புடனே
ஏற்ற மாக வாழியவே"

### அன்புக்கு அழுக்கேது?

காஜா என்று ஒரு மாணவர். பேராசிரியரிடம் அளவிலா அன்பு பூண்டவர். அவர் என்ன சொன்னாலும் மறு பேச்சுப் பேசாமல் செய்து முடிப்பவர். அவர் முகமதியராக இருந்தாலும் பேராசிரியரை எங்குக் கண்டாலும் அப்படியே அவர் காலில் சாஷ்டாங்கமாக விழுந்துவிடுவார். ஒருமுறை பேராசிரியரை வரவேற்க இரயில் நிலையம் சென்றிருந்தார் காஜா. அப்பொழுது நல்ல மழை. பேராசிரியர் வண்டியிலிருந்து இறங்கினார். பிளாட்பாரமெங்கும் தண்ணீர் தேங்கிக் கிடந்தது. எதையும் பொருட்படுத்தாது காஜா அவர் காலில் விழுந்து வணங்கினார். அவர் போட்டிருந்த உடை ஈரமாகி அழுக்காகிவிட்டது. பேராசிரியர் இதைக்கண்டு உள்ளம் நெகிழ்ந்து தானும் அவரைக் கட்டி அணைத்துக்கொண்டாராம். அன்புக்கு அழுக்கேது?

### தோன்றாத்துணை

எஸ். கந்தசாமி அவரது அன்புக்குப் பாத்திரமான மாணவர். பின்னாளில் சென்னை வானொலி நிலையத்தின் நிலைய இயக்குனராக இருந்த துறைவன்தான் அவர். அவர் சிறந்த கவிஞர்.

ஆசிரியரிடம் அளவுகடந்த பக்தி கொண்டவர். பாடம் கற்றுக்கொடுக்கும் பொழுதுமட்டுமல்ல, நேரில் இருக்கும் பொழுது மட்டுமல்ல, நேரில் இல்லாதபோதும் தமக்குக் கற்றுக்கொடுத்தவர் பேராசிரியரென்று என்னிடம் ஒருமுறை துறைவன் கூறினார். அதற்கு எடுத்துக்காட்டாக ஒரு நிகழ்ச்சியைச் சொன்னார்.

அவர் அகில இந்திய வானொலியில் பணியாற்றிக் கொண்டிருந்தார். அவருக்குக் முதல்நிலை அதிகாரி ஆகப் பதவி உயர்வு கொடுப்பதற்கு ஒரு நேர்முகத் தேர்வு நடத்தினார்கள். அதில் பல பெரிய அறிஞர்கள் பங்குபெற்றனர். துறைவன் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர் என்பதால் ஒரு அதிகாரி அவரைப் பார்த்து.

"What is the difference between poet Kamban and Tulsidas?" என்று கேட்டார். துறைவன் சற்றே திகைத்துவிட்டார். மனத்துள் தனது குரு அ.சீ.ரா வை நினைத்தார். அவ்வளவுதான். விடை கிடைத்துவிட்டது.

" Kamban was primarily a poet, then only he was a bhaktha. But Thulasidas was primarily a Baktha and then only he was a poet". அவர் உங்கள் கூற்றுக்கு ஆதாரம் காட்ட முடியுமா என்று கேட்க, கம்பன் கவிதை அவசியம் நேரும் போது இராபிரானைத் திட்டவும் செய்யும். ஆனால் துளசிதாஸ் இராவணன் பேசுவதாக இருந்தாலும் இராமனை மரியாதையுடன்தான் குறிப்பிடுவார்" என்றார். அந்தத் தேர்வில் வென்று பெரிய பதவி பெற்றார் துறைவன். "அந்தக் கேள்விக்கு மானசீகமாக எனக்குள் பதிலைத் தோற்றுவித்தது எனது குருநாதர் தான்" என்றார் துறைவன், குருதான் எனக்கு எல்லாம் என்று அழுத்தம் திருத்தமாகக் கூறும் அவரது கவிதைதான் அ.சீ.ராவின் மணிவிழா மலரின் மகுடமாக அலங்கரிக்கிறது.

"தாயென்றும் தந்தையென்றும் தந்தைக்குத் தந்தையென்றும்
சேயென்ற வேலேந்தும் தெய்வமென்றும் நீவணங்கு
வாயென்று பலருரைத்த வழியனைத்தும் என்வரையில்
நீயென்றே கொண்டுவிட்டேன் நெஞ்சமெல்லாம் நிறைந்தோனே!

உண்ணுகையில் உறங்குகையில், உலகத்துச் சந்தையினில்
நண்ணுகையில் நடுங்குகையில் ஞானவெளிப் பாலையினில்
பண்ணிசைக்கும் காற்றொலியைப் பாட்டினுக்குள் கொண்டுவர
எண்ணுகையில் ஏங்குகையில் எப்பொழுதும் நின்நினைவே!

தொல்லோர்தம் நெறிமுறைகள் சூத்திரங்கள் மந்திரங்கள்
வல்லோர்கள் வகைசெய்த வரம்புநிலை, அறவெல்லை
நல்லோரின் மறைமொழிகள் ஞானங்கள், சூக்குமங்கள்
எல்லாமே நின்மொழியில் நான்கண்டு கொண்டேனே

தன்னைத்தான் இனங்காணாத் தாரணியில் தவித்துநின்ற
என்னைப்போய் ஆட்கொண்டாய் என்னவன்நீ என்றருளி
பொன்தந்தாய், புகழ்தந்தாய், புலவரிடை இடந்தந்தாய்
என்தந்த தில்லை அய்யா எல்லையில்லா அறிவுடையோய்1

செங்கதிரோன் சுடர்நின்சொல், செழுநிலவே நின் நோக்கம்
கங்கையுன்றன் அருள்வாக்கு, ககனஒளி நின் இதயம்
தங்கமணித் தமிழ்மகுடத் தலைமணியே, அருள்வாழ்வின்
துங்கமுயர்ந்த் தோங்குகநீ, சுடர்பரப்பித் துலங்குகநீ

கைலாசபுரத்தில் பேராசிரியர் வாழ்ந்த வீட்டிற்கு அருகில்தான் மகாகவி பாரதியாரின் குடும்பமும் வாழ்ந்திருக்கிறது. அவர்களுக்குத் தேவையான உதவிகளையும் பேராசிரியர் செய்து கொடுப்பதுண்டு.

அதனால்தான் சென்னை அரசாங்கம் பாரதியின் பாடல்களைத் தேசியமயமாக்கும் முயற்சியில் பாரதி குடும்பத்தோடு பேசி ஒரு ஒரு தீர்மானத்துக்கு வரும் பொறுப்பை பேராசிரியரிடம் விட்டிருந்தது. அவர்தான் ஒப்பந்தப் பத்திரத்தை எழுதி திருமதி செல்லம்மாள் அவர்களிடம் கையெழுத்து வாங்கிக் கொடுத்தார்.

**தங்கையின் திருமணம்**



அவரது தங்கை கமலாவுக்கு இசைஞானம் உண்டு. பேராசிரியர் இசை கற்றுக்கொண்டவர். நன்றாக வயலின் வாசிப்பார். நன்கு பாடுவார். அருமையான குரல் வளம். அவர் இசைஉலகத்துக்குப் போயிருந்தால் அங்கும் பெரும் புகழ் பெற்றிருப்பார். ஆனால் தன்னுடைய வாழ்க்கையை ஆசிரியப் பணிக்கே அர்ப்பணித்துவிட்ட காரணத்தால் வேறு எந்தப் பதவிக்கும் அவர் ஆசைப்படவில்லை. வீட்டிலேயே தங்கைக்குப் பாட்டுக் கற்றுக்கொடுத்தார். நவராத்திரி சமயம் அவர் வீட்டில் கொலு வைப்பது உண்டு.

வீட்டில் ஒருபெண் இருக்கிறாள் என்பதால் கொலு வைப்பதற்கு அனுமதி அளித்திருந்தார். அதுமட்டுமல்லாது கொலுவில் பாடுவதற்குத் தங்கைக்குப் பாடல்களும் கற்றுக்கொடுத்திருந்தார்.

தங்கைக்குத் திருமண வயது வந்துவிட்டதால் அதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்கத் தொடங்கினார்.

தங்கையைப் பார்த்து நிச்சயம் செய்து விட்டுப் போனவர்கள் திடீரெனப் பின்வாங்கியதால் , பேராசிரியருக்கு எரிச்சல் வந்தது. அருமைத் தங்கைக்கு எப்படியும் மூன்று மாதங்களுக்குள் திருமணம் நடத்திக்காட்டுகிறேன் என்று சவால் விட்டு

மாப்பிள்ளை பார்ப்பதற்காகத் திருச்சிக்கு வந்தார். அவரது மாணவர் டி.டி திருமலை மூலமாக 'ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து ஒரு வரன் வந்தது. திருமணம் நிச்சயமானது.. முதலில் நிச்சயம் வரை வந்து தடைபட்டுப்போனதால் திருமணத்தை வெகு சிறப்பாக நடத்துவது என்று முடிவு செய்தார். ஊற்றுமலை ஜமீன் பாண்டியனவர்கள் அ.சீ.ராவுக்கு மிகவும் வேண்டியவர். குற்றாலத்திலிருந்த அவரது மாளிகையைத் திருமணம் நடத்துவதற்காகக் கொடுத்தார்.

அவருடைய ஏற்பாட்டின் படி, சாமான்கள் வந்து குவிந்தன. அந்தத் திருமணத்திற்கு இராஜாஜி, கல்கி, டி கேசி ஆகியோர் வந்திருந்தனர். அரச குடும்பத் திருமணம்போல மிக விமரிசையாக நடந்தது அந்தத் திருமணம். தங்கை கமலா திரு . கோவிந்தனைக் கரம் பிடித்தார்,

**இதுவோ உனதருள் அம்மா?**

திருமதி கமலாவின் சீமந்தம் பெங்களூரில் நடந்தது. திரு பித்துக்குளி முருகதாஸ் முன்பு குறிப்பிட்ட நிகழ்ச்சி-நாமக்கல் கவிஞருக்குப் பொற்கிழி கொடுக்கும் நிகழ்ச்சி-அதேசமயம் பெங்களூரில் நடந்தது. சீமந்தத்தில் கலந்துகொண்டு, நாமக்கல் கவிஞர் நிகழ்ச்சியிலும் கலந்துகொள்ள அ.சீ.ராவுக்கு வசதியாக அமைந்தது. பேராசிரியரின் மனைவி உடல்நலமின்றி இருந்ததால் தங்கையைப் பிரசவத்துக்குத் திருநெல்வேலிக்கு அழைத்துப் போகமுடியாத நிலை.

புகுந்த வீட்டிலோ "நாங்கள் கவனித்துக்கொள்ள மாட்டோம். நீங்கள் உங்கள் தங்கையை அழைத்துக்கொண்டு சென்றுவிடுங்கள்" என்று சொல்லிவிட்டார்கள். அ.சீ.ராவுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. நாமக்கல் கவிஞரின் விழாவை முடித்துத் தங்கையின் வீட்டுக்கு வந்தார். திருமதி கமலா மட்டும் தனியாக இருந்தார். மற்றவர்கள் மைசூருக்குச் சென்றிருந்தார்கள்.

இந்தச் சிக்கலில் இருந்து எப்படி விடுபடுவது என்று பேராசிரியர் வெகு நேரம் சிந்தித்திருப்பார் போலும். தங்கையைப் பார்த்து,

" பெண்ணே, தம்புரா இருக்கிறதாம்மா?" என்று கேட்டார்.

உள்ளேயிருந்து தம்புராவை எடுத்து வந்தார் கமலா.

"'நான் இப்பொழுது உனக்கு ஒரு பாட்டுச் சொல்லித்தரப் போகிறேன். நீ பாடவேண்டும்" என்றார் அ.சீ.ரா.

தமையன் என்ன சொன்னாலும் தங்கை தட்டுவதில்லை. அவருடைய இக்கட்டான நிலை அவருக்குப் புரிந்தது

"சரி, முத்தா" என்றார். நாட்டைக்குறிஞ்சி ராகத்தில் ஒரு பாட்டைப் பாடிக்காண்பித்தார். அவர் பாடும்போதே கமலாவுக்குக் கண்களில் கண்ணீர் பெருகியது. மனிதர்கள் உதவாது போய்விடும் போது தெய்வத்திடம் தானே முறையிடவேண்டும்!.

முதலில் பல்லவியைப் பேராசிரியர்- அவரும் குரல் தழுதழுத்த படியே- பாடிக்காட்டினார்.

"இதுவோ உனதருள் அம்மா-எனை

இங்கும் அங்கும் இலாமல்

எங்கும் தங்கவிடாமல் அலைப்பது- இதுவோ"

மீண்டும் மீண்டும் பாடினார். தனது நிலைமையை அப்படியே அவ்வரிகள் படம்பிடித்ததால்,

கமாலாவும் அழுதுகொண்டே பாடினார்.

அந்தக்கீர்த்தனை முழுதும் இதோ:

"இதுவோ உனதருள் அம்மா- எனை

இங்கும் அங்கும் இலாமல்

எங்கும் தங்கவிடாமல் அலைப்பது- - இதுவோ

விதியாய் விளைபவளே- அகிலம் முழுதும் நிறை

வினையை விலக்கும் வீறாம் இளையவளே,

எனைவருத்தும் -இதுவோ

மதியமும் கரத்தினில் மலர்ந்திடும் தாரகை
மணியும் விழும் ஒலியோ- அன்றி
மாயையினால் எனை மயக்கி மனங்குளிரும்
மந்தஹாஸ ஒளியோ?

கதிதரும் அருளெளியோ-எனக்கும் பேரின்பக்
கதிதரும் அருளொளியோ- எனக்
கலங்கும் பேதையெனை
கலங்கவே விடுவது — இதுவோ

இந்தப்பாடலைப் பாடி முடித்ததும் வெளியில் சென்றவர்கள் வீடு திரும்பினார்கள்.

திருமதி கமலாவின் புக்ககத்தினர் அவரை அங்கேயே தங்க வைத்துக்கொள்வதாகத் தீர்மானித்து விட்டதாகவும் திருநெல்வேலிக்குக் கூட்டிச் செல்லவேண்டிய அவசியமில்லை என்றும் கூறிவிட்டார்கள். என்னே தமிழின் பெருமை!



# 7. பல்துறை வித்தகம்

ஊற்றுமலை ஜமீனில் வாரிசுப் பிரச்சினை. அந்தப் பிரச்சினையைத் தீர்த்துவைக்க அ.சீ.ரா முயன்றார். அது மிகவும் சிக்கலான பிரச்சினை. நீதிமன்றத்தில் வழக்கு நடந்தது. அந்த வழக்கைப் பிரபல வக்கீல் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் எடுத்து நடத்துவதாக ஏற்பாடு. அந்த வழக்கு விவரங்களை அவரிடம் எடுத்துரைக்கும்படி பேராசிரியரை அனுப்பினார் ஜமீந்தார். அதைப்பற்றி ஜஸ்டிஸ் மகாராஜன் சொல்லுவதைப் பார்க்கலாம்.

*" சுமார் ஆறுமணி நேரம் வழக்கின் சிக்கல்களை விரிவாக எடுத்துச் சொன்னார் ராகவன். எதைச்சொல்லவேண்டுமோ, எப்படிச் சொல்ல வேண்டுமோ அதை அப்படிச் சொன்னார். அதைக்கேட்டுக் கொண்டிருந்த சர். அல்லாடி அதிசயத்தில் மூழ்கிவிட்டார்.*

*"எந்த ஊரில் நீங்கள் பிராக்டீஸ் பண்ணுகிறீர்கள்?" என்று கேட்டார். "நான் வக்கீலல்ல. கல்லூரி ஆசிரியன் " என்றார் அ.சீ.ரா. பதிலைக் கேட்ட அல்லாடி, "நீங்கள் வக்கீலாக வந்திருந்தால் எங்கள் கதியெல்லாம் அதோகதிதான்" என்றார். இவ்வாறாக எவ்வளவு சிக்கலான பிரச்சினையையும் ஒரு சில கணங்களில் சிக்கல் எடுத்துத் தெளிவுபடுத்தும் அரிய திறமை பேராசிரியரிடத்தில் இருந்தது. எத்தனையோ பேராசிரியர்களை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் அறிவுத் தெளிவும் நாநலமும் இருமொழிப் புலமையும் இசையறிவும் கலையுணர்வும், நெருங்கிப் பழகும் தோழமையும், நகைச்சுவையும், எளிமையும், அவரிடத்தில் ஒருங்கே கண்டதுபோல் நான் வேறொருவரிடத்திலும் கண்டதில்லை"*

**அ.சீ.ராவும் இராஜாஜியும்**

குற்றாலத்தில் சாரல் விழா நடக்கும் . அதற்குப் பேராசிரியர் போவதுண்டு.. அங்கே டி கே சி, இராஜாஜி, கல்கி ஆகியோரும் வருவர். ஒருசமயம் இராஜாஜிக்கும் பேராசிரியருக்கும் பெருத்த விவாதம் ஏற்பட்டது. விவாதம் இரண்டுமணி நேரம் தொடர்ந்தது. குழந்தைகளுக்கு அறிவுபூர்வமான சில விஷயங்களைப் போதிக்கக் கூடாது என்பது இராஜாஜியின் வாதம். போதிக்கலாம். அதைப் பக்குவமாகச் செய்யவேண்டும்

அப்படிச்செய்வது அவசியம் என்று மேனாட்டு முறைகளோடு ஒப்பிட்டு ஆதாரங்களை அடுக்கி விவாதித்தார் பேராசிரியர்.

டி கே சி தலையிட்டு அருவிக்குக் குளிக்க அழைத்துக் கொண்டு சென்றார். போகிற வழியில் பேராசிரியர் பக்கம் திரும்பி "இராகவன் நீங்கள் சொல்வதைச் சிந்தித்துப் பார்த்தேன். அது உண்மைதான்" என்றாராம் இராஜாஜி. பொதுவாக இராஜாஜி வாதங்களில் விட்டுக்கொடுப்பதே இல்லை. ஆனால் அன்று பேராசிரியரின் வாதம் அவரையும் கவர்ந்தது.

ஒருமுறை இராஜாஜியும் பேராசிரியரும் ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களின் பேச்சைக் கவனித்துக்கொண்டிருந்த ஒருவர் பேராசிரியரிடம் "நீங்கள் இருவரும் என்ன பேசிக்கொண்டீர்கள் என்பது சற்றும் விளங்கவில்லையே! இருவரும் ஆங்கிலத்தில்தான் பேசினீர்கள். புரியாத சொற்கள் ஏதுமில்லை. ஆனாலும் தொடர்பில்லாமல் பேசியதுபோல் இருந்ததே " என்றார்

" ஆமாம், இராஜாஜியைப் போன்ற அறிவாளிகளிடம் பேசுவது ஒரு தனிக்கலை. அவர் நாம் பேசுவதைக் கிரகித்துக்கொண்டு ஒருபடி மேலே போய்ப் பேசுவார். அவருடன் தொடர்ந்து பேச வேண்டுமானால் நாமும் அப்படிச் செய்யவேண்டும்."என்றாராம் அ.சீ.ரா.

**எம்மதமும் சம்மதம்**

அ.சீ.ரா வின் வீட்டில், வயது இனம் பாகுபாடின்றிப் பலரும் வந்து போவார்கள்.. மாணவர்கள் என்றால் அவருக்கு மிகவும் பிடிக்கும். அவர் இன்னார் இனியர் என்று வேறுபாடு காட்டியதே இல்லை.

பேராசிரியர் குர்ரான் , பைபிள் , பகவத் கீதை எல்லாம் நன்கு படித்தவர். இரவணசமுத்திரம் என்ற ஊரில் அவர் முஸ்லீம் பண்டிகையை ஒட்டி நபிகள் நாயகம் பற்றிப் பேசினார். முதலில் அவர் பேசத்தொடங்கியபோது ஆழ்வார்களின் பாசுரங்களை மேற்கோள் காட்டிப் பேசினாராம். ஒருசிலர் எங்கே பேசுகிறோம் என்பது தெரியாமல் பேசுகிறாரே என்று எண்ணினார்களாம். ஆனால் சிறிது நேரத்திற்குப் பிறகு அவர் நபிகள் நாயகம் அவர்களின் போதனைகளோடு அவற்றை ஒப்பிட்டுப் பேசியபோது

அவர்கள் வியப்பில் ஆழ்ந்தார்களாம். அதைப்போல கிறுஸ்துமஸ் பற்றியும் மிக அருமையான கட்டுரை ஒன்று எழுதியிருக்கிறார். குருநானக் பற்றிய அவரது ஆய்வுரை பலராலும் பாராட்டப் பட்டது.

கவிஞர் இக்பாலைப் பற்றி அவரது மாணவர் முகமது கனி ஒருபுத்தகம் எழுதியிருக்கிறார். அதைப் படித்த பேராசிரியர் இக்பாலை அதிகம் படிக்காமல் போய்விட்டோமே என்று வருத்தப்பட்டிருக்கிறார். அவர் கனிக்கு எழுதிய கடிதத்தில் "கவிஞர் இக்பாலைப் பற்றி எனக்கு இதுவரை அதிகமாகத் தெரியாது. "அல்லாமா இக்பால்" என்ற உன் புத்தகத்தைப் படித்த பிறகு "எத்தனை அருமையான விஷயங்களை நாம் அறியாமல் வாழ்ந்துவருகிறோம்"என்ற எண்ணம்தான் எனக்கு உண்டாயிற்று. எல்லாவற்றையும் அறியவேண்டுமென்று நான் ஆசைப்படவில்லை. அது முடியாது என்பதை நன்றாய் அறிந்திருக்கிறேன். அறிவின் விசாலமும் என் புத்தியின் மந்த கதியும், எனக்குள்ள காலத்தின் குறுகிய வீச்சும் எனக்குத் தெரியாதா? என்றாலும், நம் நாட்டிலேயே நம் காலத்திலேயே வாழ்ந்த தலைசிறந்த கவிஞர் ஒருவரை நன்றாகத் தெரிந்து கொள்ளாமல் வாழ்வது இலக்கிய மாணவனான எனக்கு வெட்கமாகத்தான் இருக்கிறது. ஆனால் என் செய்வது. உருது பாஷை தெரியாமல் விழிக்கிறேன்." என்று எழுதினார்.

**இலக்கிய விமரிசனம்**

இலக்கிய விமரிசனத்தைப் பொறுத்தமட்டில் பேராசிரியர் தன் கொள்கைகளை என்றும் விட்டுக்கொடுத்ததே இல்லை. அதை எதிர்ப்பவர் எவ்வளவு பெரியவரானாலும் சரி, தன் கொள்கையை அவர் மாற்றிக்கொண்டதே இல்லை. அவருடன் மிக நெருங்கிப் பழகிய பேராசிரியர் வைத்தமாநிதி அவர்கள் சொல்கிறார்....

*"முதன்முதலாக தமிழ்நாட்டிலே மேனாட்டு ரீதியில், ஆனால் தமிழின் தனித்தன்மையோடு திறனாய்வுக் கட்டுரை எழுதிய பெருமை நம் அ.சீ.ராவுக்கே! மொழிபற்றியும், கவிதை பற்றியும் கட்டுரை பற்றியும் பெருங்காவியத்தை அணுகும் வழிபற்றியும் அ.சீ.ரா ஆற்றியுள்ள சொற்பொழிவுகளைக் கேட்டவர்கள்*

*இவரது திறனாய்வு பற்றிப் பேசி மகிழ்வார்கள்.. நெல்லையில் இவர் வாழ்ந்துவந்த காலத்தில் "இலக்கிய வட்டத்தொட்டி ' என்ற இலக்கிய ரசிகர்களின் சங்கத்தின் இலக்கிய விசாரக் கூட்டங்களில் திரு டி.கே சி யின் தலைமையில் இவர்கள் பங்கு கொண்டு ஆற்றிய பெரும்பணியை நேரிலே கேட்கும் வாய்ப்பு எனக்கிருந்தது. அப்பொழுதெல்லாம் இவரைத் தமிழின் எதிரியாகக் கண்டவரும் இத்தமிழ்நாட்டில் உண்டு. ஆனால் அதே பெரியார்கள் இன்று அ.சீ.ராவைப் போற்றுகின்றனர். அன்றே அ.சீ.ரா வெளியிட்ட கருத்துகள் இன்று நடைமுறைக் காரியங்கள் ஆகிவிட்டதைக் கண்கூடாகக் கண்டுவிட்டார்கள். எல்லாத் தமிழ்நாட்டுப் பத்திரிகைகளும் இவரது இலக்கியக் கட்டுரைகளைத் தாங்கிவரும் சிறப்புப் பெற்றிருக்கின்றன."*



# 8. சிந்தனைச் சிறப்பு

நெல்லை இந்துக்கல்லூரியில் பணியாற்றிவிட்டு அவர் சென்னை சென்றார். மனைவியின் உடல்நிலை மிகவும் பாதிக்கப் பட்டதால் சென்னையில் மருத்துவ மனையில் கொண்டு சேர்த்தார். நாலைந்து ஆண்டுகள்தான் அவர் சென்னையில் இருந்தார். ஆனால் அந்தக்கால கட்டத்தில் அவர் செய்த தமிழ்த்தொண்டு என்றும் நின்று நிலைப்பது.

அப்பொழுதுதான் "சிந்தனை' என்ற பத்திரிகையின் ஆசிரியராகத் திகழ்ந்தார். அப்படியொரு பத்திரிகை அதற்கு முன்னும் இருந்ததில்லை. அதற்குப் பின் இன்று வரை அந்த இடத்தை வேறு எந்தப் பத்திரிகையும் பிடிக்கவில்லை.

அப்படியென்ன "சிந்தனை'க்குச் சிறப்பு! இதோ ஆசிரியரே சொல்கிறார்.

"சிந்தனை கேவலம் பொழுதுபோக்குப் பத்திரிகையன்று: விருப்பு வெறுப்பின்றி, உலகின் அறிவுச் செல்வத்தை யெல்லாம் தமிழிலே தேக்கி, போகின்ற பொழுதை அமர நிலையில் செலுத்த உதவும் ஞானரதமாகச் சிந்தனை திகழ்வதுதான் சிந்தனையின் நோக்கம்."

அது சரி. அந்தப் பத்திரிகைக்கு எழுதுபவர் களிடமிருந்து என்னெவெல்லாம் எதிர்பார்க்கப் படுவதில்லை என்பதையும் தெளிவாகச் சொல்லிவிடுகிறார், *கட்டுரையாளருக்கு:*

*1.ஹாஸ்யத் துணுக்குகளோ, குட்டிக்கதைகளோ, சிறுவர்க்கான கட்டுரைகளோ, கார்ட்டூன்களோ "சிந்தனை" க்குத் தேவையில்லை. ஆழ்ந்த கருத்துடைய கட்டுரைகள், சிறு நாடகங்கள், சிறுகதைகள், புதிய புத்தகங்களைப் பற்றிய விரிவான மதிப்புரை- ஆகியவற்றைச் சிந்தனை வரவேற்கிறது. பல துறைகளிலும் அறிவு வளர்ச்சிக்கான கட்டுரைகளே சிந்தனைக்குத் தேவை. சிந்தனை அறிவின் அடித்தலம். சிந்தனை அறிவின் தமிழ்க்குரல்"*

**எது சிந்தனை?**

அதன் முதல் இதழின் தொடக்கத்திலேயே அஞ்சலியாகச் சிந்தனை என்றால் என்ன, அதற்குச் 'சிந்தனை' என்ன செய்யும் என்பதைத் தெளிவாகச் சொல்லிவிடுகிறார்.

*"நான் மனிதன், இவ்வுலகத்தின் சிந்தனா சக்தி" என்றான் மேல் நாட்டு அறிஞன் எச்.ஜி. வெல்ஸ். " நான் மனிதன். இந்த உலகமே சிந்தனை மயம்" என்றனர் நம்நாட்டுத் தீர்க்க தரிசிகள்.*

*சிந்தனை இல்லாவிட்டால் ஞானமில்லை.; முன்னேற்றமில்லை. நாகரிகம் இல்லை. மனிதனுடைய சாதனை எல்லாம் சிந்தனையின் ஆற்றலைக் கொண்டுதான். எங்கு சிந்தனை தெளிவடைந்து பரந்து ஓங்குகிறதோ, அங்கே வாழ்க்கையில் வளம் பெருகும்; மனிதனுடைய பெருமை இடையீடின்றி ஓங்கி இலட்சிய சாகரமாகிவிடும்.*

*சிந்தனை வளர்வதற்குப் பல பொருட்களைப் பற்றிய அறிவு இன்றியமையாதது. இதை உணர்ந்து இந்தத் தேவையை நிறைவாக்கவே சிந்தனை மலர்கிறது.*

*" சென்றிடுவீர் எட்டுத் திக்கும்- கலைச்*

*செல்வங்கள் யாவும் கொணர்ந்திக்கு சேர்ப்பீர்"*

*என்று பாரதியார் இட்ட பணியைத்தன் இலட்சியமாகக் கொண்டு சிந்தனை இயங்குகிறது."*

என்று எழுதினார். மலிந்த நகைச்சுவையும், சூம்பல் சிந்தனைகளும் பத்திரிகைகளில் மலிந்து கிடந்தால் தான் மக்கள் வாங்குவார்கள். ஆனால் மிக உயர்ந்த கருத்துகளை மட்டுமே தாங்கிவரும் ஒரு பத்திரிகை வணிக ரீதியில் வெற்றிபெறும் என்ற தன்னம்பிக்கையோடு அதைத் தொடங்கினார் பேராசிரியர். அவருக்குப் பல தமிழறிஞர்கள் ஆதரவு கொடுத்தனர். அதில் எழுதிய ஒரு சிலரின் பெயர்களைப் பார்த்தாலே அது எவ்வளவு சிறப்புடைத்தாயிருந்திருக்கும் என்பது புலனாகும்

**சிந்தனை எழுத்தாளர்களில் சிலர்**

அ.சீ.ரா- கவிஞர் நாணல் வகுளாபரணன், இலக்கிய மதுகரம்

தமிழறிஞர் வையாபுரிப் பிள்ளை

கலாரஸிகர் கி. சந்திரசேகரன்

அறிஞர் ம. பெரியசாமித் தூரன்

பேராசிரியர். K.A. நீலகண்ட சாஸ்திரி

பேராசிரியர் டி எம் பி மகாதேவன்

இராஜாஜி

சிறுகதை ஆசிரியர் ப, சீநிவாசன்

கனம். அவினாசிலிங்கம் செட்டியார்

எழுத்தாளர் க. பஞ்சாபகேசன்

காந்திகிராமம் ஜி. இராமச்சந்திரன்

எழுத்தாளர் கரிச்சான் குஞ்சு

அறிஞர் பெ.நா அப்புசாமி

பேராசிரியர் டி வி இராமானுஜம்

திரு கௌஸல்யா நந்தனன்

எழுத்தாளர் வல்லிக்கண்ணன்

எழுத்தாளர் கி.ரா

அறிஞர் எஸ் இராமசாமி நாயுடு (இவர் சிந்தனையின் கௌரவ ஆசிரியராக இருந்தார்)

அறிஞர் சிட்டி

கவிஞர் துறைவன்

நீதிபதி. எஸ் மகராஜன்

இசைக்கவியரசு தி லக்ஷ்மணபிள்ளை

எழுத்தாளர் ந . பிச்சைமூர்த்தி

டாக்டர் வே ராகவன்

பேராசிரியர் இளந்திரையன்

எழுத்தாளர் சுகி சுப்பிரமணியன்

டாக்டர் எஸ் வி அனந்தகிருஷ்ணன்

பேராசிரியர் ராஸ்ரீ தேசிகன்

எழுத்தாளர் சிதம்பர ரகுநாதன்

எழுத்தாளர் மாயாவி

அறிஞர். தொமு பாஸ்கரத் தொண்டைமான்

எழுத்தாளர் தி ஜானகிராமன்

கவிஞர் தமிழொளி

பேராசிரியர் பி.ஸ்ரீ

கலாச்சரம் இராஜகோபால்

சுதேச மித்திரன் ஆசிரியர் சி.ஆர் சீனிவாசன்

பேராசிரியர் டி வி.சுவாமிநாதன்

எழுத்தாளர் ரா.கி. ரங்கராஜன்

பேராசிரியர் ஆர் . முத்துசிவன்

எழுத்தாளர் தே ப பெருமாள்

எழுத்தாளர் குகப்ரியை

தங்கம்மாள் பாரதி

இவர்களில் பலர் பேரறிஞர்கள். இலக்கிய ஜாம்பவான்கள்.

அக்டோபர் 1947ல் தொடங்கப்பெற்று செப்டெம்பெர் 1949 வரை சிந்தனை நடைபெற்றிருக்கிறது. கிட்டத்தட்ட இரண்டு ஆண்டுகள். அந்த இரண்டாண்டுகளில் அது தமிழுக்குச் செய்த சேவை பெரிது.

**ஆர்யா வரைந்த அட்டைப்படம்**



முதல் இதழுக்கு அட்டைப்படம் போட்டவர் பிரபல சுதந்திரப் போராட்ட வீரரும் சென்னைக் கோட்டையில் யாருக்கும் தெரியாமல் யூனியன் ஜாக் கொடியை இறக்கிவிட்டு இந்திய தேசியக் கொடியை ஏற்றியவருமான ஆர்யா அவர்கள். அவர் தான் பாரதியின் படத்தை

வரைந்தவர். அவர் வரைந்த அட்டைப்படம் பெரும் வரவேற்பைப் பெற்றது. அதே படத்தை மீண்டும் ஒரு இதழில் வெளியிடும் படி வாசகர்கள் கேட்டார்கள் என்றால் அந்தப் படத்தின் பெருமை புரியும்

சிந்தனை தனது பெயருக்கேற்றபடி இலக்கியத்தரமுள்ள கட்டுரைகளைச் சுமந்து வந்தது. இலக்கியம் மட்டுமன்று, வரலாறு, சமூகம் அரசியல், கலாச்சாரம், தத்துவம் ஆகிய துறைகளிலும் கட்டுரைகள் பவனி வந்தன. அந்தந்தத் துறையில் துறைபோகிய பெரியவர்கள் எழுதினார்கள்.

**வளரும் தமிழ்**

முதல் இதழிலேயே பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் வளரும் தமிழ் என்ற தலைப்பிலே மிகச் சிறந்த ஆய்வுக்கட்டுரை எழுதியுள்ளார்.. அதில் தமிழில் என்னென்ன மொழிச் சொற்களெல்லாம் கலந்துள்ளன என்று கலந்த சொற்களின் பட்டியல் கொடுத்திருக்கிறார். விவாதத்தைத் தூண்டிவிடுகிற மாதிரி "சங்க காலந்தொட்டு இந்நாள் வரை தமிழ்மொழி பிறமொழிச் சொற்களின் உதவியைப் பெற்று வந்துள்ளது. நமது மொழியறிவு வளர்ச்சியின் காரணத்தாலும் பிறகாரணங்காளாலும் அன்னிய மொழியை எடுத்துக்கொள்வதில் எப்பொழுதும் பின்வாங்கியதில்லை. சரித்திரபூர்வமாக இது உண்மை. இலக்கியம் எப்பொழுதும் புதுச் சொற்களை ஏற்றுக்கொள்வதற்குச் சிறிது தயங்கியே நிற்கும். செய்யுளால் அமைந்த இலக்கியங்கள் இவ்வாறு நிற்பினும் வசனத்தால் அமைந்த இலக்கியங்கள் முற்போக்கினைத் தழுவுதல் வேண்டும். வசன இலக்கியங்களைக் காட்டிலும் பேச்சுவழக்கில் நாம் விரிந்த மனப்பான்மையைக் கொள்ளுதல் வேண்டும். மேல்நாட்டு விஞ்ஞான சாஸ்திரங்கள் பற்றிய அளவில் நமது கல்வித் துறையில் இருப்பவர்கள் அறிவு வளர்ச்சி ஒன்றனையே முக்கிய நோக்கமாகக் கொண்டு ஆங்கிலம் முதலிய அன்னிய மொழிக் கலைச்சொற்களை எடுத்தாளுதலில் மிக விரிந்த மனபான்மையைக் கொண்டவர்களாய் இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் பிறநாட்டு மக்களோடு ஒப்ப விஞ்ஞான சாஸ்திரம் முதலியவற்றில் நாம் மேம்பாடு அடைய முடியும்" என்று எழுதினார். தனித்தமிழ் இயக்கம் சூடு பிடித்திருந்த

அந்தக்காலத்தில் இத்தைகைய சர்ச்சைக்குரிய கருத்துகளும் வெளியிடப்பட்டன.

K.A. நீலகண்ட சாஸ்திரி எழுதியிருக்கும் 'இலக்கியமும் சரித்திரமும்' என்ற கட்டுரை மிகவும் பயனுடையது. சில இலக்கியங்கள் எப்படி சரித்திரத்தை நிறுவுவதற்குத் துணை போகின்றன என்பதை அதில் விரிவாக எழுதியுள்ளார்.

"வருங்கால இந்தியா-என்கனவு" எனும் தலைப்பிலே ஒரு கட்டுரைத் தொடர் தொடங்குவதற்கான அறிவிப்பு செய்யப்பட்டுள்ளது.

*""நம்நாடு வருங்காலத்தில் எவ்வாறு பெருமையுடன் திகழும் என்பதைப்பற்றி நாம் ஒவ்வொருவரும் கனவு காண்கிறோம். என்றாலும் தெளிவும், இலட்சிய வேகமும் நடைமுறை எளிமையும் கொண்ட கனவுகளே நாம் நனவாக்கும் தகுதி பெற்றவை. வெவ்வேறு கோணத்திலிருந்து நாம் கண்ட கனவுகளை சிந்தனையின் மூலமாக வருகிற மாதத்திலிருந்து பல அறிஞர்கள் வெளியிடுவார்கள். மேற்கு வங்காளத்தில் உள்ள நம் தலைவர் இராஜாஜி இந்தப் பொருளைப்பற்றிச் சிறிய குறிப்பொன்றை அன்புடன் வழங்கி இந்தத் தொடரைத் தொடங்கி வைக்கிறார்கள்"*

**என் கனவு**

இராஜாஜியின் குறிப்பு:

*"வருங்கால இந்தியா நான் காணும் கனவு*

*எல்லாரும் நன்றாக உழைக்கவேண்டும். "ஊருக்கு எதுவேண்டும்? எனக்கு ஏற்பட்ட காரியம் எது? அதை எவ்வாறு நன்றாகச் செய்து சீக்கிரம் முடிப்பேன்" இந்த எண்ணம் மனதைக் கவர வேண்டும். எல்லாரும் இந்த முறையில் வாழ்க்கை நடத்த வேண்டும். இதுவே நான் காணும் கனவு. கண்ணன் கண்ட கனவும் இதுவே"*

இராஜாஜியின் குறிப்பு அவரது கையெழுத்திலேயே வெளியாகி இருக்கிறது.

புத்தக உலகம் என்ற தலைப்பில் புத்தக விமரிசனங்கள் வெளியாகியுள்ளன. வெறும் புகழுரையாகவோ இகழுரையாகவோ

அமையாமல் விமரிசிக்கப்படும் புத்தகத்தைக் கூர்ந்து படித்துத் தராதரம் தூக்கி எழுதப்பட்டுள்ள விமரிசனங்கள்.

செய்திக்கோவை எனும் தலைப்பில் ஒருமாதத்துச் செய்திகள் தொகுத்துக்கொடுக்கப்பட்டுள்ளன. அச்செய்திக்கோவையை இப்போது படித்தால், மாகாத்மாவின் உண்ணாவிரதம் காஷ்மீர் பிரச்சினை, ஜினாகாட் வஞ்சகம், ஹைதராபாத் போராட்டம் திருவாங்கூர் சமஸ்தான இணைப்பு , பாகிஸ்தானில் அராஜகம் போன்ற பல சரித்திரங்களை அறிந்துகொள்ள முடியும்.

**நாடகங்கள்**

சிந்தனைப்பத்திரிகையில் அ.சீ.ராவின் நாடகங்கள் பல வெளியாயின. மேல்நாட்டு இலக்கியப் போக்கோடு தமிழ்க்கலாச்சாரமும் இலக்கிய வழிமுறையும் பின்னிப் பிணையும் வகையில் புது உத்திகளைக் கையாண்டு தனது நாடகங்களை உருவாக்கினார். சிந்தனையின் இரண்டாவது இதழில் வெளியான அவரது ' நிலவு' என்ற நாடகம் பலராலும் பாராட்டப்பெற்றது. அந்த நாடகத்தில் பயன்படுத்தப் பட்ட உருதுச் சொற்களும் சம்பாஷணையும் நம்மைக் கதை நடந்த காலகட்டத்துக்கே அழைத்துச் சென்று விடுகின்றன. ஹுஸுர், அஸ்ஸலாமாஅலைகும், அலேகும் மஸ்ஸலாம்,காபிர், ஸல்லாஹுஅலைஹிவஸ்ஸலம், பிஸ்மில்லாநிர் ரஹ்மான் நிர் ரஹீம், போன்ற சொற்றொடர்கள் அந்த நாடகத்துக்கு வலிமையூட்டுகின்றன. பேராசிரியரின் நாடகங்களில் ஒரு தனித்தன்மை இருக்கும். நாடக வார்த்தையாடல் தொடங்குவதற்கு முன் அந்த நாடகக் களத்தை அவர் அறிமுகப்படுத்துவது மிகச் சிறப்பாக இருக்கும். கண்முன்னே அந்தச் சூழலைக் கொண்டுவந்து நிறுத்திவிடுவார்.

**துணிவா சுவையா?**

சிந்தனையின் நான்காவது இதழிலே 'நினைவுத்திரை' என்ற தலைப்பிலே அவரது நாடகம் ஒன்று வெளிவந்தது. காளிதாசனின் சாகுந்தலம் நாடகத்தின் முடிவை மிகத் துணிச்சலுடன் மாற்றி அமைத்த நாடகம் அது. அதற்குப் பலரிடமிருந்து கடும் எதிர்ப்பு வரும் என்பது அவருக்குத் தெரியும். என்றாலும் ஆராய்ச்சி நோக்கோடும் மனோதத்துவ

ரீதியாகப் பார்க்கும் போதும் அவரது முடிப்பிலும் நியாயம் இருப்பது புரியும்

அந்த நாடகத்துக்குத் தொடக்க உரையாக அ.சீ.ரா எழுதியிருப்பது:

*“காளிதாச மகாகவி எழுதிய ‘சாகுந்தலம்’ எனும் நாடகத்தின் கடைசிக் காட்சியை மிகுந்த துணிவோடு ‘நாணல்’ மாற்றி அமைக்கிறார். காளிதாசன் சொல்லும் கதை உங்களுக்குத் தெரிந்ததுதான். கண்வருடைய ஆசிரமத்தில் வளர்ந்து வந்த சகுந்தலையை, ஹஸ்தினாபுர மன்னன் துஷ்யந்தன் கண்டு காதலித்து, கந்தருவ விவாகம் செய்துகொள்கிறான். அப்போது கண்வர் ஆசிரமத்தில் இல்லை. கண்வர் திரும்பியதும் சகுந்தலை ஹஸ்தினாபுரத்திற்குச் செல்லுகிறாள். துர்வாச முனிவருடைய சாப வலிமையினால் சகுந்தலையை மறந்த துஷ்யந்தன் அவளை ஏற்க மறுக்கிறான். விவாகத்தின் அடையாளமாகத் துஷ்யந்தன் அளித்த மோதிரத்தைக் கைதவற விட்டுவிட்ட சகுந்தலைக்குத் தன்சொற்களைத் தவிர விவாகத்தை நிரூபிக்க வேறு சாட்சி எதுவும் இல்லை. நிர்க்கதியான இந்த நிலையில் சகுந்தலையை அவள் தாய் மேனகை வானத்திலிருந்து தோன்றி , இமயமலைச் சாரலில் உள்ள மரீசியின் ஆசிரமத்துக்கு அழைத்துச் செல்கிறாள். அங்கே துஷ்யந்தன் மகனான சர்வதமனன் பிறக்கிறான். மோதிரம் அகப்பட்டு விடுகிறது. அதைப் பார்த்ததும் துஷ்யந்தனுக்குச் சகுந்தலையின் ஞாபகம் வந்துவிடுகிறது. அவளைத் தேடித் திரும்பவும் அழைத்துவர வேண்டும் என்ற பேராவல் அவனுக்கு உண்டாகிறது. இந்த நிலையில் போரில் இந்திரனுக்குத் துணையாக, துஷ்யந்தன் இந்திரலோகம் செல்கிறான். அங்கிருந்து இந்திர விமானத்தில் மண்ணுலகம் திரும்புகிறான்.*

*விமானம் மரீசியின் ஆசிரமத்தில் இறங்குகிறது. அங்கே துஷ்யந்தன் சகுந்தலையையும் ,தன் மகனையும் காண்கிறான். பிறகு.....*

*பிறகு துஷ்யந்தனும் சகுந்தலையும் பழைய சம்பவங்களின் உண்மையை அறிந்து மனமொன்றி ஹஸ்தினாபுரத்துக்குத்*

*திரும்புகிறார்கள் என்பது காளிதாசன் நாடகத்தின் கடைசிக்காட்சி. சோக ரஸத்தின் எல்லையில் தோன்றும் சாந்தி ரஸத்தின் வடிவாய் இவ்வற்புதக் காட்சி அமைந்திருப்பதாகத் தாகுர் போன்ற சிறந்த கவிதா விமர்சகர்கள் எண்ணுகிறார்கள்.*

*இந்தக் காட்சியை மாற்றி அமைக்கத் துணிகிறார் நாணல். இதைச் செய்யலாமா? செய்தது மனத்தத்துவத்திற்குப் பொருந்தியிருக்கிறதா? கவிதைச் சுவை வேறுபடுவதனால் புதிய அனுபவம் ஏதாவது கிட்டுகிறதா? அல்லது நாணலின் துணிவு ஒன்றுதான் கண்ட பலனா?*

*தீர்ப்புக் கூற வேண்டிய பொறுப்பு உங்களைச் சார்ந்தது. தீர்ப்புச் சொல்லப் பலர் முன்வந்தால் அடுத்த இதழில் இது பற்றிய ஆட்சேப சமாதானத்தை வெளியிடலாம்."*

அந்த நாடகத்தில் என்னதான் மாற்றப் பட்டிருக்கிறது என்பதைச் சுருக்கமாகப் பார்க்கலாம்.

*சகுந்தலை: உங்கள் உள்ளத்தில் உள்ள பழைய காதல் வேகத்தில் பேசுகிறீர்கள். அதுவே எனக்குப் பயம் தருகிறது. பழைய சகுந்தலையாகவே என்னை இன்னும் பார்க்கிறீர்கள். உங்களோடு அரண்மனை புகுந்தால் நாலைந்து நாட்களில் உண்மை புலப்படும். தாமரை ஓடை அருகிலே நின்ற அழகி இவள் அல்லள் என்று உணர்வீர்கள். ........*

*துஷ்யந்தன்: உடலின் தளர்ச்சி அது இயற்கையின் விதி. .அது என் அன்பை மாற்றிடுமா?*

*சகுந்தலை: உங்கள் மனத்தில் மட்டுமல்ல . என்மனத்திலும் நினைவால் ஆகிய நெடும் திரை ஒன்று இருக்கிறது. அதை விலக்கிப் பழைய- பழைய- முன்போல் உங்களைப் பார்க்கவும் என்னால் முடியாது. உங்களைப் பார்க்கும் போதெலாம் சபையில் வீற்றிருந்த அரசன் வடிவம் உங்களை மறைக்கும். தாமரை ஓடையில் நாம் சந்தித்த அன்று , மலர்ந்த மலர்கள் எப்படி வாடி மறைந்தனவோ அதுபோலவே சகுந்தலையின் இளமையும் அந்தப் பழைய உறவும் வாடிவிட்டன.*

*'திரும்பவும் இல்லறத்தில் ஈடுபடாமல் விலகி நின்று பேரின்பத்தைப்பெற்றிட அனுமதிதாருங்கள்" என்று சகுந்தலை*

*வேண்டுகிறாள். அவளது உள்ளத்தைப் புரிந்து கொண்ட துஷ்யந்தன்*

*“சகுந்தலை , என்னோடு வர மறுத்தாய். ஆனால் வாராமலேயே வாழ்வினை உயர்த்தினாய். நீதான் என் வாழ்க்கைத் துணைவி” என்கிறான்*

*மறுக்கிறாள் சகுந்தலை*

*“ துணைவியா, அரசே, என்ன வார்த்தையிது, உய்பவனுக்கு அவன் ஞானமே துணை. இதோ ஆசிரமத்திலிருந்து உபநிஷத் வாக்கியம் வருவது காதில் விழுந்திடவில்லையா? ஞானம் என்ற தேர்ப்பாகன் கையிலே கடிவாளத்தைக் கொடுத்து ஆசைக்குதிரையை அடக்கி நிறுத்தினால், தேர் தானாகவே வீடு சேரும்”*

விடைபெற்றுக்கொண்டு மகனுடன் செல்கிறான் துஷ்யந்தன். இந்த நாடகத்தை ஒரு கேள்வியோடு முடித்திருந்தார் பேராசிரியர்.

“கவிதைச் சுவை வேறுபடுவதனால் புதிய அனுபவம் ஏதாவது கிட்டுகிறதா,அல்லது 'நாணலின் துணிவு ஒன்றுதான் கண்ட பலனா?”

இந்த முடிவு ஏற்புடைத்தா என்பதைப் பற்றி அடுத்த இரண்டு இதழ்களில் விவாதம் நடைபெற்றது. கி.சந்திரசேகரன் அவர்கள்(இவர் பாரதியின் தேசபக்திப் பாடல்களைப் பதிப்பித்த விடுதலை வீரர் ஜஸ்டிஸ் கிருஷ்ணசாமி ஐயர் அவர்களின் புதல்வர்) விரிவாக ஆராய்ந்து,

*“ நுட்பமான மனத் தத்துவ ஆராய்ச்சியை செய்துள்ளார் நாணல் என்பதில் ஐயமில்லை.சகுந்தலை தன்னை அடைந்த அரசனைத் தனக்குக் கிடைத்த அவகாசத்தை வீணாக்காமல் நிராகரிப்பதாக வைப்பது சாமான்ய மாந்தர்களின் உள்ளக்கிடைக்குப் பொருத்தமாய்த் தோன்றும். காளிதாசருடைய சகுந்தலைக்குப் பொருந்தாது. அவ்வளவுதான்”* என்றார்.

பொ. சுந்தரமூர்த்தி நாயனார் என்பவரும் நாணலின் முடிவு ஏற்புடைத்தாயில்லை என்கிறார்.

பேராசிரியர் டி.வி. சுவாமிநாதன் நாணலுக்கு ஆதரவாக அழகான வாதங்களை அடுக்குகிறார்

ஐரோப்பியக் கவிஞர் கதே, மகாகவி தாகுர் இவர்களை மேற்கோள் காட்டி நாணல் கொடுத்திருக்கும் புது முடிவே நாடகத்துக்குப் பொலிவூட்டுகிறது என்கிறார்.

"சாகுந்தலத்தின் கடைசிக் காட்சிக்கு 'நினைவுத்திரையில்' நாணல் தரும் மாறுபட்ட வடிவமைப்பு ரசனை உணர்விற்குப் புதியதொரு இலக்கிய இன்பத்தைத் தருவதுடன் மனத்தத்துவத்திற்கு இயைந்த பண்பட்ட முடிவாகவும் பரிணமித்துள்ளது". என்கிறார்

வித்துவான் என். ஆறுமுகனார் என்பவரும் நினைவுத்திரையின் முடிவை வரவேற்றுள்ளார்.

*"நாணல்' சாகுந்தல நாடகத்தின் கடைசிக் கட்டத்திற்குக் கொடுத்திருக்கும் புது மெருகு சாகுந்தல நாடகத்துக்கு ஒரு முத்தாய்ப்பு வைக்கிறது. தெளிந்த நீரோடை தன்னுள் கிடக்கும் பொருள்களைத் தெள்ளத் தெளியக் காட்டுவதுபோல் கலை ரகசியத்தைப் பளிங்குபோல் காட்டுகிறது. ஆகவே மனோதத்துவ ரீதியாகப் பார்த்தாலும் புதிய அனுபவங்கள் கிட்டுகின்றனவா என்ற முறையில் பார்த்தாலும் நாணல் துணிகரமாகப் புகுந்து மாற்றியது வரவேற்கத் தகுந்ததே!"* என்கிறார்.

இவ்விமரிசனங்கள் வெளியானை இதழுக்கு அடுத்த இதழில் நாணல் பதில் சொல்லாமல் அதற்கு அடுத்த இதழில் தனது எண்ணத்தை வெளிப்படுத்துகிறார். அந்தக் கட்டுரையே ஒரு அற்புதமான இலக்கிய தரிசனமாக அமைந்து விடுகிறது. முடிவை மாற்றியது கற்புடைய பெண்ணின் மரபுக்கு ஒவ்வாது என்ற மறுப்புக்கு அவர் கொடுத்திருக்கும் பதில் மிகத்தெளிவாக அமைந்திருக்கிறது.

*"கலைக்கண்ணோடு பார்க்கும் போது 'நினைவுத் திரை'யின் முடிவு 'சாகுந்தல'த்தின் முடிவுக்கு உவந்ததா என்பது ஒரு கேள்வி. இதைப்பற்றி நான் ஒன்றும் கூற இயலாது. ஒவ்வொருவிதமான சுவை ஒவ்வொருவருக்கும் பிடித்தமாக இருக்கும். "நினைவுத்திரை'யில் பெறுகின்ற சுவை வேறுவிதமானது. அதைப் பூரணமாக ஆசிரியன்*

*காட்டியிருக்கிறானா என்பதுதான் நியாயமான கேள்வி. காளிதாசனுடைய நாடகத்தை மாற்றி அமைக்க முற்பட்ட என் துணிவை இப்போது எண்ணிப் பார்க்கும் போது, எனக்கே வியப்பாக இருக்கிறது., வெட்கமாகவும் இருக்கிறது. மனோதத்துவ ரீதியில் சிறிதளவு வெற்றியும் , புதிய சுவையொன்றைப் பெறவேண்டுமென்பதில் சிறிதளவு வெற்றியும் என்முயற்சிக்குக் கிடைத்திருந்தால் என்னைவிட மகிழ்ச்சி அடைபவர்கள் இருக்க முடியாது. 'நினைவுத் திரை'யின் நோக்கத்தைச் சொன்னேன். அதை நிறைவேற்ற முயன்றபோது எந்தெந்தச் சிந்தனையின் போக்குக்கு இசைய என் கற்பனை சென்றது என்பதைச் சுருக்கமாகக் குறிப்பிட்டேன் ஆனால் ஒரளவாவது பண்புடைய நாடகம் என்முயற்சியால் உருவாகிவிட்டதா என்பதைப் பற்றி நான் என்ன சொல்லிவிட முடியும்.? மற்றவர்கள் முடிவு செய்யவேண்டிய விஷயம் இது. ரஸிகர்களுடைய தீர்ப்புக்குத் தலைவணங்குவதுதானே நாணலின் இயல்பு."* என முடித்துள்ளார்.

திரைப்பட விமரிசனம்

'சிந்தனை'ப் பத்திரிகை வியாபார ரீதியாக அவ்வளவு லாபகரமாகச் செல்லவில்லை. விளம்பரம் தேவைப்பட்டது. ஆனால் விளம்பரத்தை வெளியிடுவதில் கூட அதன் ஆசிரியர் புதிய அளவுகோல் வைத்திருந்தார். சில திரைப்படங்களின் விளம்பரங்கள் சிந்தனையில் வெளிவந்தன. அதிலும் ஒரு சிக்கல் விளைந்தது. சந்திரலேகா படத்தைப் பார்த்து விட்டு விமரிசனம் எழுதினால்தான் அந்தப் படத்தின் விளம்பரத்தைச் சிந்தனைக்குத் தரமுடியும் என்று அந்தப் படத்தைத் தயாரித்த எஸ் எஸ் வாசன் சொல்லிவிட்டார். சினிமா விமரிசனங்கள் எழுதுவதில்லை என்ற நிலையிலிருந்து இறங்கவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. என்றாலும் அந்த விமரிசனத்தையும் இலக்கிய நயத்தோடு வெளியிட்டார். அதுமட்டுமன்று . குறைகளைச் சுட்டிக்காட்டவும் தயங்கவில்லை. 1949 ஜனவரி இதழில் இந்திக்காரர்களே வியக்கும் அளவுக்கு மொழியாக்கம் செய்யப்பட்டிருப்பதைப் பாராட்டிவிட்டுச் சில பாடல்களை இன்னும் மிருதுவாகப் பாடியிருந்தால் இசையின் ரம்மியம் பெருகியிருக்கும் என்று தோன்றுகிறது என்று எழுதினார்.

கிருஷ்ணபக்தி என்ற படத்துக்கு கனி என்ற முகமதியரை விமரிசனம் எழுதச் சொன்னார். அந்த விமரிசனத்தில் பக்திப் பரவசம் ததும்பும் நடிப்பிற்கு டி ஆர் ராஜகுமாரி சற்றும் பொருத்தமில்லமல் இருப்பதைக் குறிப்பிடவேண்டியதாகிறது என்று கனி எழுதினார். விமரிசனம் சரியான திறனாய்வாக அமைந்தது.

சிந்தனைப் பத்திரிகை இலக்கிய விமரிசனத்துக்கு முக்கியத்துவம் தந்தது. பேராசிரியர் மிகச் சிறந்த இலக்கிய விமரிசகராக இருந்த காரணத்தால் சிந்தனையில் வெளியான பல இலக்கிய விமரிசனக் கட்டுரைகள் மிகத் தரம் வாய்ந்தனவாக இருந்தன.

**நக்கீரர்கள் வேண்டும்**

இலக்கிய விமரிசனம் எப்படி அமைய வேண்டும் என்பதை விளக்கும் வகையில் ஒரு அருமையான கட்டுரை பேராசிரியர் எழுதினார். "நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே" என்று வாதாடிய நக்கீரனின் விமரிசனம் சரிதானா என்பதை ஆராய்கிறது அந்தக் கட்டுரை. நக்கீரன் இந்தக்காலத்துக்கும் தேவை என்பதைச் சுட்டிக்காட்டிய பேராசிரியர் கொங்குதேர் வாழ்க்கைப் பாடலுக்கு மறுப்பாகப் பெண்களின் கூந்தலுக்கு இயற்கை மணம் கிடையாது என்று வாதாடியது ஒரு சரியான இலக்கிய விமரிசனம் அல்ல என்கிறார்.

பேராசிரியர் எழுதுகிறார்

*"இலக்கிய விமரிசனம் என்பது ஒரு கலை. இலக்கியம் எவ்வளவு முக்கியமானதோ அவ்வாளவு முக்கியமானது இலக்கிய விமரிசனம். இலக்கிய வளர்ச்சிக்கே இவ்விமரிசனம் இன்றிமையாத சாதனம். உண்மையும் தீரமும் உறுதியும் படைத்த இலக்கிய விமரிசனம் தற்போது தமிழருக்குத் தேவை என்பதுதான் என்னுடைய கட்சி. ஆகவே தான் நக்கீரர்கள் வேண்டும் என்கிறேன்.*

**நக்கீரன் கட்சி நியாயமானதா?**

இதனால் கதையிலே தோன்றும் நக்கீரன் செய்யும் இலக்கிய விமரிசனம் சரியானது என்பது என் கருத்தன்று. அந்தக் கதை உண்மை நிகழ்ச்சிகளைச் சொல்லுகிறதோ என்னவோ, கதையைக் கட்டியவன் மனத்தில் அதாவது தமிழனுடைய மனத்தில் ஒரு காலத்தில் நக்கீரனின் கட்சி நியாமமானது நக்கீரன் கையாண்ட விமரிசன முறை ஒழுங்கானது என்ற எண்ணம் இருந்திருக்க வேண்டும்[ இப்போதும் பல தமிழறிஞர்களிடையே இந்த எண்ணம் இருந்துவருகிறது. நக்கீரன் கட்சி நியாயமானதா என்று முதலில் பார்ப்போம்.

பாட்டைப் பார்ப்போம்,

“கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியுது கெழீஇய நட்பின் ம்யிலிலியற்
செறியெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே!”

பாட்டிலே பேசுவது ஒரு காதலன். தன் காதலி தன்னோடு பழகியதை எண்ணுகிறான். மயில் போன்ற அவள் சாயலை எண்ணுகிறான். அவளுடைய நெருங்கிய பல் வரிசையை எண்ணுகிறான். 'அட தும்பி, எத்தனையோ பூக்களைப் பார்த்திருக்கிறாயே, என் காதலியின் கூந்தலைவிட வாசனை பொருந்திய பூக்களை நீ கண்டதுண்டோ, சொல்?” என்று கேட்கிறான். காதலன் ஒருவனுடைய அன்பின் வேகம் பாட்டில் வடிவாகிறது. அருமையான பாட்டு என்று நீங்களும் நானும் நினைக்கிறோம்.

ஆனால் நக்கீரன் சொன்னது தெரியுமல்லவா? 'கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டா “ என்று கேட்டுப் பாட்டைக் குறைகூறினான், நக்கீரன். இறைவனாலும் சமாதானம் கூறமுடியவில்லை என்று சொல்லும்போது நக்கீரன் எழுப்பிய தடை நியாயமானது என்ற கருத்து உதயமாகிறது. உண்மையில் இந்தக் கதையில் வரும் நக்கீரன் இலக்கியத்தின் இயல்பை

*உணரவில்லை. இலக்கியம் எதைப் பற்றிப் பேசிய போதிலும் உண்மையில் அது பேசுவது மனித அனுபவத்தப் பற்றியே என்பதை இந்த நக்கீரன் எண்ணவில்லை."*

*இறையனாரும் உணரவில்லை*

*உலகத்திலே உள்ள காட்சிப் பொருட்களைப் பற்றியெல்லாம் இலக்கியம் பேசுகிறது. உண்மைதான். ஆனால் எந்த முறையிலே எந்த நோக்கோடு பேசுகிறது என்பதைக் கவனிக்க வேண்டும். காட்சிப் பொருள்ளைக் காட்சிப்பொருளாக அல்ல, கருத்தை எழுப்பிய கருவியாகவே இலக்கியம் பேசும். ஆகவே இலக்கியத்தில் காதலியின் கூந்தல் மணமுடயதாகும். இது போலவே தாமரை விளக்கம் தாங்கும், கொண்டல் முழவம் பரிமாறும். மயில் பரத நாட்டியம் புரியும், குவளை கண் விழித்து நோக்கும். கவிஞன் கற்பனயில் உதித்த மாருதம் என்ற அரசி கொலுவீற்றிருப்பாள். இலக்கிய உலகிலே சென்றால் இவை போன்ற அற்புதங்கள் எத்தனையோ தென்படும். உள்ளதை , அதாவது வெளியிலே உள்ள காட்சிப்பொருள்களை- புறநிகழ்ச்சிகளை அல்ல- அவற்றைக்காணும் உள்ளத்தில் எழும் பல்வேறு விதமான சிந்தனைகளை உணர்ச்சிகளை பாவனைகளையல்லவா இலக்கியம் சித்தரிக்கிறது! இதை நம்முடைய கதையிலே தோன்றும் நக்கீரன் உணரவில்லை இறையனாரும் உணரவில்லை."*

நெற்றிக்கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே என்ற நக்கீரனைக் குற்றம் சொல்வதற்கும் ஒரு துணிவு வேண்டும். இதுவரை எதைச் சொல்லிச் சொல்லி நாம் மார்தட்டிக்கொண்டிருந்தோமோ அதைக் குறை சொல்ல ஒருவர் துணிகிறார் என்றால் அவரது மனம் உண்மை என்று கண்டதை உறுதியாக- அதாவது அந்த நக்கீர பாணியிலேயே- சொல்வதைப் பாராட்டத்தானே வேண்டும்!

மேலும் அந்தக் கட்டுரையில் இலக்கிய விமரிசனம் தமிழ்நாட்டில் முறையாகக் கைப்பற்றப் படவில்லை என்பதையும் அதற்கு வழிமுறைகள் என்னவென்பதையும் மிக விரிவாகப் பேசுகிறார்.

தமிழில் இலக்கிய விமரிசனங்கள் பெரும்பாலும் இலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டே நடைபெறு கின்றன. உண்மையான இலக்கியப் பண்பைப் பார்ப்பதில்லை. உரையாசிரியர்கள் கூட இலக்கியத்திற்குக் கருவியாக அமையும் பாஷையோடு நின்றுவிடுகிறார்கள்.

### இலக்கண விமரிசனம்

*'காமம் செப்பாது கண்டது மொழிமோ'என்ற அடியிலே 'மோ' என்பது முன்னிலை அசை என்பார்கள், பேசாத தும்பி பேசக்கூடியதாகக் கருதப் படுதற்கு பழைய தொல்காப்பிய விதியான "சொல்லாமரபினவற்றோடு கெழீயிச் செய்யா மரபிற்றொழிற் படுத்தடக்கியும்' என்பது இடந்தருகிறது என்பார்கள். 'தும்பி' என்பது முன்னிலையாக்கல், 'கண்டது மொழிமோ' என்றது சொல்வழிப்படுத்தல், 'கூந்தலின் நறியவுமுளவோ' என்றது நன்னயமுரைத்தல் என்றெல்லாம் பேசுவார்கள் பாட்டின் அருமையை அது எவ்வாறு கவிதை ஆகிறது என்பதை மறந்து விடுவார்கள். இலக்கியம் என்பது ஒரு கலை. அதன் கருவியான மொழியைப் பற்றிய நுட்பமான ஆராய்ச்சி நம்மிடம் உள்ளது. ஆனால் கலையில் பண்பைப் பற்றிய ஆராய்ச்சியை நாம் செய்யவேண்டும்.*

*இலக்கியத்தின் பெருமையை உணர்வதற்கும் அதை அனுபவிப்பதற்கும் விமரிசனம் வழிகாட்டவேண்டும். விமரிசகன் இலக்கணத் தராசைக் கையிலேந்தி இலக்கியத்தை நிறுக்கும் நக்கீரனல்ல. இலக்கியத்திற்கு ஓயாமல் பொருள்விளக்கமும் இலக்கணக் குறிப்பும் தரும் உரையாசிரியன் அல்ல."ஓகோ' என்று களித்து. 'சீசீ' என்று ஒதுக்கும் குழந்தையும் அல்ல. பிரபஞ்சத்தைக் கண்டு தன்மனத்தில் எழும் அனுபவத்தைச் சொல்லில் தேக்குவது இலக்கியமானால், இலக்கிய விமரிசனம் அந்த இலக்கியத்தைத் தெளிவாக்கி, அது எவ்வாறு கலையாகிறது என்பதைத் தத்துவ ரீதியில் ஆராய்ந்து, அனுபவத்தின் எல்லை நிலமான ஆனந்தித்திற்கு அழைத்துச் செல்வதே! இதனால் மொழி வளரும், இலக்கியம் வளரும், தத்துவ விசாலம் ஏற்படும், கலானுபவம் சித்திக்கும், ஸஹ்ருதயம்*

*, அதாவது கலைஞனோடு ஒன்றி நின்று அவன் பெற்ற ஆனந்தத்தைப் பெறும் அபூர்வ சக்தி தானாகவே நம்மை வந்தடையும்."*

என்ன அருமையான பார்வை! நக்கீரனானாலும் குற்றம் குற்றம்தான் என்று நக்கீரனையே குறைகாணும் இலக்கியக்கூர்மையும் துணிவையும் கொண்டிருந்தார் அ.சீ.ரா.

சிந்தனைப் பத்திரிகை அவர் எண்ணிய படி பல இலக்கிய விமர்சனங்களைத் தாங்கி வெளிவந்தது.

**வியந்தனர் வெளிநாட்டார்**

பேராசிரியரின் இலக்கிய விமரிசனப் புதுமைக்கு ஜஸ்டிஸ் மகராசன் ஒரு சான்று பகர்கிறார்:

"மலேசியத் தலைநகரம் கோலாலம்பூரில் உலகத் தமிழ் மாநாட்டில் பேராசிரியர் கலந்து கொண்டார். அங்கே வந்த வெளிநாட்டுப்பிரதிநிதிகள் பலருக்கு மொழியியலிலும், வரலாற்றிலும் தான் ஆர்வம் இருந்ததே தவிர இலக்கிய விமரிசனத்தில் அவர்கள் ஆர்வம் காட்டவில்லை. தமிழ்நாட்டுப் பிரதிநிதிகளைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். பலருக்கு இலக்கிய விமரிசனத்தின் நுட்பங்கள் தெரியவே இல்லை. இந்த பின்னோட்டத்தில் இலக்கிய விமரிசகரான அ.சீ.ரா தனியாகத் தெரிந்தார்.

அங்கே அவர் ஆண்டாளைப் பற்றிப் பேசும் போது,கீழ்க்காணும்ட பாடலைச் சொன்னார்

*"பாசி தூர்த்துக்கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள்*

*மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாய்*

*தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்*

*பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே"*

பேராசிரியர் இதை மேல்நாட்டு அறிஞர்களுக்கு விளக்கும் போது,

*“தெய்வீகக் காதலனுக்கு அவள் சொல்கிறாள்’ நீ வரவில்லை. அது எதிர்பார்த்ததுதான். தூசிபடிந்த இந்த பூமி என்னும் பெண்ணுக்காக, நீரால் கழுவப்பெறாமல் , மானமில்லாப் பன்றியாய்த் திரிந்தவன் தானே.!வேறு எப்படி இருப்பாய்?”* என்றார்.

பன்றி என்று இறைவனைக்குறிப்பிடும் தத்துவார்த் தப்பார்வைக்குப் பழக்கப்படாத அவர்கள் தவறாகப் புரிந்து கொள்ளப் போகிறார்களே என்பதற்காக, உடனே தொடர்ந்து

*“இப்பொழுது நான் சொன்னதை’ பிரான்ஸிஸ் தாம்சனின் வேட்டை நாயோடு ஒப்பிட்டுப்பாருங்கள் புரியும். பிரான்ஸிஸ் தாம்சனின் நோக்கு ஒரு தனிமனிதனின் பார்வை. ஆனால் எங்கள் ஆண்டாளின் நோக்கு வைணவ சித்தாந்தத்தின் வெளிப்பாடு”* என்றார்.

வெளிநாட்டினர் அவரது பேச்சில் மயங்கினர்.

**மனத்தினால் வாக்கால்..**

மகாராஜன் மேலும் சொல்கிறார்

*“ சில ஆண்டுகட்கு முன்பு கோயம்புத்தூரில் நடந்த இலக்கிய நிகழ்ச்சியில் அதுவரை விடுபடாத ஒரு புதிரை விடுவித்தார். அதுவரை பண்டிதமணி, சோமசுந்தரபாரதி போன்றவர்களால் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்ட புதிர் அது. அக்னிபிரவேசத்தின் போது சீதை தீயை வலம் வந்து*

*“மனத்தினால் வாக்கால், மறுவுற்றேனெனில்*

*சினத்தினால் சுடுதியால் தீச்செல்வா” என்கிறாள். அவள் ஏன் ‘மெய்யால் ’ என்று சொல்லவில்லை என்பதுதான் புதிர்.*

*“If I have been sullied*

*In mind or speech,*

*Burn me, oh, Fire-God,*

*With all thy ire.” என்பது பேராசிரியரின் ஆங்கில ஆக்கம்.*

*விடை காண முடியாமல் அறிஞர்கள் திணறிய இந்தப் புதிருக்குத் தீர்வை அந்தக் கோயம்புத்தூர் நிகழ்ச்சியில் சொன்னார் பேராசிரியர்.*

*ஷேக்ஸ்பியரின் நாடகமான ஒதெல்லோவில் வில்லன் இயாகோ ஒதெல்லோ மன்த்தில் சந்தேகத்தைத் தோற்றுவித்துவிடுகிறான். அதைக்கேட்டுவிட்டு ஒதெல்லோ டெஸ்டிமோனாவைச் சொல்லத்தகாத வார்த்தையால் திட்டுகிறான். அப்பொழுது ஒன்றும் தெரியாதவன் போல் இயாகோ வருகிறான். அவனிடம் டெஸ்டிமோனா கேட்கிறாள்*

*" எனக்கு அந்தப் பெயரா இயாகோ?"*

*"எந்தப் பெயர் ராணி?"*

*"இதோ இவள் சொல்கிறாளே நான் அது என்று அவர் சொன்னாரென்று."*

*" Am I that name Iago?"*

*Iago: What name, fair lady?*

*Des: Such as she says my lord doth say I was."*

ஒதெல்லோ சொன்னதாகச் சொல்லப்படும் அந்தச் சொல்லைக் கூடச் சொல்லுவதற்கு அவளது கற்புத்தடுக்கிறது. சீதைக்கும் அதே நிலைதான். "மெய்"தூய்மைபற்றிய களங்கம் மக்களால் கற்பனை செய்து பார்க்க இயலும். கதைகட்டிவிடவும் முடியும். எனவே அதைச் சொல்லக் கூசுகிறாள் சீதை. இந்தத் தீர்வை பேரறிஞர்கள் ஏற்றுக்கொண்டனர்.

**இலக்கிய நிருபர்**

பேராசிரியரின் எழுத்துத் திறமை இலக்கிய விமரிசனத்தில் மட்டுமன்று ஒரு பார்வையாளனாகக் கண்ட, கேட்ட செய்தியைத் தருவதிலும் தெரிந்தது. ஒரு பத்திரிகையாளனின் அனுபவம் அதில் திகழ்ந்தது. ஒரு இலக்கியவாதி பத்திரிகை நிருபராகச் செயல்பட்டால் எப்படி இருக்கும்?

ஒரு சான்று பார்க்கலாம். இராஜாஜி அவர்கள் கவர்னர் ஜெனரலாகப் பதவியேற்றபின் முதன் முதல் சென்னைக்கு விஜயம் செய்தபோது அவரது நிகழ்ச்சிகளுக்குச் சென்று அவற்றைப்பற்றி 'சிந்தனையில்' எழுதினார்.

*"இராமனுடைய பட்டாபிஷேகத்தை வருணிக்கும் கம்பன் உத்தமனாகிய இராமன் முடிசூடியதும் அந்தப் பொன்முடி முவுலகத்தோர்க்கும் தத்தமது உச்சியின்மேல் வைத்ததை ஒத்தது என்று பேசுகிறான். இது எவ்வளவு உண்மை என்பதை சென்னைவாசிகள் நேரிலேயே அனுபவித்தார்கள். 'நமது இராஜாஜீ" என்ற பெருமிதமே ஒவ்வொரு உள்ளத்தையும் பூரிப்படையச் செய்தது. இவ்வளவு கோலாகலத்திடையேயும் சிறிதும் அமைதி குன்றாமல் சமபாவத்தோடு ஒருவர் இருந்தார் என்றால் நமக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கும். அவ்வாறு தாமரை இலைப் பனித்துளி போலப் பட்டும் படாமல் இருந்து ஒளிவீசியவர் வேறொருவருமில்லை. இவ்வளவு விமரிசைக்கும் மத்திய புருஷராக விளங்கிய ராஜாஜீதான்."*

உன்னதமான பதவியில் இருக்கும் ஒருவர் அப்பதவிக்குரிய கௌரவங்களையும் மரியாதைகளையும் பெறும் போது அவை தமக்காக அளிக்கப்பட்டவை என்றெண்ணி மயங்குவது சாதாரணம். இந்த மயக்கத்தில் பதவிக்கு வருமுன் தான் விரும்பி வளர்த்த உறவுகளைக் கேவலமாகக் கருதுவதும் அவற்றை நினையாமல் இருப்பதும் சகஜம். ஆனால் ராஜாஜீயின் தெளிந்த சிந்தனை எதைக் கண்டது? இந்தப் பதவி சிறிது காலத்துக்குத்தான் என்பதை. மிக உருக்கமாக அவர் பேசினார் ' நான் என் நண்பர்கள் ஒவ்வொருவர் வீட்டிற்கும் போய் அளவாவி வரவே ஆசைப் படுகிறேன் ஆனால் மூன்று நாட்களில் அது முடிகிற காரியமா? இல்லையே, ஆனால் எனக்கு ஒரு ஆறுதல். கூடிய விரைவிலேயே இந்தப் பதவியின் பொறுப்பெல்லாம் நீங்கி நான் சுதந்திரம் பெறுவேன். அப்போது ஒவ்வொருவர் வீட்டுக்கும் வருவேன் பழைய நண்பனாக. ஆனால் அப்போது என்னை வரவேற்க நண்பர்கள் ஆசைப்படுவார்களோ என்னவோ?"

மேடை அலங்காரம், வந்தவர்கள் யார்யார் , வரவேற்பு, நன்றியுரை என்றெலாம் செய்தி கொடுக்காமல் ஒரு இலக்கிய நயத்தோடு செய்தியைக் கொடுத்தது சிறப்பு. அந்தச் செய்தியை அவர் முடிக்கும் அழகைப் பாருங்கள். யாரைப்பற்றிய செய்தியோ அவரை முழுமையாகப் படம்பிடித்துக் காட்டிவிடுகிறது.

*""இராஜாஜீ தமிழ் நாட்டுக்குத் தந்த அனுபவ சித்தாந்தம் இது. "மற்றவர்களை அறிய முற்படுங்கள்.: அவர்களிடத்தில் அன்பு*

*செலுத்துங்கள்; அவர்களுக்காக உங்களை மறவுங்கள், அப்பொழுது உங்களை மட்டுமல்ல., உலகையே நீங்கள் வென்றுவிடுவீர்கள். சிந்தனையின் எல்லை நிலத்திலிருந்து இந்த உண்மை வருகிறது. விருப்பு வெறுப்புகள் , குறுகிய ஆசைகள், நம்மைக் குருடாக்கும் மிருக உணர்ச்சிகள் இவற்றையெல்லாம் கடந்து, எந்நிலையிலும் ஒரே நிலையில்" ஓடும்செம்பொன்னும் ஒக்க நோக்கும்' அனுபவ ஞானியின் குரல் இது. ராஜாஜீயின் சென்னை விஜயத்தின் போது நம் காதில் விழுந்தது இந்தக் குரல். நம் கண்ணில் தென்பட்டது வாழ்க்கை என்ற தாமரை இலைமேல் பற்றில்லாமல் நின்று ஒளி வீசும் உன்னதமான தியாக வடிவம்."*

சிந்தனையில் வெளிவந்துள்ள சில கட்டுரைகள் கவிதையைப் பற்றிப் பேசுகின்றன. பேராசிரியர் அவர்கள் 'நாணல்' என்ற பெயரில் கவிதை எழுதியது நமக்குத் தெரியும். சிந்தனைப் பத்திரிகை இலக்கியத்திற்குச் சேவை செய்யும் வகையில் இலக்கியத்தின் ஒவ்வொரு துறையிலும் தனது முத்திரையைப் பதித்தது. பாதுகாத்து வைக்க வேண்டிய பத்திரிகையாக அது வெளிவந்தது. சிந்தனையில் மலிவான செய்திகள் வெளியிடப் படவில்லை. தரமானதுதான் சிந்தனையில் வெளியாகும் என்று நம்பிக்கையை அது நிலைநிறுத்தியது. நகைச்சுவை அங்கங்கே கட்டுரைகளில் தான் வெளியாயிற்று. தனியான துணுக்குகளுக்கு அதில் இடமில்லை. எனவே சிந்தனைப் பத்திரிகைக்குப் பதிவு செய்த சந்தாதார்களே அதிகம் இருந்தனர். மலிவான கிளர்ச்சியைக் கொடுக்கும் பத்திரிகைகளை விரும்புகிற பொது மக்கள் பத்திரிகைக் கடைகளில் சிந்தனையை அவ்வளவாக வாங்கவில்லை. அதனால் சிலசமயங்களில் சிந்தனை அலுவலகத்தைச் சேர்ந்தவர்களே தெருவில் நின்றுகொண்.டு கூவிக் கூவி விற்றதுவும் உண்டாம்.

ஆய்வுக்கு வாய்ப்பளிக்கும் பத்திரிகையாக அது இருந்ததால் மற்ற இடங்களில் வெளியிட முடியாத தமது ஆய்வுக் கட்டுரைகளை சிந்தனையில் வெளியிட்டு அதன் தரத்தை உயர்த்தினார் அ.சீ.ரா . எனவே அறிஞர்கள் மத்தியில் அதற்கு நல்ல பெயர்.

கவிதையைப் பற்றி அருமையான கட்டுரை ஒன்றைப் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை எழுதியிருக்கிறார்.அதில் கவிதையின் பல்வேறு வரையறைகளையும் தன்மைகளையும் பற்றி எழுதியுள்ளார்.

கவிச் சிற்பம்

அ.சீ.ரா கவிச்சிற்பம் என்ற தலைப்பில் அதில் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். கவிதையைப் பற்றி சிந்தனை பல இதழ்களில் பேசப்படுகிறது. அக்கட்டுரைகள் ஆய்வின் வெளிப்பாடுகள்.

அக்கட்டுரையில் கவிதை என்பது எப்படி இருக்கவேண்டும் என்பதைத் தெளிவாகச் சொல்லிவிடுகிறார். அப்படித் தன் கருத்தை நிலை நாட்டும் போது பல பெரிய பக்திமான்களின் பாடல்களைக் கவிதை இல்லை என்று ஒதுக்கவும் அவர் தயங்கவில்லை.

*"மனம் என்று ஆழம் காணமுடியாத கடல் இருக்கிறதே அதிலிருந்து எத்தனையோ பொருள்களைக் கவிஞனும் தேடித் தருகிறான். ஆனால் செம்படவன் பிடிப்பதெல்லாம் மீனாகிறதா? அன்று திருவொற்றியூர்க் கடற்கரையில் தான் வலைவீசிப் பிடித்த பழைய சாக்கைக் காட்டிச் சிரித்துக்கொண்டிருந்தான் ஒரு வலைஞன். கலைஞன் கதையும் இப்படித்தான். அவனுடைய சிந்தனைத் தூண்டிலில் தன்னுணர்வு வலையில் சிக்குகிற மீன்கள் எத்தனையோ? என்றாலும் அவையெல்லாம் கவிதையாவதில்லை. அப்படியானால்-..... இருங்கள் , அதைத்தானே பார்க்கப் போகிறோம். இதோ நம் முன்னே இலக்கியச் சந்தையில் , கவிஞன் என்ற செம்படவன் கொண்டுவந்துள்ள பொருள்கள் குவிந்து கிடக்கின்றன. சிலவற்றைப் பார்க்கலாம். எது கவிதைப் பொருள் என்று தீர்மானிக்கலாம்.*

*முதலிலே தென்படுவது சந்த விருத்தம் ஒன்று. அதைச் சொல்லிப் பார்ப்போம்.*

*"ஆறுமாறும் ஆறுமாய், ஓரைந்துமைந்தும் ஐந்துமாய்*
*ஏறுசீர் இரண்டு மூன்றும் ஏழுமாறு மெட்டுமாய்*
*வேறு வேறு ஞானமாகி மெய்யினோடு பொய்யுமாய்*

*ஊறோ டோசை யாய வைந்துமாய ஆய மாயனே!"*

*பாட்டைக் கேட்டீர்கள் அல்லவா?. எண்சுவடியும் பெருக்கல் வாய்பாடும் ஞாபகத்துக்கு வருகின்றன. எண்களைக் குறிக்கும் சொற்களை ஒன்றாய் அடுக்கியவுடன் நமக்குப் பிரமிப்பு ஏற்படுகிறது. பாட்டின் பொருள் என்ன என்று கேட்கிறோம். வைணவ சித்தாந்தத்தை அறிந்தவர்கள் இந்தப் பாட்டிலே மிக உயர்ந்த தத்துவங்கள் குறிக்கப் பெறுகின்றன என்பார்கள். இருக்கலாம். பாட்டு சிறந்த பக்திமானாகிய திருமழிசை ஆழ்வார் இயற்றியது என்று பாராட்டுவார்கள். ஒப்புக்கொள்கிறோம். ஆனால் இது கவிதை ஆகுமா?"*

*இப்படிக் கேட்பதற்கு ஒரு துணிச்சல் வேண்டும். ஆண்டாண்டு காலமாய் கவிதைக்கு மாறுபட்ட கருத்துகளைக் கொண்டிருந்தவர்களைத் தட்டிக்கேட்கும் போது எரிச்சல் வருவது இயற்கை. ஆனால் தான் ஒன்றைச் சொல்கிறபோது மேலோட்டமாக் நுனிப்புல் மேய்ந்து சொல்வதில்லை என்பதையும், ஆழமான சிந்தனையின் அடிப்படையிலேயே அந்தக் கருத்தை வெளியிடுவதையும் அவர் தனது வாதங்களால் நிறுவுகிறார். வெறும் ஒலி மட்டும் கவிதையாகிவிட முடியாது என்பதற்கு அருணகிரிநாதரின் பாடல் ஒன்றை மேற்கோள் காட்டுகிறார். இப்படி எல்லாம் சொன்னால் சிறந்த கவிதை எது என்பதையும் எடுத்துகாட்டுகளோடு சொல்ல வேண்டுமல்லவா? அதைச் செய்ய அவர் தவறவில்லை, வள்ளுவன், கம்பன், நாட்டுப்பாடல் இவற்றிலிருந்து மேற்கோள் காட்டுகிறார். முடிவில் கவிதையைப் பற்றிய அவரது கருத்தையும் தொகுத்துச் சொல்லிவிடுகிறார்.*

*"மலையிலே பிறந்த சலவைக்கல், காட்டிலே வளர்ந்த தேக்கு, கடலிலே உதித்துச் சாம்பரான கிளிஞ்சல் இவற்றையெல்லாம் ஒன்றாகக் கொணர்ந்து ஒவ்வொன்றையும் வடிவாக்கி, , அளவோடு ஒன்றினோடு மற்றொன்றைப் பொருத்தி மாளிகை ஒன்றைச் சமைக்கிறான் சிற்பி. கவிதை என்ற மாளிகையும் இவ்வாறுதான் உண்டாகிறது. சம்பந்தமில்லாதனபோல் தோன்றும் பல கருத்துகள் , நினைவுகள், உணர்ச்சிகள் இவற்றையெல்லாம் ஒருங்கு சேர்த்து , அவற்றுக்குத் தொடர்பு ஏற்படுத்தி ஒன்றோடொன்று இணைந்து நிற்கும்படி அவற்றை அமைத்து,*

*கவிதை என்ற மாளிகையைச் சிருஷ்டி செய்கிறான் கவிஞன். இதன் வடிவம் கவிஞனுடைய அனுபவம். அவனுடைய பண்பின் ஒரு பகுதி.*

*இவ்வடிவத்தைச் சொல்லினால் ஆக்குவது கற்பனை என்ற பணியாள். சொல்லிலே தனித்தனியாகக் குறிக்கப்பெறும் கருத்து , உணர்ச்சி முதலியன கவிஞனுடைய மனம் என்ற கடலிலிருந்து வந்த பொருள்கள். இவற்றிற்குத் தொடர்பு கண்டு, அனுபவ வடிவைத் தந்து , அதாவது கவிதை என்ற உயிர் கொடுத்து , நம்முடைய மனத்திலும் அதே அனுபவத்தைச் சிருஷ்டி செய்வதே கவிச்சிற்பம். இதுவே கவிதையின் பிறப்பிடம், வளர்ப்புப் பண்ணை, அதன் உயிர்நாடி!"*

**செய்திக்கோவை**

சிந்தனைப் பத்திரிகை வெளிவந்த காலம் குறைவுதான் என்றாலும் அந்தக் காலகட்டத்தில் நாட்டில் மிக முக்கியமான நிகழ்ச்சிகள் நடைபெற்றன. நாடு சுதந்திரம் பெற்ற புதிது.. ஆனால் பிறந்த குழந்தை தலையிலே பெரிய பொறுப்பு. வகுப்புவாதக் கலவரங்கள். இலட்சக்கணக்கில் மக்கள் மடிந்தார்கள். மகாத்மா காந்தி சுட்டுக் கொல்லப்பட்டார். பிரிவினைக்கு ஒத்துக்கொண்டது நமது தேசத்தலைவர்கள் செய்த பெரிய தவறு என்று பேசப்பட்டது. சமஸ்தானச் சிற்றரசர்கள் இந்தியாவோடு இணையலாமா வேண்டாமா என்று முடிவெடுக்க முடியாமல் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தார்கள். ஐதராபாத் பெரிய போராட்டத்திற்குத் தயாராகிக்கொண்டிருந்தது. அவற்றை எல்லாம் சிந்தனைப் பத்திரிகை மூலம் தெளிவான தமிழில் சொல்லவேண்டிய வகையில் வெளியிட்டார் பேராசிரியர். சுதந்திரதினம் என்ற ஒரு கட்டுரையில் அவர் சொல்லுகிறார்.

*"காலந்தான் எவ்வளவு வேகமாக ஓடுகிறது. "உலகம் முழுதும் துயிலும் இந்நடு நிசியிலே, இந்தியா மட்டும் தூங்காமல் சுதந்திரத்தில் கண்விழிக்கிறது. " என்று அன்று பிரதம மந்திரி பண்டித நேரு பேசிய கம்பீரமான வார்த்தைகள் காதில் ஒலித்துக்கொண்டிருக்கின்றன. ஆனால் அதற்குள் சுதந்திர சகாப்தத்தின் முதல்வருஷம் கழிந்துவிட்டது.*

*சோதனைகளுக்குக் குறைவில்லை. சோக நிகழ்ச்சிகளுக்கும், நம்மை வெட்கித் தலைகுனிய வைத்த கொடுமைகளுக்கும் அளவே இல்லை. சுதந்திரத்தைப் பெறுவதற்கு எவ்வளவோ தியாகங்களைச் செய்தோம். ஆனால் நமது நாட்டைத் துண்டு போடுவதற்கு நமது தலைவர்கள் இசைந்த தியாகமே தியாகங்களிலெல்லாம் சிறந்தது., நுட்பமானது,. பிரிவினால் ஏற்படும் தீமைகள் அவர்களுக்குத் தெரியாதா? தெரியும். அதை எதிர்த்து அவர்கள் போராடவில்லையா? போராடினார்கள். ஒற்றுமைக்காக எவ்வளவு வேண்டுமானாலும் விட்டுக்கொடுக்க அவர்கள் தயாராக இல்லையா? இருந்தார்கள் என்பதை உலகறியும். என்றாலும் 'தருமத்தின் வாழ்வுதன்னைச் சூது கவ்வியது."யார் சகுனியானால் என்ன? நாடு பிளவுண்டது."*

அந்தக்கால கட்டத்தில் நாட்டில் நடந்த நிகழ்ச்சிகளைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் சிந்தனைப் பத்திரிகை சுருக்கமாக வெளியிட்ட செய்திக் கோவையைப் படித்தால் போதும்.

காந்திஜி மறைந்த போது அ.சீ.ரா எழுதிய கட்டுரை மிகவும் நெகிழ்ச்சியானது.

**தெய்வ மரணம்**

*"யமுனைக் கரையில் மூட்டிய தீ அணைந்துவிட்டது. சந்தனக் கட்டையோடு காந்திமகான் சடலமும் வெந்து சாம்பராயிற்று. காந்திமகான் பெற்றது தெய்வ மரணம். "சரணெமக்கு யார்கொல்?" என்று அழுது சாம்பிய மக்கள் அனைவருக்கும் 'அரண் உமக்கு ஆவேன்" என்று சத்திய அஹிம்ஸையைச் சிறைவிரித்துப் புறப்பட்ட ஜடாயுவே காந்தி. அந்த ராமாயாண ஜடாயு வெற்றியில்லாமல் இறந்தான். ஆனால் அவன் செய்த தியாகப் போரே வெற்றி. அவன் மரணம் தெய்வ மரணம் என்று கொள்ளும் நாம் அன்னியன் எடுத்துச் சென்ற சுதந்திரத்தை மீட்டுத் தந்த இந்த ஜடாயுவின் மறைவைத் தெய்வ மரணம் என்று கொள்ளத் தயங்குவோமா?*

*தெய்வ மரணம் மரணமன்று. அணையவே மூள்வது மயானத் தீ. அன்புக்கனல். அன்று யமுனைக் கரை, மக்களின் ஒற்றுமை நிலையமாக, காந்திமகான் உடற்பூந்துகள் ஆர்ந்து தூய்மைப்*

*படுத்திய வேள்வி நிலமாக மாறுகிறது. அன்புக்கும் ஆண்மைக்கும் சாவேது.? காந்தி நமது நாட்டின் நந்தா விளக்கு. , நானிலத்தோர் தந்தை, தனி அறத்தின் தாய், தயாநிலை, அவர் மறையவில்லை. பதினைந்து நாட்களுக்கு முன் நம் உள்ளத்திலே பிறந்தார். நாடு முழுதும் யமுனைக் கரையாயிற்று."* திரிவேணி என்ற ஆங்கிலப் பத்திரிகையின் உதவியாசிரியராகவும் பேராசிரியர் பணிபுரிந்தார்.

## அழுதார் அ.சீ.ரா

திரு. டி.கே.ஷண்முகம் அவர்களுக்குப் பேராசிரியருடன் நீண்டநாள்தொடர்பு. பேராசிரியரின் நாடகத்திற்கு மட்டுமன்று, அவரது இனிமையான பேச்சுக்கும், இலக்கியத்தரமான எழுத்துக்கும் அவர் பரம ரசிகர். அதைப்போல சண்முகம் அவர்களின் நடிப்பில் பேராசிரியருக்கு அபரிமிதமான மதிப்பு. அதைப்பற்றிச் சண்முகம் அவர்கள் சொல்லுகிறார்.

*"தூத்துக்குடியில் எங்கள் "தேச பக்தர் சிதம்பரனார்" நாடகம் நடந்துகொண்டிருந்தது. வ.உ.சி வாழ்ந்த நகரமல்லவா? அதற்கேற்ப இயல்பாகவே எங்கள் உள்ளத்தில் ஒரு புதிய உணர்ச்சி ஏற்பட்டிருந்தது. உற்சாகத்துடன் நடித்தோம். விஞ்ச் துரையுடன் வ. உ.சி வீர வாதம் புரிந்து, வந்தே மாதர முழக்கம் செய்யும் காட்சி முடிந்ததும் ஒப்பனை அறைக்குள் ஓடோடி வந்தார் ஒருவர். வ.உ.சியாக நடித்த தம்பி பகவதியையும் , சுப்ரமண்ய சிவாவாக நடித்த என்னையும் ஆரத் தழுவிக்கொண்டு உணர்ச்சியைச் சொற்களாக உதிர்க்க முடியாமல் தேம்பித் தேம்பி அழுதார். "அபாரம், அற்புதம்" என மெய்மறந்து பாராட்டினார். ' நாடகக் கலைக்கு மகத்தான சேவை; நீங்களிருவரும் தீர்க்காயுளோடு வாழவேண்டும்' என வாழ்த்தினார். எங்கள் கண்களும் கலங்கின. அவரது உணர்ச்சி கலந்த உற்சாகம் எங்களை வியப்பில் ஆழ்த்தியது. அவரைப் போன்ற பெருமதிப்புக்குரியவர்கள் தம் உள்ளுணர்ச்சியை , ரசனையை எளிதில் வெளிப்படுத்துவது வழக்கமில்லை. கலையார்வக் கனல் ததும்பும் உணர்ச்சிப்பிழம்பாக நின்று அன்று எங்களைப் பாராட்டிய நல்லறிஞர் தாம் பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்கள். அந்தக் கலை ரசனையின் உயர்வையும் உச்ச நிலையையும் இப்போதும் எண்ணி எண்ணி*

இன்புறுகிறது என் இதயம். "இனிமைத் தமிழ்மொழி எமது ' என்பதற்குச் சான்று காட்டும் இனிமைத் தமிழ்க்குரல் அ.சீ.ரா அவர்களுடையது. செவிகளில் இன்பத் தேன் பாய்ச்சுவது போலிருக்கும். அவருடைய பேச்சு. எனக்கு எத்தனையோ இலக்கிய நண்பர்கள் உள்ளனர். எழுத்தாளர்களிடம் எப்பொழுதும் பெருமதிப்பு வைத்துள்ளவன் நான். அத்தனை நண்பர்களிலும் ஒரு சிலரிடம் எனக்குத் தனி அன்பு- ஆருயிர் நட்பு- உண்டு. குறிப்பிடத்தக்க அந்த ஒரு சிலரில் ஒருவராக என்னைக் கவர்ந்துள்ள பேரறிஞர் திரு . சீநிவாசராகவன் அவர்கள் என்பதைப் பெருமையோடு குறிப்பிட விரும்புகிறேன்.

சென்ற இருபைத்தைந்து ஆண்டுகளுக்கு(1967ல் எழுதியது) மேலாகப் பேராசிரியர் சீநிவாசராகவன் அவர்களோடு எனக்குத் தொடர்புண்டு. கலைஞர் அ.சீ.ரா அவர்களுடன் இலக்கிய வாதம் தொடங்கிவிட்டால் பொழுது போவதே தெரியாது. இந்த இணையற்ற இன்பத்தை நான் பலமுறை அனுபவித்திருக்கிறேன்.

'பாரதி பாடல்' பொதுச் சொத்தாக வேண்டுமென நாங்கள் கிளர்ச்சி செய்தபோது பாரதி விடுதலைக் கழகத்தின் துணைத்தலைவராக விளங்கி எங்களுக்குப் பேராதரவு தந்த பெருந்தகை பேராசிரியர் அ.சீ.ரா அவர்களாவார்.

பாரதி பாடல் விடுதலைக்காக, திருமதி செல்லம்மா பாரதி அவர்களைக் காண 21-4-1948 ல் பேராசிரியர் அ.சீ.ரா அவர்கள் தலைமையில் திருவாளர்கள் நாரண துரைக்கண்ணன், வல்லிக் கண்ணன் , கே.பி. கணபதி ஆகியவர்களோடு நான் திருநெல்வேலிக்கு இரண்டாவது வகுப்பு டிக்கட் வாங்கி இட நெருக்கடியின் காரணமாக மூன்றாவது வகுப்பில் பயணம் செய்த அந்த இன்ப நினைவுகளை என்றென்றும் மறக்க முடியாது. சுவை நிறைந்த ஒரு யாத்திரை அது.

தாய்மொழியாகிய தமிழ் விரைவில் பயிற்சி மொழியாக வேண்டும் என்ற லட்சியத்தைக் கொண்டவர்களில் கலைஞர் அ.சீ.ரா அவர்களும் ஒருவர்" என்று போற்றிப் புகழ்கிறார் திரு தி.க. சண்முகம் அவர்கள்.

அறிஞர்களும் குறிப்பெடுப்பர்

பேராசிரியரின் பேச்சில் வரும் அபூர்வ சிந்தனைகளை பல பெரிய ஆராய்ச்சியாளர்கள் கூட குறிப்பெடுத்துக் கொள்வதுண்டாம்.

பேராசிரியர் திரு வைத்தமாநிதி இதைப்பற்றி ஒரு எடுத்துக்காட்டுக் கொடுத்திருக்கிறார்

*"பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் எவ்வளவு பெரிய ஆராய்ச்சியாளர் என்பது எல்லோருக்கும் தெரியும். அவர் ஒருசமயம் நாட்டரசன் கோட்டையில் பேராசிரியரின் சொற்பொழிவைக் கேட்டார். கூட்டம் முடிந்ததும் ரயிலேறி காரைக்குடிக்குச் செல்லும் போது பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் அ.சீரா இருந்த அறைக்கே வந்துவிட்டாராம். அவரிடம் அன்றையப் பேச்சைப்பற்றிப் பல கேள்விகள் கேட்டுத் தெளிவு பெற்றிருக்கிறார். அ.சீ.ராவின் பேச்சைக் குறிப்பெடுத்து வைத்துக்கொண்டதாக அவரிடம் சொன்னாராம். இதைவிட அ.சீ.ராவின் சொற்பெருக்கின் ஆற்றலுக்கும், கல்விக்கும் வேறு சான்று வேண்டுமா?"*



# 9. அமைதி கொடுக்கும் அ.சீ.ரா பேச்சு

பாபு இராஜேந்திரப் பிரசாத் ஜனாதிபதியாக இருந்த போது ஒருசமயம் சென்னை கவர்னர் மாளிகைக்கு வந்திருந்தார். பிரதமர் நேருஜியுடன் அவருக்கு ஏதோ மனஸ்தாபம். மிகவும் மனம் நொந்த நிலையில் இருந்தார். அவரைத் தேற்றுவதற்காக இலக்கியங்களிலிருந்து பல நல்ல கருத்துக்களை எடுத்துச் சொல்ல யாரை அழைக்கலாம் என்று கவர்னர் யோசித்துக் கொண்டிருந்த போது அவருக்குப் பேராசிரியர் அ.சீ.ரா பெயர் பரிந்துரைக்கப்பட்டது. தமிழ் மட்டும் தெரிந்து பயனில்லை. ஆங்கிலத்திலும் சரளமாக எடுத்துச் சொல்லத் தெரியவேண்டுமே. எனவே பேராசிரியரே பொருத்தமானவர் எனக் கவர்னர் முடிவு செய்தார். கவர்னர் மாளிகைக்குப் பேராசிரியர் அழைக்கப்பட்டார். அவருடன் பாரதி காவலர் திரு கே .இராமமூர்த்தியும் சென்றிருந்தார்(இந்த நிகழ்ச்சியை எனக்குச் சொன்னவர். இராமமூர்த்தி அவர்கள்) ஜனாதிபதி பாபு இராஜேந்திரப் பிரசாத்துக்கு "இராமாயணத்தில் சீதை " என்ற தலைப்பில் சீதை எப்படியெல்லாம் துயருற்றாள். அவள் துயரங்கள் எப்படி விலகின என்பனவற்றையெல்லாம் சொல்லி அவரைத் தேற்றினார். அவரது பேச்சில் மயங்கிய ஜனாதிபதி மனம் தெளிவு பெற்றார் . பின்னாளில் பேராசிரியரின் "Leaves From Kamban" எனும் புத்தகத்தை ஜனாதிபதி பாபு இராஜேந்திரப் பிரசாத் வெளியிட்டார்.

**தமிழன் தலை நிமிர்ந்தது**



பண்டிட் நேருஜி 1960ம் ஆண்டு தூத்துக்குடிக்கு வந்திருந்தார். அவருடன் கர்மவீரர் காமராஜரும் வந்திருந்தார். வ.உ.சி கல்லூரி மைதானத்தில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. காமராஜ் பேராசிரியரை நேருஜிக்கு அறிமுகப் படுத்தினார்.

"I Know Professor Raghavan very well" என்றார் நேருஜி. பேராசிரியரை நேருஜி நினைவுவைத்துக்கொள்ளும் அளவுக்கு ஒரு



நிகழ்ச்சி டெல்லியில் ஏழாண்டுகட்கு முன்பு நடந்தது(1953-54). இந்திய மொழிகளின் தேசிய மாநாடு ஒன்று டெல்லியில் நடந்தது. அதை ஏற்பாடு செய்தவர் சேத் கோவிந்ததாஸ் என்பவர். அவர் ஒரு ஹிந்தி வெறியர். பலர் பேசினார்கள். தமிழ் மொழியை அறிமுகப் படுத்துவதற்காகப் பேராசிரியர் அ.சீ.ரா சென்றிருந்தார். அந்த மாநாட்டுக்கு பண்டித நேரு தலைமை வகித்தார். நிறையப் பேர் தமக்குக் கொடுக்கப் பட்ட நேரத்தைவிட அதிகம் பேசிவிட்டார்கள். பண்டிட்ஜிக்கு வேறொரு கூட்டத்துக்குப் போக வேண்டியிருந்தது. எனவே சேத் கோவிந்ததாஸ் பேராசிரியரிடம் இரண்டு நிமிடங்கள் மட்டுமே பேசச் சொன்னார். பேராசிரியர் பேச எழுந்தார். ஆங்கிலத்தில் பேசத் தொடங்கினார். கூட்டத்தில் இருந்த ஹிந்தி வெறியர்கள் கத்தினார்கள். 'ஆங்கிலத்தில் பேசாதே, ஹிந்தியில் பேசு, அல்லது உன் தாய்மொழியில் பேசு " என்று கூச்சலிட்டனர்.

"தமிழில் பேசினால் உங்களுக்குப் புரியாது, ஹிந்தி எனக்குத் தெரியாது" என்றார் பேராசிரியர்.

என்றாலும் கூட்டம் கத்தியது. நேருஜி எழுந்து நின்றார். கூட்டத்தை ஒரு முனையிலிருந்து மறுமுனைவரை பார்த்தார்.. கூச்சல் ஒய்ந்தது.

உடனே அ.சீ.ரா நேருஜியைப் பார்த்து,

"This attitude of these people , Panditji, makes we southerner's feel unhappy" என்றார்.

"You proceed professor" என்றார் நேருஜி.

"Unfortunately the two minutes time is over by now" என்றார் பேராசிரியர்.

"You can take five minutes professor" என்றார் நேருஜி

"யாதும் ஊரே யாவரும் கேளிர் " என்ற கருத்தை எடுத்து அன்று மிக அழகான ஆங்கிலத்தில் அவருக்கே உரிய இனிய குரலில் பேசினார் பேராசிரியர். நேருஜி தனது செயலாளரை அழைத்துத் தனது அடுத்த நிகழ்ச்சியை ரத்து செய்யச் சொன்னார்.

"Profeessor, You can take your own time. I have cancelled my next appointment" என்றார் நேருஜி.

அன்று தமிழ் மொழியின் சிறப்பைப் பற்றி அரைமணி நேரத்துக்கு மேல்பேசினார் பேராசிரியர்.

அந்த அவையில் இருந்த கவிஞர் சுந்தர் அவர்கள் "பேராசிரியரின் பேச்சு அங்கிருந்த தமிழர் அனைவரையும் பெருமிதங் கொள்ளச் செய்தது" என்கிறார். அந்தப் பேச்சை நினைவு கூர்ந்துதான் பண்டிட் நேருஜி பேராசியரைத் தமக்கு முன்பே தெரியும் என்று சொன்னார்.

லால் பகாதுர் சாஸ்திரி பிரதமராய் இருந்த பொழுது தூத்துக்குடிக்கு வந்தார். வ.உ. சி கல்லூரி மைதானத்தில்தான் பொதுக்கூட்டம். அப்பொழுது பேராசிரியர்தான் அவரது பேச்சை மொழிபெயர்த்தார்.



சர் . சி. பி இரமசாமி ஐயருடன் பேராசிரியருக்கு நல்ல பழக்கமிருந்தது.

ஜனாதிபதி ஜாகிர்ஹுஸைன், கல்வி மந்திரியாக இருந்த ஹுமாயுன் கபீர் ஆகியோர் பேராசிரியரை நன்கு அறிவர்.

மத்திய மந்திரியாக இருந்த திரு சுப்பிரமணியம் அவர்களோடும் பேராசிரியருக்கு நல்ல தொடர்பு இருந்தது. தமிழ் மொழி பயிற்றுமொழியாக வேண்டுமென்பதில் இருவருக்கும் கருத்தொற்றுமை உண்டு.

யாரந்தக் குற்றவாளி?

சென்னையில் இருந்த போது அவர் அடிக்கடி கடற்கரையில் நடந்து செல்வது வழக்கம். அப்பொழுது அங்கே பல இலக்கிய நண்பர்களைச் சந்தித்திருக்கிறார். அந்த நட்புப் பின்பு பல்கிப் பெருகியது.

மஞ்சரிப் பத்திரிக்கையின் ஆசிரியராக இருந்த திரு தி.ஜ.ராவை அவர் தஞ்சைக் கிராமமொன்றில் சந்தித்தார்.அந்தச் சந்திப்பைப் பற்றி பேராசிரியர் மிகவும் சுவைபட எழுதியிருக்கிறார்.

'தி.ஜ ரவை நான் முதன்முதல் சந்தித்தது ஏழெட்டு வருடங்களுக்கு முன் . தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள குக்கிராமம் ஒன்றுக்குப் போயிருந்தேன். சாயங்கால நேரத்தில் பொழுது போக்காக நாலைந்து நண்பர்கள் உலாவச் சென்றோம். கிராமத்தை அடுத்த சாலையை அடைந்ததும் சிறுகதைகளைப் பற்றிய பேச்சு எழுந்தது. அதுவரையில் எங்களுடன் பேசாமல் நடந்துவந்த ஒருவர் (அவரை எனக்கு அப்போது தெரியாது) "அதுதானே தமிழில் இல்லை" " என்றார். பிறகுதான் அவரைக் கவனித்தேன். மெலிந்த உடல் , கவலைபடர்ந்த முகம் . அழுத்தமாக ஒன்றையும் பற்றிப் பேசாமற் போனாலும் திட்டமான அபிப்பிராயம் கொண்டவர்போல் தோன்றியது.

"எது இல்லை?"என்றேன்

"தரமான சிறுகதைகள்"

நாங்கள் பேச ஆரம்பித்தோம். சிறுகதைகளைப் பற்றித்தான். நான் சொன்னேன்

"நீங்கள் சொல்வது ஒருவகையில் உண்மைதான். சிறுகதையை இலக்கியக் கருவியாக நம்மைவிட அதிக காலமாகக் கையாண்டு வருவன இங்கிலாந்து , பிரான்ஸ், ருஷ்யா. அந் நாடுகளின் சிறுகதைகளிற் சிறந்தவையோடு இப்போது தமிழ் நாட்டுச் சிறுகதைகளை ஒப்பிடலாகாது. மேல்நாடுகளில் வழங்கிவரும் முறையிலே அமைந்த சிறுகதை தமிழ்நாட்டுக்குப் புதிது .

ஆனாலும் தமிழிலே அழகான சிறுகதைகள் வெளிவருகின்றன. வாழ்வின் அம்சம் ஏதாவது ஒன்றையோ , ஒருணர்ச்சி அல்லது சிந்தனை நிலையையோ அடிப்படையாகக் கொண்டு பளீரென்று வாழ்க்கைத் தத்துவத்தில் ஒரு பகுதியில் ஒளிபரப்பி மனத்திலே ஓயாத சிந்தனை அலைகளை எழுப்பும் கதைகள் - அதாவது உண்மையான சிறுகதைகள்-இப்போது வெளிவர ஆரம்பித்துவிட்டன. உன்னதமான இலக்கியம் என்று சொல்லக்கூடிய சிறுகதைகள் காலக்கிரமத்தில் தாமே எழுதப்படும் . தமிழின் சக்தியிலும் தமிழனுடைய கலைத்திறனிலும் எனக்கு நம்பிக்கையுண்டு" என்றேன்.

"அப்படியானல் ஒன்றிரண்டு சிறுகதைகளை உதாரணமாகச் சொல்லுங்களேன் பார்க்கலாம்" என்று தலையசைத்தார்.

"சமீபத்தில் சுதேசமித்திரனில் 'தேடிக்கண்ட புதையல்', பணம் இழந்த பலி' , அதிர்ஷ்டச் சீட்டு' என்று மூன்று கதைகள் வெளிவந்துள்ளன. எழுதியவர் யாரென்று எனக்குத் தெரியாது. நல்ல கதைகள்" என்றேன்.

என் உற்சாகத்தைக் கண்டு அவர் மெல்ல நகைத்தார்.

"நானும் பார்த்தேன் . கதைகள் பாதகமில்லை. ஆனால் நீங்கள் சொல்வதுபோல் அவ்வளவு நல்ல கதைகள் அல்ல" என்றார்.

இதன் பிறகு நீண்டதொரு விவாதம் தொடங்கியது. அவை எப்படி நல்ல கதைகள் என்பதற்கு என்காரணங்கள் , அதற்கவர் மறுப்பு, மறுப்புக்கு என்சமாதானம் , அதற்கவர் பதில் , இந்த வகையிலே எங்கள் பேச்சு அந்தக் கதைகளைத் தொடர்ந்து சென்றது. என்னைவிட அந்தக் கதைகளை அவர் நன்றாகப் படித்திருந்தார் என்பதனை அவரது வார்த்தைகள் கண்பித்தன. கதைகளின் போக்கு, கதாபாத்திரங்களுக்கு உயிரளிக்கும் சிருஷ்டித் திறன் , தமிழ் நடை என்று பிரித்துக்கொண்டு , கதைகளிலுள்ள குறைகளை நெஞ்சில் ஈரமில்லாமல் அவர் அலசினபோது எனக்கு வந்த கோபத்தில்"ஏன் ஐயா, உமக்கு அந்தக் கதைகளை எழுதியவரிடம் விரோதமா?" என்றேன்.

அவர் அமைதியாகப் பதிலளித்தார்

" ஆம், ஏனெனில் அவைகளை எழுதியது நான்தான். தி.ஜ.ர என்பதுதான் இந்தக் குற்றவாளியின் பெயர்."

வ.ராவுக்கு மருமான்.

மிகச் சிறந்த எழுத்தாளரான வ.ராவுடன் அவருக்கு நட்பு ஏற்பட்டதும் இப்படியொரு சூழ்நிலையில்தான்.

தி ஜ ரவும் பேராசிரியர் அ.சீ.ராவும் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் காலைப் புதைத்துத் தயங்கி நடப்பதில் உள்ள இன்பத்தில் அசைந்தாடிச் சென்று கொண்டிருந்த போது அவர்கள் வழக்கமாய் உட்காரும் இடத்தில் ஐந்தாறுபேர் கூடியிருந்தார்கள். கூட்டத்தை அவர்கள் நெருங்கும் போது 'அதைத்தான் நானும் சொல்றேன், சார் , பச்சைத் தமிழிலே" என்று யாரோ ஒருவர் கணீரென்ற குரலில் பேசியது காதில் விழுந்தது. அதைத் தொடர்ந்து "பச்சைத் தமிழ் உலர்ந்து போன தமிழனுக்கு எங்கே புரியப் போகிறது?" என்ற வார்த்தைகள் 'கலகல ' என்ற சிரிப்போடு காற்றில் மிதந்து வந்தன.

தி ஜ ர பேராசிரியரிடம் மெதுவாகச் சொன்னார்.

"நல்லவேளை , இன்றைக்கு வ.ரா. வந்திருக்கிறார். நீங்கள் அவரைச் சந்திக்க வேண்டும்" என்றார். அவரும் சம்மதித்தார். அந்தச் சந்திப்பைப் பற்றிப் பேராசிரியர் எழுதுகிறார்.

" அந்த முதல் சந்திப்பில் நடந்த பேச்செல்லாம் இப்பொழுது நினைவில் இல்லை. ஒன்று மட்டும் நன்றாக ஞாபகமிருக்கிறது. அடிக்கடி என்பக்கம் திரும்பி" பேராசிரியர் என்ன சொல்லுகிறார்?" என்று வ.ரா சொன்னதும், ஒன்றைப் பற்றியும் ஒன்றும் சொல்ல முடியாமல் நான் திகைத்ததும் இன்னும் என் நினைவை விட்டு அகலவில்லை.

தூரத்தில் குமுறி நின்ற கடலே வ.ரா வாக உருவெடுத்து என்முன் பேசியது என்ற பிரமைதான் எனக்கு ஏற்பட்டது. வ.ராவின் பேச்சில் கடலின் வன்மை இருந்தது. அசைக்க முடியாத ஆழமிருந்தது. – புதுமை இருந்தது.

இதன் பிறகு வ.ராவைப் பல தடவைகள சந்தித்தேன். அவரை என்னால் முழுதும் புரிந்துகொள்ள முடியவில்லை. அவரோ எப்படியோ என்னைத் தெரிந்துகொண்டுவிட்டார். "மருமான்" என்ற உறவை நாட்டினார். எவ்வளவு ஆத்திரமாக என்னுடைய இலக்கியக் கொள்கைகளைக் கண்டித்த போதிலும் வளர்ந்துகொண்டே வந்த, மாறாத அன்பையே என்னிடம் செலுத்தினார். இந்த விசித்திர மனிதனைத் தெரிந்து கொள்ள முயன்றேன். தோல்வியுற்றேன். சில காலத்திற்குப் பிறகு வெளிவந்தது "மகாகவி பாரதியார்" என்ற புத்தகம். அதிலேயுள்ள கருத்துகள் சிலவற்றைத் தாக்கி "ஹிந்து'விலும் ' தினசரி'யிலும் எழுதினேன். அடுத்த தடவை அவர் என்னைப் பார்த்த போது,

"என் பேரிலே முதற்கல்லை எறிய உங்களுக்கு உரிமை உண்டு, ஓங்கி அடிக்கத்தான் அடித்திருக்கிறீர்கள். ஆனால் உண்மையை மறந்துவிட்டு அது இருக்குமிடம் தெரியாமல் நிழலோடு கச்சை கட்டிப் போர்தொடுத்திருக்கிறீர்கள்.. பேஷ்" என்றார்

இலக்கிய உலகில் ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டாலும் அவர்களிடையே நட்புப் பல்கி வளர்ந்தது.

**காரைக்குடிக் கம்பன் விழா**

காரைக்குடி சா.கணேசன் அவர்கள் அ.சீ.ரா வின் நெருங்கிய நண்பர் . காரைக்குடி கம்பன் விழாவில் பேராசிரியர் கலந்து கொள்ளாமல் இருந்ததே இல்லை. பட்டிமண்டபம், கவியரங்கம், பேச்சு என எல்லாவற்றிலும் கலந்து கொள்ளும் தகுதி ஒரு சிலருக்கே உண்டு. அதில் மிக முக்கியமானவர் பேராசிரியர் அ.சீ.ரா.

திரு சா.கணேசன் அவர்கள் சட்டசபை உறுப்பினராக இருந்தார். காரைக்குடி கம்பன் விழாவுக்கான ஏற்பாடுகளெல்லாம் தீவிரமாக நடைபெற்றுகொண்டிருந்தன. திடீரென சட்டசபைக்கு அவசரமாகச் செல்லவேண்டிய கட்டாயம் அவருக்கு நேர்ந்தது. எனவே காரைக்குடி கம்பன் விழா நிகழ்ச்சிகளை சா.கணேசன் அவர்கள் இடத்தில் இருந்து நடத்தும் பொறுப்பு அ.சீ.ராவிடம்

ஒப்படைக்கப்பட்டது. கன்னித்தமிழ் வாழ்க , கம்பன் புகழ் வாழ்க என்று ஒரு வினாடி கூடத் தவறாத வகையில் விழாவைத் தொடங்கி இனிதே நடத்திச் சென்றார் பேராசிரியர் என்று அந்தவிழாவுக்குச் சென்றிருந்த கோவை நஞ்சுண்டன் அவர்கள் சொல்கிறார்.

காரைக்குடிக் கம்பன் விழாவில் பட்டிமண்டபம் தொடங்குவதற்கு முன்பு வேழமுகவில்லியர் வந்து பட்டிமண்டப நிகழ்ச்சியைப் பற்றியும் யாரை அழைப்பது , நிகழ்ச்சித் தலைப்பு எனப்பலசெய்திகளையும் சொல்லி, பட்டிமண்டபத்தில் கலந்து கொள்பவர்களை அறிமுகப் படுத்துவார்கள். முதன் முதலில் வேழமுகனாக சா. கணேசன் அவர்களும் வில்லியராக பேராசிரியர் அ.சீ.ரா அவர்களும் தான் இணைந்து நடத்தினார்களாம்.

அவருடன் 1960ம் ஆண்டில் காரைக்குடிக் கம்பன் விழாவுக்குச் சென்றிருக்கிறேன். மூன்று நாட்கள் கரைக்குடியிலும் நான்காவதுநாள் நாட்டரசன் கோட்டையிலும் நடக்கும். அவரைச் சுற்றி அறிஞர்கள் கூட்டம் எப்பொழுதும் இருக்கும். பலரின் மத்தியில் அவரது ஆளுமை தனியாகத் தெரியும். அவருடன் உரையாடுகிற இன்பத்திற்காகவே பலரும் அவரைச் சூழ்ந்திருப்பார்கள். இதில் ஆச்சர்யம் என்னவென்றால் தன்னைச் சுற்றியிருக்கும் கூட்டத்தின் தன்மைக்கு ஏற்றாற்போல் அவரால் இறங்கிவந்தோ அல்லது உயர்ந்த நிலையில் இருந்தோ பேச இயலும். குழந்தைகள் மத்தியில் குழந்தையாகிவிடுவார்.

**மயங்க வைத்த வைதீகப் பிச்சு**

அப்படியொரு கம்பன் விழாவிலேதான் கி.வா.ஜவுடன் அவருக்குப் பரிச்சயம் ஏற்பட்டது. கம்பன்விழாவில் கி.வா.ஜ பேச எழுந்ததும், அவரது தோற்றத்தைப் பார்த்து, முதலில் இந்த "வைதிகப் பிச்சுவை" இலக்கிய விழாவுக்கு ஏனழைத்தார்கள் என்று தெரியவில்லையே என எண்ணினாராம். அவர் யார் என்று பக்கத்தில் இருந்தவரிடம் கேட்டிருக்கிறார். ஆனால் அந்த விழாவில் கி.வா.ஜ வின் பேச்சைக் கேட்டுவிட்டு

அப்படியே மெய்மறந்து போனாராம். எவ்வளவு பெரிய இலக்கியமேதை கி.வா.ஜ என்பத அறிந்து அவர் பேசி முடித்ததும் அப்படியே ஆனந்தத்தில் அவரைக் கட்டித் தழுவிக்கொண்டாராம். அந்த நட்பு கடைசிவரை தொடர்ந்தது. கி.வா.ஜ ஆசிரியராக இருந்த கலைமகள் பத்திரிகையில் அவரது எழுத்துகள் வெளியாயின.

இருவரும் பல பட்டிமண்டபங்களிலும் கவியரங்குகளிலும் கலந்து கொண்டனர். கி.வா.ஜ வும் அ.சீ.ராவின்மேல் பெரு மதிப்பு வைத்திருந்தார். கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தினர் கி.வா.ஜ மூலம்தான் பேராசிரியரைப் பேசுவதற்கு அழைத்தனர். அதைப்பற்றி கி.வா.ஜ ஒரு கட்டுரையில் மிகவும் சுவைபட எழுதியிருக்கிறார்.

**சென்றார் வென்றார்**



*"அப்பொழுது திரு. அ.சீ.ரா அவர்கள் விவேகானந்தர் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராக இருந்தார். கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தார் தம்முடைய ஆண்டு விழாவுக்கு வந்து சொற்பொழிவாற்ற வேண்டுமென்று கேட்டிருந்தனர். நான் திரு அ.சீ.ரா வீடு சென்றேன். கல்கத்தாவில் உள்ள தமிழர்கள் நல்ல ரசிகர்கள் என்றும் மிகவும் அன்புடன் உபசாரம் செய்பவர்கள் என்றும் சொல்லி, "நீங்கள் அங்கே போனால் அவர்கள் அளவற்ற மகிழ்ச்சி அடைவார்கள், அவர்களுக்கு உங்களுடைய சொற்பொழிவுகளைக் கேட்கவேண்டுமென்று மிகவும் ஆசை. அவர்கள் செய்யும் உபசாரத்தை ராஜோபசாரம் என்று சொல்லவேண்டும்" என்று விரிவாகக் காரணங்களையும் கூறிப் போகும் படி வேண்டிக்கொண்டேன். வேலை இருந்தாலும் போவதாக ஒப்புக்கொண்டார். அவர் அங்கே போய்ப் பேசினால் எல்லாருடைய உள்ளத்தையும் வென்று வருவார் என்பதை நான் உறுதியாக அறிவேன்.*

*அவர் கல்கத்தா சென்றார், பேசினார், திரும்பி வந்தார். வந்தவுடன் என்னுடன் டெலிபோனில் பேசினார்.*

*"போன இடத்தில் அவர்கள் சரியாக நடந்துகொண்டார்களா?" என்று கேட்டேன்.*

*"நீங்கள் சொல்வதுபோல் இல்லை. " என்றார்.*

*எனக்குத் தூக்கிவாரிப்போட்டது.*

*"நான் மிகையாகச் சொல்லிவிட்டேனோ?" என்று கேட்டேன்.*

*"குன்றக் கூறுவதும் ஒரு குற்றந்தானே? நீங்கள் சொன்னதைப்போல ஆயிரமடங்கு அவர்கள் அன்பைக் காட்டி என்னைத் திண்டுமிண்டாடச் செய்துவிட்டார்கள். இதைக் கேட்டு நான் ஆறுதல் பெருமூச்சு விட்டேன். அங்கே அன்பர்கள் பல சபைகளில் பேசச் சொன்னதையும், வங்காளிகள் கூடிய சபையில் ஆங்கிலத்தில் பேசச் சொன்னதையும் சொன்னார்.*

*"அவர்களுக்கு ஓரளவு திருப்திதான்"என்றுமட்டும் தன் பேச்சைக் குறித்துச் சொன்னார்.*

*ஆனால் கல்கத்தா நண்பர்கள் எனக்குப் பின்பு எழுதினார்கள். எனக்குக் கவுரவம் உண்டாயிற்று. அன்பர். திரு.சீநிவாச ராகவனை அனுப்பிக்கொடுத்ததற்காகத் தான்.*

*"என்ன அழகாகப் பேசுகிறார். நாங்கள் தேன்குடித்த நரிபோல மயங்கிப்போனோம். அதைவிடப் பெரிய ஆச்சரியம் அவருடைய ஆங்கிலப் பேச்சில் வங்காளிகளெல்லாம் மயங்கிவிட்டார்கள். அங்கே பேச வேண்டும் , இங்கே பேச வேண்டும் என்று எங்களைத் துளைத்தெடுத்துவிட்டார்கள். ஆழ்வார்கள் வாக்கைப் பற்றியும் இரவீந்திரரின் கவிதைபற்றியும் திரு. ராகவனவர்கள் பேசப் பேச அவர்கள் தம்மையே மறந்து பேச்சில் ஆழ்ந்துவிட்டார்கள்" என்று எழுதியிருந்தார்கள்.*

***தமிழிலும் உண்டு***

*அடுத்த ஆண்டு திரு. ராகவனும் நானும், ராகவனின் மாணவரும் நல்ல சொற்பொழிவாளருமாகிய அமரர் முத்துசிவனும் கல்கத்தா போனோம். அப்போது இன்னும் தெளிவாக உண்மை*

புலனாயிற்று. திரு அ.சீ. ராவுக்குக் கங்கைக் கரையில் எத்தனை பக்தர்கள் இருக்கிறார்கள் என்பதை உணர்ந்து கொண்டேன்.

ஒவ்வொரு வருஷமும் ஏதாவது ஒரு சங்கத்தின் பெயரால் அவரை அழைக்க அவர்களுக்கு விருப்பம். "நாங்களும் வங்காளிகளும் நெருங்கிப் பழக விரும்புகிறோம். வங்காளிகளுக்குத் தங்கள் கலை கவிதை ஆகியவை போல இந்தியாவில் வேறு எங்கேயும் இல்லை என்ற எண்ணம். தமிழின் பெருமையை அவர்கள் உணரவேண்டுமென்பது எங்கள் ஆவல். எங்கள் ஆவலை இவர்கள் நிறைவேற்றி வைக்கிறார்கள். கம்பனைப் பற்றியும் ஆழ்வார்களைப் பற்றியும் இவர்கள் பேசும் போது அவர்கள் "தமிழில் இவ்வளவு அழகான கவிதைகள் இருக்கின்றனவா?" என்று ஆச்சரியப்பட்டுப் போனார்கள். அதைவிட மற்றொரு பெரிய காரியம். ரவீந்திரரைப் பற்றி இவர் பேசுவதைக்கேட்டு அவர்கள் துள்ளிக்குதிக்கிறார்கள். இவரால் எங்களிடம் அவர்களுக்கு உள்ள மதிப்பு ஒரு முழம் உயர்ந்துவிட்டது. " என்று அன்பர்கள் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டார்கள். எனக்கும் பெருமையாகத்தான் இருந்தது.

அ.சீ.ராவின் பேச்சிலே முழுவடிவம் ஒன்று இருக்கும். ஒரு நிகழ்ச்சி, அல்லது அநுபவ சம்பவமொன்றிலே தொடங்கி எடுத்துக்கொண்ட விஷயத்தோடு பொருத்துவார். ஓவியத்துக்கு வடிவம் முக்கியம். அதோடு வண்ணமும் முக்கியம். அந்த வண்ணமும் மொத்தையாக இல்லாமல் ஒளியும் நிழலும் இணைந்ததாக அமைய வேண்டும். திரு இராகவன் அவர்களுடைய பேச்சிலே அருமையான கட்டுக்கோப்பு இருக்கும். இனிமையும் கச்சித அழகும் துளும்பும். அங்கங்கே பலவகையான பாவங்கள் கலந்துவரும். ஆரோகண அவரோகண கதியிலே ராகம் பாடிக் கீர்த்தனம் பாடி முத்தாய்ப்பு வைக்கிறதுபோல் இருக்கும் அவர் சொற்பொழிவு.. அதைக்கேட்கும் போது இனிமையாக இருக்கும். கேட்டுக்கொண்டே இருக்கவேண்டும் என்ற ஆவல் தோன்றும். கேட்ட பிறகு அடிக்கடி எண்ணி இன்புறும் பயனும் இருக்கும். பல புதிய கருத்துகளைத் தெரிந்துகொண்டிருப்போம். அந்தப் பேச்சை அப்படியே எழுத்தில் வடித்தால் அழகிய கட்டுரை ஆகிவிடும்.



*அவருடைய கம்ப ராமாயணப் பேச்சுகளைக் கம்பன் விழாவிலும் வேறு இடங்களிலும் கேட்டவர்கள் கம்பனுடைய கவியில் அவர் நுழைந்து எடுத்துக் காட்டும் இன்பப் புதையல் களை அனுபவிப்பார்கள். ஒரு காவியத்தை அனுபவிப்பதில் இருவகை உண்டு. முழுமையாகக் கண்டு அனுபவிப்பது, நுட்பங்களைக் கண்டு இன்புறுவது. சிலர் பொதுவாகக் குணச்சித்திரங்களையும் கதையின் அமைப்பு முறையையும் பற்றிப் பேசி முழுமை ஓவியத்தைக் காட்டுவார்கள். சிலர் பாட்டின் சொற்பொருளிலே ஆழ்ந்து அலசி நயங்களைக் காட்டுவார்கள். திரு இராகவன் இரண்டை யுமே செய்வார். முழு உருவத்தைக் காட்டி அதன் அழகை உணர்த்தி அதன் அங்கங்களின் வேறுபாட்டையும் தனித்தன்மையையும் எடுத்துத் தெளியவைப்பார். மேல் நாட்டுக் காவிய கதியோடு ஒப்பு நோக்கச் செய்வார். அவருடைய மேதை காரணமாக அவரால் இதைச் செய்யமுடிகிறது.*

*சுருக்கமாகச் சொன்னால் ஒன்று சொல்லலாம். அவர் பேசினாலும், கட்டுரை எழுதினாலும் அதில் தெளிவு இருக்கும்., இலக்கிய நயம் இருக்கும். பலகாலம் திரும்பத் திரும்ப சிந்தித்துப் பார்க்கும் பயன் இருக்கும். இலக்கியப் படைப்புக்கு இதைவிட வேறு என்ன வேண்டும்?"*

**கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம்**

அறிஞர் கி.வா.ஜ குறிப்பிடுவதைப்போல பேராசிரியருக்கும் கல்கத்தாச் தமிழ்ச்சங்கத்துக்கும் இடையே பலத்த உறவு இருந்தது. கல்கத்தாவில் ஒரு கூட்டத்தில் தாகுரைப் பற்றி ஆங்கிலத்தில் பேசி முடித்தவுடன் வயதானவர் ஒருவர் தேம்பித்தேம்பி அழுது கொண்டே வந்து அ.சீ.ராவின் காலில் விழுந்து வணங்கினாராம். கதாகாலஷேபங்களில் பேசுபவரை நமஸ்கரிப்பதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் இலக்கியக் கூட்டத்தில் , வயதான ஒருவர் அவர் காலில் விழுந்து அழுது

கொண்டே வணங்க வேண்டுமென்றால் அ.சீ.ராவின் பேச்சு அவரை எந்த அளவு நெகிழவைத்தது என்பது தெரிகிறதல்லாவா?. கண்ணீர்த் துளிவர உள்ளுருக்குதல் ' என்று பாரதி இத்தகைய தன்மையைத் தான் சொன்னானோ? கல்கத்தாதமிழ்ச்சங்கத்திற்காக "VOICE OF A POET" என்ற தலைப்பில் பாரதி பாடல்களின் ஆங்கில மொழிபெயர்ப்புப் பாடல்களைத் தொகுத்துக் கொடுத்தார். அந்தப் புத்தகத்தில் சில பாடல்களை இராஜாஜி மொழிபெயர்த்திருக்கிறார். இராஜாஜி அவர்கள் அந்தபுத்தகத்தின் முன்னுரையில் சொல்லியிருக்கும் ஒரு கருத்தைப் பேராசிரியர் நாசூக்காக அதே சமயத்தில் மிகுந்த மரியாதையோடு மறுத்துரைப்பது எடுத்துக்கொண்ட செயலுக்கு உண்மையாக இருக்க வேண்டியதைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. கல்கத்தா தமிழ்ச்சங்கத்தைச் சேர்ந்த அறிஞர் மு. சீனிவாசன் அவர்கள் பேராசிரியரிடம் மிகவுமன்பு பூண்டவர். அ.சீ.ராவைப் பற்றிப் பல கட்டுரைகள் எழுதியிருக்கிறார். அவரது நூற்றாண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடிய பெருமை அவரையே சாரும்.

**சேதுவும் இராகவனும்**

பேராசிரியர் ரா.பி சேதுப்பிள்ளையும் அ.சீ.ராவும் இலங்கை சென்றிருந்தார்கள். அ.சீ.ரா இலங்கைக்குச் செல்வது அதுதான் முதல் முறை. ஆனால் சேதுப்பிள்ளை அவர்களோ பல முறை சென்று தனது அருமையான இலக்கியப் பேச்சால் மக்கள் மனங்களை வென்றவர்.

அங்கே நடந்த இலக்கியக் கூட்டத்தில் முதலில் ரா.பி சேதுப்பிள்ளையவர்கள் பேசினார். அவர் பேச்சை முடித்ததும் அ.சீ.ரா பேச வேண்டும். ஆனால் அவரைப் பற்றி அறியாத மக்கள் மெதுவாக எழுந்து செல்லத் தொடங்கினர். அ.சீ.ரா பேச எழுந்தார். அவர் பேசத் தொடங்கியதும் அவரது குரலின் இனிமையைக் கேட்டுச் சிலர் மீண்டும் இருக்கையில் அமர்ந்தனர்.

"பிள்ளையவர்கள் இலங்கைக்குச் சேது அமைத்துவிட்டார். இதோ இராகவன் வந்திருக்கிறேன்" என்று தொடங்கினார்.

அந்தச் சாமர்த்தியமான பேச்சைக் கேட்ட மக்கள் அனைவரும் மீண்டும் இருக்கைகளில் அமர்ந்தனர். அன்று அந்தக் கூட்டத்தில் அவரது பேச்சின் மூலம் இலங்கை இலக்கிய உள்ளங்களில் நீங்கா இடம் பெற்றார்.

### தனிப்பேர்ச் செம்மல்

கவியரசு கண்ணதாசன் பேராசிரியரிடம் தனி மரியாதை காட்டினார். அவருடைய கவிதைகளைப் படிப்பதிலும் அவருடைய பேச்சுக்களைக் கேட்பதிலும் அவருக்குமிக விருப்பம்.

சில அரசியல் காரணங்களால் பாரீஸில் நடந்த உலகத் தமிழ் மாநாட்டுக்குப் பேராசிரியர் அவர்களை அரசு அழைக்கவில்லை. அதைக் கண்டுகொதித்த கண்ணதாசன், பத்திரிகையில் அரசின் போக்கை வன்மையாகக் கண்டித்துக் கட்டுரை எழுதினார். அதில் அகில இந்தியத் தமிழ் எழுத்தாளர் தலைவராக இருந்ததையும் தமிழுக்கு அவர் செய்த தொண்டினையும் விவரித்து அவரை அழையாதது பெரிய குற்றம் என்று எழுதியிருந்தார். பேராசிரியர் அ.சீ.ரா அவர்களின் மணிவிழா மலரில் அவர் பேராசிரியரைப் பாராட்டி எழுதியுள்ள கவிதை மிகச் சிறப்பானது

"உச்சந் தொடங்கி உட்பா தம்வரை
ஓடுங் குருதியின் ஒவ்வோர் அணுவும்
தமிழே யாகத் தமிழே யாகத்
தழைத்த வடிவம், தனிப்பேர்ச் செம்மல்

தாமிர பரணித் தண்ணீர் போல
பூமி தெரியப் போய்வரும் நன்னீர்
ஆயா தில்லை, ஆய்ந்த பொருளிற்
பாயா தில்லை, பகுத்தொன் றாகத்

தூயோன் கட்டிய தொட்டில் போலத்
தாய்க்கொரு தொட்டில் தந்தவ ரில்லை
"சித்திரப் பாவையின் அத்தக வடங்கி'
அன்னவ ரிடத்தே அறிந்தமா ணாக்கர்

பின்னர் உலகிற் பேர்பெறும் போது
"யாரா சிரியர் எனப்புவி வினவும்
ஓரா சிரியர், ஒவ்வொரு துறையும்
தேரா சிரியர், திரையிடல் அறியா

நேரா சிரியர், நெஞ்சில் ஒளிரும்
பேராசிரியர், என்பர் மாணாக்கர்
சீனியில் வாசம் செய்வது எறும்பு

சீனி வாசர்தம் செந்தமிழ்ச் சீனியில்
யானோர் எறும்பு. அதன்மேல் என்சொல!
தமிழைப் புகழும் மொழிக ளனைத்தும்
இவரைப் புகழ ஏற்றவை யாகும்"



# 10. பட்டிமண்டபம் பாங்கறிந்து ஏறுமின்

பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தம் அவர்கள் அ.சீ.ராவின் நெருங்கிய நண்பர். பல இலக்கிய நிகழ்ச்சிகளில் ஒன்றாகக் கலந்துகொள்வார்கள். பட்டிமண்டபங்களில் அவர்கள் பெரும்பாலும் மோதிக்கொள்வார்கள். பண்டிமண்டபத்தில் பாங்கறிந்து பேசுவதில் அ.சீ. ரா வின் தனிதன்மை பற்றிப் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தம் அவர்கள் சொல்வது:

*" பட்டிமண்டபத்தில் கலந்துகொள்வது என்பது ஒன்று. அதுமிக எளிதான காரியம். எந்த ஒரு கட்சியை வேண்டுமானாலும் மேற்கொண்டு வாதம் செய்யலாம். கொஞ்சம் வாயாடியாக இருக்கின்றவர்கள் உண்மையைப் பொய்யாகவும், பொய்யை உண்மையாகவும் ஒருவாறு நிலைநாட்டிவிடக் கூட முடியும். ஆனால் பட்டிமண்டபத்துக்குத் தலைமை வகிப்பது என்பது ஒரு பெரும் சோதனையான ·செயலாகும்.*

*பேராசிரியர் அவர்கள் இவ்விரண்டு துறைகளிலும் தன்னிகரில்லாது தனித்து நிற்பவர்.*

*மிகவும் ஆழ்ந்தும் விரிந்தும் உள்ள அவர்களுடைய பல்துறைக் கல்வி எந்தக் கட்சியையும் எடுத்து நிறுத்தத் துணை நிற்கின்றது. சொற்செல்வத்திற்கோ பஞ்சமில்லை. எனவே அவர்கள் பங்கு பற்றும் கட்சி சிறப்படைவதில் வியப்பொன்றும் இல்லை. அது மட்டுமன்று . புகைவண்டி எஞ்சின் தான் தானும் முன்னேறிச் செல்வதோடு பின்கோக்கப் பெற்ற பெட்டிகளையும் இழுத்துச் செல்வதுபோல தாம் தலைமை தாங்கும் கட்சியில் இருக்கிற பிற உறுப்பினர்கட்கும் வேண்டிய அளவு பயிற்சி தந்து கட்சி வெல்ல அரும்பாடு படுவார் பேராசிரியர். எத்துணைத் தூரம் கட்சியில் ஆழ்ந்து இருந்தாலும் எதிர்க்கட்சியாளர்கள் நல்ல கருத்தை வெளியிட்டால் தம்முடைய கட்சியையும் மறந்து பெருஞ்சத்தமிட்டு அதனை வரவேற்றுப் பாராட்டும் பண்புடையவர். இந்த ஒரு தனிச் சிறப்பு இன்று பட்டி மண்டபத்தில் பங்குகொள்ளும் பலரிடம் காண்பது அரிது. பேராசிரியர் எதிர்க்கட்சியாளரிடம் பாராட்டும் பகுதிகள் அவருடைய கட்சிக்கே ஊறு விளைவிக்கும் பகுதிகளாக*

இருந்தாலும் அதையும் மறந்துவிட்டு நல்லதைக் கண்டு பாராட்டும் பண்புடையவர். என்றாலும் அதற்கு விடையிறுக்க நேரம் வந்தவுடன் தம்முடைய எல்லையில்லா அறிவுத் திறத்தால் புதிய புதிய வாதங்களைச் செய்து தாம் பாராட்டிய அதே கருத்தை வெல்லும் வகை காண்பார். எவ்வளவு ஆழ்ந்து பட்டிமண்டபத்தில் ஈடுபட்டாலும் வெற்றி தோல்வி என்பதைப் பற்றி ஒரு சிறிதும் கவலையுறாமல் இறுதிவரையில் புன்சிரிப்போடு இருக்கும் தகைமை உடையவர்.

பட்டிமண்டபத் தலைவர்கள் இருவகைப் படுவர். முதல் வகையினர் , பட்டிமன்றத்தில் பேசப்படுகின்ற வாதங்களைக் காதில்கூட வாங்கிக் கொள்ளாமல் தாம் எந்த ஒன்றை நினைத்துக் கொண்டு தலைமைப்பீடத்தில் அமர்கின்றார்களோ அதையே முடிவாகத் தந்து முடிக்கின்றவர்களும் உண்டு. ஆனால் இரண்டாவது தொகுப்பைச் சேர்ந்தவர்கள் தம்முடைய கருத்தைப் புகுத்தாமல் வாதத்தை மட்டும் கேட்டு , அந்த வாதத்தின் அடிப்படையில் நின்று தாம் முடிவு வழங்குகின்றவர்கள். முடிவுரை கூறி முடித்த பிறகு தம்முடைய கருத்தைத் தனிப்பட்ட முறையில் வெளியிடுவார்கள்.

வாதம் இடுபவர்கள் எத்துணைத் தவறாக வாதம் புரிந்தாலும் தலைமை வகிக்கின்றவர்கள் அது தவறு என்று தெரிந்த உடனே குறுக்கிட்டு அதைத் தடை செய்வதும் உண்டு. நிறைகுடமாகிய பேராசிரியர் இத்தவற்றை ஒருமுறைகூடச் செய்ததில்லை. கட்சியாளர்கள் சில சமயங்களில் வேண்டுமென்றே பாடலுக்கு முரண்பட்ட பொருள் கொள்ளும் போது அவர்களறிந்தே தான் இதனைச் செய்கின்றார்கள் என்ற உண்மையத் தெரிந்த பேராசிரியர் நகைத்து"பேஷ், பேஷ், இதுவும் ஒரு பொருளா? " என்று கேட்டு மன்றத்தில் சிரிப்பை உண்டாக்கும் இயல்பை உடையவர். இப்படிச் சொல்வதால் வாதம் இடுபவர் மன வருத்தம் கொள்ளாததோடு அவையில் உள்ளவர்களும் வேண்டுமென்றே வாதத்துக்கு இத்தகைய பொருள் கொள்ளுகிறார் என்று நினைக்கவும் செய்து விடுவார்.

பட்டி மன்ற வாதத்தைத் தொடங்கும் போது பேராசிரியர் இராகவன் ஒருவர், இறுதியாக முடிக்கும் பேராசிரியர் ஒருவராக விளங்குவார். பன்முறை அவரோடு பட்டிமன்றத்தில் பங்குகொண்ட பிறகு நான் இதுபற்றிச் சிந்தித்தது உண்டு. இறுதியாக அவ்வுண்மையையும் தெரிந்துகொள்ள முடிந்தது. வாதம் நடைபெறுகின்ற நேரம் முழுவதும் ஒருமுகப் பட்ட சிந்தனையோடு அதே கருத்தைப் பேராசிரியர் சிந்தித்துக் கொண்டிருப் பாராதலின் , கொஞ்சம் கொஞ்சமாகச் சைவசித்தாந்தியாகி தான் எடுத்துக்கொண்ட கட்சி, பேசுகின்ற தான் என்ற துவைத நிலையற்றுக் கட்சியும் தாமும் ஒன்றாகவே, அத்வைதமாக ஆகிவிடுகின்ற சிறப்புடையவர் பேராசிரியர். எனவேதான் வாதத்தை முடிக்கின்ற சூழ்நிலையில் அவருடைய பேச்சு ஒப்புயர்வற்றதாய் ஆழ்ந்த சிந்தனையோடு கூடியதாய் மிளிர்வதைக் காண்கிறோம். அந்தச் சூழ்நிலையில் எள்ளல், நகைப்பு முதலியவற்றுக்கு இடமின்றி மிகத் தீவிர வாதமாக புரிவதைக் காண்கிறோம். பட்டி மன்றத்தில் பங்கு கொள்ளு கின்ற பலர் இம்முறையில் அத்துவித நிலையை அடைதல் இயலாத காரியம்.

**இதுவல்லவோ பண்பு**

எத்துணைச் சிறப்புடைத்தாயினும் பட்டிமன்றத்தில் தொல்லை தருகின்ற பகுதி ஒன்று உண்டு . அதுவே அளவறியாது சென்றுவிடலாகும். மோதல் என்று வந்தவுடன் ஒரு சிலர் தம்மையும் மீறிச் சென்றுவிடுவதும் உண்டு. நகைச்சுவைக்காக ஒருவருக்கொருவர் தாக்கிப் பேச நேரிடும். சில சமயங்களில் கருத்தைத் தாக்குவதாக நினைத்துக்கொண்டு ஆளைத் தாக்கிவிடுவதும் உண்டு தரமிழந்து தம்மைத் தாக்கியவர்களைக் கீழே சென்று எதிர்த்து, தாமும் அவர் நிலைக்குச் சென்று தாக்கிவிடுபவர்களும் இல்லாமல் இல்லை.

எந்தச் சூழ்நிலையிலும் தம்முடைய பண்பாட்டை இழக்காத ஒரு சிலரும் உண்டு. பேராசிரியர் இவ்வினத்தைச் சேர்ந்தவரேயாகும். எந்தச் சூழ்நிலையிலும் அவர் தரமிழந்ததே இல்லை. எடுத்துக்கொண்டு பேசும் பாத்திரங்களில் ஈடுபட்டும்

*கவிஞருடைய படைப்பில் ஈடுபட்டும் தம்மை மறந்து பல சமயங்களில் பேசுவதைக் கேட்டுள்ளோம். ஆனால் பட்டி மண்டப வாதத்தில் பிறரைத் தரக்குறைவாக அவர் என்றுமே பேசியதில்லை. நகைச்சுவைக்காகக் கூட அவர் இந்த உத்தியைக் கையாண்டதைக் கண்டதில்லை. பண்பாட்டுக்கு இதைவிடச் சிறந்த எடுத்துக்காட்டு வேறுவேண்டா."*

**ஜயமுண்டு பயமில்லை**

புதுக்கவிதைப் பிதாமகர்களில் ஒருவராய்க் கருதப்பட்ட திரு ந. பிச்சமூர்த்தி அவர்கள் 'சிந்தனை'ப் பத்திரிகையில் கனவு என்ற தலைப்பில் ஒரு கவிதை எழுதியிருக்கிறார். அவரும் பேராசிரியர் அ.சீ.ராவும் சிறந்த நண்பர்கள். திருச்சியில் ஒருசமயம் பேராசிரியர், ந.பிச்சமூர்த்தி, புதுமைப்பித்தன் ஆகியோர் ஒருவீட்டின் கீழ்த்தளத்தில் இருந்தார்கள். அந்த வீட்டின் மேல்தளத்தில் பாரதியாரின் மாமா சாம்பசிவ அய்யர் பாரதியின் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தார். பாரதி பாடிக் கேட்டவர் அவர் என்ற காரணத்தால் அதே உணர்ச்சி அவர் பாடும் போது கிடைக்கும்.. அவர் "உலகத்து நாயகியே எங்கள் முத்து மாரியம்மா எங்கள் முத்து மாரி" என்ற பாடலை உணர்ச்சிகரமாகப் பாடினார். கீழே பேசிக்கொண்டிருந்த பிச்சமூர்த்தியின் மனம் அந்தப்பாடலில் ஒன்றிப்போனதால் தன்னை மறந்தார். அவரது கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்து " ந. தேம்பி அழத் தொடங்கிவிட்டார். உடனிருந்தவர்கள் 'எவு சமாதானப் படுத்தியும் அவரைக் கட்டுப் படுத்த -யல்லை. பேராசிரியர். அ.சீ.ரா மாடிக்கு விரைந்து சென்றார். சாம்பசிவய்யரிடம் "ஜயமுண்டு பயமில்லை மனமே" பாடுங்கள் என்று வேண்டினார். அவரும் உணர்ச்சிப் பிரவாகத்தோடு அந்தப்பாடலைப் பாடினார். பிச்சமூர்த்தியின் அழுகை நின்றது.

**அன்புள்ளத் திருலோகம்**

பேராசிரியரின் நண்பரும் பரம ரசிகருமான கவிஞர் திருலோக சீதாராம் திருச்சியில் வசித்துவந்தார். திருச்சியில் எழுத்தாளர் மாநாடு ஒன்று நடந்தது. அதில் பல மொழிகளைச் சேர்ந்த கவிஞர்களும் கலந்து கொண்டார்கள். அரங்கிற்குப்

பேராசிரியர் தலைமை. கவிஞர் திருலோக சீதாராம் "முன்பொரு பாடல் எழுதினேன் அதன் மூலப்பிரதி கைவசமில்லை" என்ற பாடலைப் படித்தார். மிக அருமையான பாடல் அது. அந்தப் பாடலைக் கேட்ட சில தமிழ்க்கவிஞர்கள் எள்ளலாகச் சிரித்தார்கள். அதைக்கேட்ட பிறமொழிக் கவிஞர்கள் சிலரும் அவர்கள் எதற்காகச் சிரிக்கிறார்கள் என்று தெரியாமலே சிரித்தார்கள். ஒரு தமிழ்க்கவிஞனின் அருமையான பாடல் கேலிக்குரியதாக ஆக்கப் படுவதைக்கண்ட பேராசிரியருக்கு உள்ளுக்குள் கடுமையான கோபம். அதைச் சற்றும் வெளிக்காட்டிக் கொள்ளாமல் திருலோக சீதாராம் படித்து முடிந்ததும் அந்தக்கவிதையை வாங்கி அது எவ்வாறு உலகத் தரமுள்ள கவிதைகளுக்கு இணையானது என்பதை விளக்கி அரைமணி நேரத்துக்கும் மேல் பேசினார். தனது கவிதையில் இவ்வளவு பொருள் இருக்கிறதா என்று அதை எழுதிய திருலோக சீதாராமுக்கே வியப்பு. பேராசிரியர் தனது விளக்கத்தை ஆங்கிலத்திலும் சொன்னதால் அன்று அந்தக் கவிஞர் கதாநாயகனாகிவிட்டார். மற்ற மொழியைச் சேர்ந்தவர்களும் அந்தக் கவிதையை வாங்கிச் சென்று தங்கள் மொழியில் வெளியிட்டார்கள். திருலோக சீதாராம் பாரதியாரின் குடும்பத்தை நன்கு அறிந்தவர். அவர்களுக்கு உதவி செய்து வந்தவர். சிவாஜி என்ற இலக்கியப் பத்திரிகையை விடாமல் நடத்திவந்தவர். கந்தர்வ கானம் என்பது அவருடைய கவிதை களின் தொகுப்பு. அவர் பேராசிரியரின் மணிவிழாவின் போது கி.வா.ஜ தலைமையில் நடந்த கவியரங்கத்தில் கலந்துகொண்டார். அவரோடு அந்தக் கவியரங்கில் கலந்து கொள்ளும் வாய்ப்பு இந்த நூலாசிரியனுக்கும் கிடைத்தது.

திருலோக சீதாராம் மறைந்த போது பேராசிரியரெழுதிய இரங்கற்பா உள்ளத்தை நெகிழச் செய்வது.

"அன்புள்ளத் திருலோகம் போய்விட்டாயா?

அண்ணனென வாயார எனையழைத்த

உன்னையினி என்றைய்யா காண்பேன்?" என்று தொடங்கும் அந்தக் கவிதை கவிஞரின் சிறப்பையும் அவரோடு தமக்கிருந்த உறவையும் சொல்லிச் சென்று, பாம்புப் பிடாரன் கவிதையைத் திருலோகம் வாயாரப் பாராட்டியதையும் நினைவு கூர்ந்து இறுதியாக

"நெளிந்துவிழும் 'நாணல்'தான் , ஆனால் என்ன
நீ உதறிப் போய்விட்ட நெருப்பில் ஏதோ
வளைந்துயிர்க்கப் பார்க்கின்றேன், பார்த்தும் என்ன?
வடவையிலும் வேகாத 'நாணல் உண்டோ?' என்று

முடிக்கிறார்.

**நாமக்கல்லார் பாராட்டு**

நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளையின் பால் பெருமதிப்புக் கொண்டவர் பேராசிரியர். நாமக்கல் கவிஞர் பேராசிரியரின் பேச்சிலும் கவிதையிலும் மயங்கியவர். பேராசிரியரின் மணிவிழாவின் போது அவர் வழங்கிய வாழ்த்துக்கவிதை முலம் இதை அறியலாம்

"தாய்மொழி தமிழில் தரமிகு புலமையும்
வடமொழி அதிலும் வளமார் பயிற்சியும்
ஆங்கில மொழியில் ஆழ்ந்த கல்வியும்
இசையொலி போன்ற இனிய குரலில்
பதம்பத மாகப் பாட்டைப் பிரித்துப்
பாலின் சுவையைப் பருகச் செய்யும்
பேச்சுத் திறனும் பெற்றவனாகிய
அன்பிற் சிறந்த அ.சீநிவாச
ராகவன் எனதோர் இனிய நண்பன்
சத்தியச் சாந்தச் சன்மார்க்க சீலன்
பெருங்குணம் படைத்த பேராசிரியன்
மாணவர்க் கன்றி மற்றுள யார்க்கும்

வழிகாட்டியாக வாழ்ந்திடும் ஆசான்" எனப் பாராட்டுகின்றார்,

**காணாமலே காதல்**

பேராசிரியர் அவர்களிடம் காணாமலே காதல்கொண்டேன் என்கிறார் ஞானபீட விருது பெற்ற பிரபல எழுத்தாளர் அகிலன்.

*"பேராசிரியர் அ.சீ.ரா அவர்களிடம் 'காணாமலே காதல்" கொண்டிருந்த எத்தனையோ பேர்களில் அப்போது நானும் ஒருவனாக இருந்தேன்,"நாணல்' என்ற பெயரில் மறைந்து அவர்கள் எழுதிய கவிதைகளில் எனக்கொரு மயக்கம்., அவர்களது இலக்கியக் கட்டுரைகளைப் படித்து மகிழ்வதில் ஒரு தனியின்பம். அவர்களிடம் பயின்ற மாணவர்கள் அவர்களைப் பற்றிப் பேசும் போது 'நாமும் அவர்களிடம் பயின்றிருக்கக் கூடாதா?' என்ற ஏக்கம்- இவை அனைத்தும் என்னுள் அந்தக் காதலை வளர்த்தன"*

அவரை அகிலன் அவர்கள் முதன் முதல் சந்தித்த நிகழ்ச்சியையும் அது அவருள் விளைத்த உணர்வையும் மிக அழகாக கூறுகிறார்..

சென்னையில் நடந்த எழுத்தாளர் மாநாடு ஒன்றில்தான் அகிலன் பேராசிரியர் அ.சீ.ரா வைச் சந்தித்தார். அப்பொழுது பேராசிரியர் தமிழ்ச் சிறுகதைகளின் அப்போதைய நிலையைப் பற்றி ஆற்றிய உரை அவரை வெகுவாகக் கவர்ந்தது.

*""பேராசிரியர் அ.சீ.ரா அவர்கள் மகாநாட்டின் கருத்தரங்கு ஒன்றுக்குத் தலைமை வகிக்க வந்திருந்தார்கள்.*

*பேச்சுக்கிடையே அவர்கள் சிறுகதை எழுத்தாளர் சிலரைப் பற்றி நகைச்சுவையோடு குறிப்பிட்ட செய்தி இன்னும் என் நினைவில் இருக்கிறது.*

*"காலையில் கதாநாயகன் ஆபீசுக்குப் புறப்படும் போது அவன் மனைவியின் மீது அவனுக்குக் கோபம் வந்து விடும். அவள்தயங்கியவாறே அவளிடம் காபியைக் கொண்டுவந்து நீட்டுவாள்."குடிக்க முடியாது போ" என்று கூறிவிட்டு அவள்ஆபீசுக்குப் போக இவள் இங்கே வீட்டில்*



அழுதுகொண்டிருப்பாள். ஆபீசுக்குப் போனவனுக்கு மனைவியின் மீது அனுதாபம் பிறந்துவிடும். திரும்பி வந்தவுடன் அவன் உற்சாகத்தோடு ,"காபி கொண்டு வா" என்பான். அவளும் அந்த ஆறிப்போன அதே காபியைச் சுடவைத்துத் திரும்பவும் கொண்டுவந்து கொடுப்பாள்.-கதை முடிந்துவிடும்"

அவர்கள் பேசும் போது அவர்களது விழிகள் மட்டும் மெல்ல நகைத்தனவே தவிர அவர்கள் நகைக்கவில்லை. பேச்சைக் கேட்டவர்கள் அனைவருமே சிரித்தார்கள். கைதட்டிப் பரவசம் அடைந்தார்கள். இதில் வியப்பு என்னவென்றால் எந்த எழுத்தாளர்களை அவர்கள் கேலி செய்தார்களோ அவர்களும் கோபமடையவில்லை. "ஆறிப்போன காபியைக் திரும்பத் திரும்பச் சுடவைத்துக் கொடுப்பது போலப் புளித்துப்போன விஷயங்களையே இன்னும் எழுதிக்கொண்டிருக்கிறீர்களே" என்று நேரடியாக அவர்கள் குற்றம் சாட்டிக் கோபம் அடைந்திருக்கக் கூடும். குறைகூற வேண்டிய அவசியம் வந்து குறை கூறிய போதிலும் , அதில் ஒரு கலைச் சுவை , நகைச் சுவை இலக்கியச் சுவையைக் காணமுடிந்தது."

**ஒருவன் இவன்**

"இருவரிவர் நின்றிடத்தும் எவரெவர் எதிர்ந்திடத்தும் ஒருவன் இவன் என்றுணர்ச்சி கூடலாம்" என்று அருணகிரிநாதர் சொல்வது போல எத்தனை பேர் மத்தியிலும் தனியாளகத் தெரிகிற- தனது புலமையினாலும், பேச்சாற்றலாலும்,எவரையும் புண்படுத்தாத பேச்சாலும், அழகிய தோற்றத்தாலும்- ஒரு சிறப்பு பேராசிரியரிடம் இருந்தது.

"பெரிய கூட்டங்களில் அவர்கள் பேசும்போதாகட்டும், இரண்டு மூன்று பேர்களுகிடையே அமர்ந்து உரையாடும் போதாகட்டும் - அவர்களுடைய சொல்நயம் அனைவரையுமே

*அவர்கள்பால் ஈர்த்துவிடுவதைக் கண்டிருக்கிறேன். இந்த ஈர்க்கும் தன்மையே அவர்களுடைய தனித்தன்மை என்றும் கூறலாம். பலருக்கு எளிதில் கிடைக்காத ஒரு தன்மை அவர்களிடம் இயல்பாகவே இரண்டறக் கலந்திருந்தது." என்கிறார் அகிலன்.*

**அங்கமா அலங்காரமா?**

பேராசிரியர் மரபுக்கவிதைதான் எழுதினார். ஆனால் தமிழாக்கங்களில் புதுக்கவிதைப் பாணியில் ஓரிரு கவிதைகள் எழுதியதுமுண்டு. பழைமை சிறந்ததுதான். அதற்காகக் கண்மூடித்தனமாக அதைப் பின்பற்றுபவரல்ல பேராசிரியர். இதைப் பல இடங்களில் ஆணித்தரமாக எழுதியிருக்கிறார். பல தமிழ் அறிஞர்களுக்கு அ.சீ.ராவின் அறிமுகமே இத்தகைய கருத்தினால் ஏற்பட்டிருக்கிறது. அவரோடு இந்துக் கல்லூரியில் ஒன்றாகப் பணிபுரிந்த பேராசிரியர் அருணாசலக்கவுண்டருக்கு அ.சீ.ராவின் தொடர்பு இப்படியொரு அறிமுகத்தால்தான் நிகழ்ந்தது.

அருணாசலக்கவுண்டர் சொல்லுகிறார்

*"1932-33 என்று ஞாபகம். நாங்கள் நாலைந்து நண்பர்கள் ஒரு சங்கமாய்ச் சேர்ந்து தமிழ் இலக்கியத்தை ஆராய்ந்து வந்தோம். ஒரு ஞாயிறன்று எங்களுக்கு முன்னம் அறிமுகம் ஆகாத அ.சீ.ரா "நானும் நண்பர் தான்" என்று எங்கள் குழாத்திலே சேர்ந்துகொண்டார். அன்று விவாதத்திலே இருந்தது "தமிழ் யாப்பின் எதுகை மோனை முதலிய தொடை நலங்கள் கவிதைக்கு முக்கியமான அங்கங்களா அல்லது அலங்காரங்களா?" என்ற கேள்வி . விவாதத்தை நான் தொடங்கி வைத்தேன்.*

*"மோனை முத்தமிழ் என்பார்கள். தமிழ்க் கவியின் உயிர்நாடியே மோனையும் எதுகையுந்தான். இவை இல்லையெனின் செய்யுள் இல்லை வெறும் வசனந்தான். அகடவிகடம், நொண்டிசண்டி போன்ற தொடர்கள் பேச்சிலும் ஒரு வழக்கே" என்று மேலும் தொடர்ந்தேன்.*

*நளவெண்பாவிலே ஒரு பாடல்:*

> *"கானகத்துக் காதலியைக் காரிருளில் கைவிட்டுப்*
> *போனதுவும்.."*

*இப்பாட்டின் முதலடியிலேயே முற்று மோனை அமைந்து, அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றி வெண்சீர் வெண்டளை மேவிச் செப்பலோசை ஒலிப்பதை மந்தச் செவியும் நுகருமே!. இவ்வாறு ஓசை இன்பமே பயக்கத் தமிழ்ப்புலவர் செய்யுள் இயற்றினர். ஓசையும் எதுகை மோனைகளால் எழுவதுதான். எத்துணையோ காலம் செய்யுள் வழக்குப் பலவாற்றானும் இந்நாட்டிலே வளர்ந்ததன் பயன்தான் எதுகை மோனைகள். பல பாஷைச் செய்யுள்களைப் பயின்றார்க்கு இவை வியப்பை விளையாதிரா" என்று விவரித்தேன்.*

**வெறும் கூச்சலாகவும் கூடும்**

*தமிழ் வித்துவான் ஆகிய என்பேச்சைப் பொறுமையுடன் கேட்டுவந்த , அந்த ஆங்கில ஆசான், " அது சரிதான். ஆனால்.." என்று இழுத்தார்.*

*"ஆனால் போடுகிறீர்களே, உங்களுக்கு யாப்பியல் தெரியுமா?" என்றேன்.*

*"தெரியும்.. தெரியாது அது அல்ல பேச்சு. - நீங்கள் சொன்னீர்களே 'கானகத்துக் காதலியை காரிருளில் கைவிட்டு" இதன் ஓசை , ஆம் செப்பலோசைதான், இது கவிதையின் அம்சம்தான். ஆனால் எதுகையும் மோனையும் வெறும் கூச்சலாகவும் கூடும்" என்றார். எனக்குப் பெரிய அதிர்ச்சியாக இருந்தது . அவர் தொடர்ந்தார்.*

*"இந்தக் கவிதையைக் கேளுங்கள். கல்யாணமண்டபத்துக்கு நடந்துவரும் சீதையின் ஒப்பற்ற பேரழகைப் போயும் போயும் நமக்குச் சொல்ல வருகிறார் கம்பர். அவருடைய இதயம் முழுவதையும் நிறைத்து அலைமோதும் அழகொளிக்கடலை நமது திரு மனத்திலே எப்படிப் பெய்வது? அதற்கு உபாயம் அவர் அறிவார். பாடுகிறார்.*

*பொன்னின் ஒளி, பூவின் வெறி சாந்து பொதி சீதம்*
*மின்னின் நிழல் அன்னவள்தன் மேனி ஒளிமான*
*அன்னமும் அரம்பையரும் ஆரமுதும் நாண*
*மன்னவர் இருந்த மணி மண்டபம் அடைந்தாள்.*

பொன்னின் பொலிவிலும் பூவின் மணத்திலும் சந்தனத்தின் தண்மையிலும் மின்னலின் துடிப்பிலும் தோய்ந்து அழகை நோக்கித் தாவிச் சென்ற நம் மனம் அன்னம் அரம்பையர் அமுது, என்ற உவமைப் பிழம்புகளின் மூலமாகக் கற்பனைக் கனல் ஏறி, எல்லையற்ற பேரழகைத் தொடுகிறது" என்றார். மெய்மறந்து இருந்தோம்.

அவர் தலைவர்

"என்ன கவுண்டரையா நான் சொல்லுவது?" என்று என்னைப் பார்த்தார்.

என் மௌனம் கலைந்தது. என்னவோ கேட்கவேண்டும் என்று தோன்றியது. அதற்குள்

'கவிஞருடைய கற்பனை நம்மிடம் எப்படி வந்துசேர்ந்தது? இதுதானே?' என்றார்

"இதுகூடத் தெரியாதா? சொற்களின் மூலமாகத்தான்" என்றேன்.

'நல்லது, சொற்களும் அவை ஒன்றாக நின்று நடனமிடும் சந்தமும் தான் கவிஞரது ஒப்பற்ற அனுபவத்தை நமக்கு வழங்குகிறன.

அன்னம்-வெண்மை, தூய்மை, மிதப்பது போன்ற நடை

அரம்பையர்- அழகு , நடனம், நளினம்

ஆரமுது- இனிமை, தெவிட்டாத தன்மை

இவை மூன்றும் தனித் தனி உலகம். இந்த உலகத்திலே நாம் எப்படிப் பிரவேசிக்கிறோம்.?

இந்த அடியைச் சொல்லிப் பாருங்கள்.

:"அன்னமும் அரம்பையரும் ஆரமுதும் நாண"

தீம்தரிகிட தீம்தரிகிட என்று நடன கதிக்குத் துள்ளும் சந்தமும், பாட்டிலே ஒளிந்து விளையாடி இயல்பாக மின்னுகிற மோனையும், பாட்டின் தாளத்தை நிமிர்த்திக்காட்டும் எதுகையும் , இத்தனைக்கும் இடந்தந்து குழையும் சொற்களும், கவிஞர் மனத்திலே வடிவெடுத்துக் கல்யாண மண்டபத்து நடந்து வந்த

*அந்த அழகுத் தெய்வத்தை நம் மனசிலும் கொணர்ந்து நிறுத்துகின்றன.*

*மன்னவர் இருந்த மணி மண்டபம் அடைந்தாள்*

*-பாட்டை முடிந்தால் முழுவதும் பாடிப் பாருங்கள். செய்யுள் இன்பம் எதுகை மோனையில் மட்டும் இல்லை. ஆனால் எதுகையும் மோனையும் அவ்வின்பத்துக்கு மெருகிடும் கருவிகள். நாவுக்கும் பாவுக்கும் ருசி பிறக்க செவிக்கும் தீஞ்சுவை சுரக்க,*

*இன்பம் பயக்கும் செய்யுட் சிறப்பு எதுகை மோனைகளில் நின்று ஆடாமல், சீரிய கூரிய தீஞ்சொற்கள் செறிந்த பண்களிலும் அசை ஓசை அளந்து அளபெடை கண்டு கூட்டும் தன்மையிலும் அடிமுடிந்த இடத்தில் பொருள் முடியாமல் அடிக்கூடு, அடிக்குருவி ஓடும் இசை விசையிலும் நிற்கிறதே ஒழிய , "கானகத்தில் காதலியைக் காரிருளில் கைவிட்டு" என்பதிற்போல அடிதோறும் டடம், டடம், என்று ஒலி விழுகிற ஓரோசை இசைப்பில் இல்லை. புரிகிறதா?" என்றார்.*

*பண்டைய நம் உரையாசிரியர்களது உரை விளக்கங்கள் அடிப்படை ஆராய்ச்சிக்குப் பயன்படக்கூடியவை, மிகுந்த புலமையும் உழைப்பும், நுட்பமான புத்தியும் கொண்டவை யேனும் நிறைமதி தவறாச் சுவை ஒப்பு நோக்கும் பாங்கை அவை முழுவதும் மேற்கொள்ளவில்லை என்பது அ.சீ.ரா. பேச்சால் அன்றைய சர்ச்சையில் நான் கண்டுகொண்ட உண்மை. அன்றுமுதல் எங்கள் சங்கத்தின் தலைமைப் பதவி அவர்க்குத்தான்"*

இதே கருத்தை அ.சீ.ரா தனது கட்டுரைகள் பலவற்றில் தெளிவுபடுத்தியிருக்கிறார். சிந்தனைப் பத்திரிகையில் பேராசிரியர் அருணாசலக் கவுண்டருக்கும் அவருக்கும் இடையே "சிந்தனை ஒருவரது தாய்மொழியில்தான் இருக்கவேண்டுமா?' என்ற தலைப்பில் 23-3-1946ல் நடைபெற்ற விவாதத்தை அப்படியே வெளியிட்டிருக்கிறார். அதில் கருத்தைத் தெளிவுபடுத்தி உண்மையை வெளிக்கொணர பேராசிரியர் அ.சீ.ரா கையாண்டிருக்கும் உத்திகள் வியக்க வைக்கின்றன.

சிந்தனை மொழி

அதைப்பற்றிச் சுருக்கமாக இங்கே பார்க்கலாம். 'தமிழ் மொழியிலேயே சிந்தனை செய்வதுதான் தமிழ் வளர்ச்சிக்கு இன்றியமையாத சாதனமா?' என்று பேராசிரியர் அ.சீ.ரா கேட்க, பேராசிரியர் அருணாசலக்கவுண்டர் சொல்கிறார்

"பயிருக்குத் தண்ணீர் அவசியமா என்று கேட்பதுபோல் இருக்கிறது. தண்ணீர் இல்லாமல் பயிர்வளர்ந்தாலும் வளரலாம், சிந்தனை இல்லாமல் மொழி வளருமா"

"எந்த மொழியில் என்பதுதான் கேள்வி" என்கிறார் அ.சீ.ரா. விவாதம் தொடர்ந்து செல்கிறது.

*"புதிய கருத்துகளை ஆராயும் போது அந்தக் கருத்துகளின் வாசனை சிறிது கூட இல்லாத மொழியின் துணையைக் கொண்டு சிந்தனை நடைபெறாது. மின்சார சக்தியின் நுட்பங்களைப் பற்றியோ பொதுவுடமைத் தத்துவத்தைப் பற்றியோ ஐன்ஸ்டீன் என்ற விஞ்ஞானியின் ரிலேட்டிவிட்டி தத்துவத்தைப் பற்றியோ இன்று தமிழ் இருக்கும் நிலையிலே தமிழிலேயே சிந்திக்க முடியுமா? சிந்தனையை ஆங்கிலத்திலோ அல்லது ஆங்கிலமும் தமிழும் கலந்த மணிப்பிரவாளத்திலோ செய்யட்டும். அதை வெளியிடும் போது நல்ல தமிழில் எழுதட்டும் என்பது என்கட்சி"* என்கிறார் அ.சீ.ரா.

" புதிதாக மணிப்பிரவாளம் ஒன்றை சிருஷ்டிக்க வேண்டும் என்கிறீர்களா?" என்பது அருணாசலக் கவுண்டரின் கேள்வி.

*" புதிய கருத்துகள் வருவதே வளர்ச்சியென்றால் அவற்றோடு உறவாடும் தமிழன் முதன்முதல் தமிழிலேயே அவற்றைப் பற்றி எவ்வாறு சிந்திக்க முடியும்? சிந்தனை தமிழிலேயே நடைபெற வேண்டுமென்றால் தமிழர்களிடையே புதிய கலைகள் வளர்வதற்கும் தமிழிலே அவை பேசப் படுவதற்கும் இடமில்லை. ஆகவே தமிழ் வளரவும் இடமில்லை.. தமிழைத் தவிர வேறெந்த மொழியும் பயிலாத ஒருவன் பழைய கருத்துகளையே பரிமாறுவான். மதிவதனம் மதிமுகமாகி, மதியின்"பாகந்தரு நுதலாள்' ஆகும். பாஸிசத்தைப் பற்றிப் பேச வேண்டுமென்றல் வள்ளுவர் தோன்றுவார். சிறிதளவு பழைய கருத்தை மாற்றியும்*

*வெளியிடுவான். அப்போது மதிபோன்ற முகம் முகம் போன்ற மதியாகும். இரண்டு மூன்று பழையகருத்துகளைக் கலந்து புதிய கருத்துகளை அவன் சிருஷ்டிக்கலாம்,. "உயிரெலாம் உறைவதோர் உடம்பு" என்று கம்பன் பேசவில்லையா? அதுபோல , என்றாலும் தமிழுக்கே புதிதான விஞ்ஞான அறிவு , சமுதாய அரசியல் தத்துவ நூல்கள் , சரித்திர ஆராய்ச்சி , மேல்நாட்டு மானத சாஸ்த்திரம் இவை போன்றவைகளை அவனால் கனவில் கூடக் காண முடியாது.*

*"புத்தம் புதிய கலைகள்-பஞ்ச*

*பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்*

*மெத்த வளருது மேற்கே- அந்த*

*மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை"*

*என்று ஏங்கி நிற்பதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்?"* என்கிறார் அ.சீ.ரா.

"பௌதிகம், ரசாயனம், போன்ற கலைகள் மேல்நாட்டில் உள்ள அளவுக்குத் தமிழில் இல்லை என்பது உண்மை. ஆனால் அவர்றைச் சொல்லும் திறமை தமிழ் மொழிக்கில்லை என்றா சொல்கிறீர்கள்?" இது கு.அ. கேள்வி

அதன் பிறகு மொழி பெயர்ப்பைப் பற்றி விவாதம் தொடர்கிறது. பிறகு முடிந்த முடிவாக அ.சீ.ரா தன் கருத்தை வெளியிடுகிறார்.

"தமிழ்மொழியிலேயே சிந்தனை செய்வது தமிழ் வளர்ச்சிக்கு இன்றியமையாதது என்பதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆற்றிலே புதுவெள்ளம் வரும்போது கரை உடைந்து சேதம் ஏற்படலாம். இதற்காகப் புதுவெள்ளமே வேண்டாம் என்று சொல்வாருண்டா? "

இதைப்போலவே மரபு மரபு என்று சொல்லிக்கொண்டு கிணற்றுத் தவளைகளாக இருப்பதையும் பேராசிரியர் அ.சீ.ரா ஏற்றுக்கொள்ளவில்லை.

"நேற்றையப் புதுமையே இன்றைய மரபு, இன்றையப் புதுமையே நாளைய மரபு. மரபு என்பது ஒரே நிலையில் இறுகிப்போன பாறையன்று. தலைமுறை தோறும் முகிழ்க்கும் புதுமையை ஏற்று, தன்மயமாக்கி வளர்ந்துவரும் உயிர்ப்பாடு." என்கிறார்.

**பழமையும் புதுமையும்**

திருச்செந்தூர் உற்சவம் காண வந்திருந்த தமிழ்ப்பண்டிதர் ஒருவர் பேராசிரியரின் வீட்டில் தங்கியிருந்தார். அவரைக்காணப் பத்திரிகை ஆசிரியர் ஒருவர் வந்திருந்தார். இருவருக்குமிடையே நடந்த உரையாடலைக் கட்டுரையாக்கித் தந்திருக்கிறார் அ.சீ.ரா. உரையாடல் உண்மையில் நடந்ததோ இல்லையோ. அதற்குள் நாம் போக வேண்டாம். ஆனால் அது பேராசிரியரின் கருத்தைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

*"பண்டிதர் அடிக்கடி சொல்லி வருகிறார்களே , செந்தமிழில்தான் எழுதவேண்டுமென்று. அதன் பொருள் என்ன? எதற்காகச் செந்தமிழில் எழுதவேண்டும்? தமிழில் எழுதினால் போதாதா? என்று கேட்கிறார் பத்திரிகை ஆசிரியர்.*

*"தமிழில் பிழையில்லாமல் எழுதவேண்டுமென்று அறிஞர்கள் நினைக்கிறார்கள், அதுதவறா" என்கிறார் பண்டிதர்*

*" பிழையென்றால் என்னவோ?"*

*"இலக்கண விதிகளை மீறி எழுதுவது பிழை. இலக்கண வரம்புக்கு உட்பட்டு நடக்கும் எந்த மொழியும் சக்தி வாய்ந்த கருவியாக அமைகிறது.பிழையை விலக்குவதற்கு ஒருவழிதான் உண்டு.. அது ஆன்றோர் வகுத்துள்ள இலக்கணவிதிகட்கு உட்படுவதே!"*

*"ஆன்றோர் விதிகளுக்கு முரணாகாமல் இருக்கவேண்டுமென்றால் எந்தக்காலத்து ஆன்றோர் விதிகளைக் கடைப்பிடிப்பது? தொல்காப்பியரைப் பின்பற்றவா? அல்லது சமீபகாலத்தில் இருந்த பவணந்தி முனிவருடைய சட்டத்திற்குக் கீழ்ப்படியவா? நன்னூல் குறிக்கும் விதிகளில் சில தொல்காப்பியர் காலத்துக்குப் பிறகு தோன்றிய*

*வழக்குகளை ஒப்புக்கொள்ளவில்லையா? எனவே தான் தமிழில் எழுதினால் போதும் என்கிறேன்"*

*"கிராமீயச் சொற்களும் வழுச் சொற்களும் நிறைந்து சாதாரண இலக்கண அமைப்பும் ஏற்காத வாக்கியங்களைத் தமிழ் என்று சொல்ல முடியுமா?"*

*" துளவ துளவ எனச் சொல்லும் சொல் போச்சே*
*அளவில் நெடுமூச்சும் ஆச்சே- முளரிச்*
*சுரம்கால் குளிர்ந்ததே, கண்ணும்பஞ் சாச்சே*
*இரங்காய் அரங்கா இனி?" என்ற பாட்டிலே*

*ஆச்சே போச்சே என்ற வழக்குச் சொல் வந்ததால் அல்லவா கவிஞனுடைய இதயத்தில் கவிந்த ஏக்கம் பாட்டிலும் தோன்றுகிறது. 'அக்கட இராவணற் கமைந்த ஆற்றலே" என்னும் போது அக்கட என்னும் திசைச் சொல்லைக் கம்பன் பயன்படுத்தவில்லையா?"*

*இப்படியாகத் தொடர்கிறது விவாதம். "அப்படியானால் புலவர்கள் ஆண்ட சொற்களையும் சொற்றொடர்களையும் ஒழித்துவிட வேண்டும் என்கிறீர்களா?" எனக்கேட்கிறார் பண்டிதர்*

*"பழைய புலவர்கள் ஆண்ட உவமைகளையும் சொற்றொடர்களையும்தான் கையாளவேண்டும் என்று எழுதியவர்கள் அனேகமாகத் தங்கள் கருத்து வறுமையைத் தான் புலப்படுத்தியிருக்கிறார்கள். சில சமயங்களில் தர்சனமும் கவிதா சக்தியும் கற்பனை வன்மையும் இல்லாமல் பழைய உவமைகளை ஆளும் போது நமக்கு நகைப்புத்தான் வருகிறது. நாட்டியம் தெரியுமென்று சேற்றிலே ஆடி அழுந்திய பைத்தியக்காரன் கதைதான் நினைவுக்கு வருகிறது. சேறு என்றா சொன்னேன்? ஆம் சேறு என்றதும் ஞாபகம் வந்தது(இப்படிச் சொல்வது அ.சீ.ராவின் பாணி. எனவே பத்திரிகை ஆசிரியாக இங்கே பேசுவது அ.சீ.ராவாகத்தான் இருக்கவேண்டும்)*

புகழேந்தியின் வெண்பா ஒன்றைப் பாருங்கள்.

கோதை மடவார் குலவு மெய்யிற் படிந்த
சீதக் களபச் செழுஞ் சேற்றால் - வீதிவாய்
மானக் கரிவழுக்கும் மாவந்தம்"

என்பது புகழேந்தியின் வருணனை. பழைய புலவர் கருத்துக்குப் பைத்தியக்கார அழுத்தம் எப்படிக் கொடுக்க முடியும் என்பதற்கு இதைவிட நல்ல உதாரணம் தேவை இல்லை.

"யானையே வீதியில் வழுக்கி விழுந்தால் , மனிதர்கள் எப்படி ஐயா அந்தப் பொல்லாத ஊரில் நடந்தார்கள்?" என்று தமிழாசிரியரை மாணவன் ஒருவன் கேட்டதில் குற்றமில்லை. அதற்குத் தமிழாசிரியர் சொன்ன பதில் மிகவும் ரஸமானது. பழையபாணிகளையும் , சொற்றொடர்களையும் கையாள்வதே சரியென்று எப்படியாவது சாதித்துவிட வேண்டும் என்ற பதற்றந்தான் அந்தப் பதிலில் வெளியாகிறது. அவர் சொன்னாராம்" யானை வழுக்கி விழுந்தால் என்ன மோசம் போய்விட்டது.? மாவிந்த மக்கள் நிறைந்த செல்வமுள்ளவர்கள் அல்லவா? பல்லக்கில் போவார்கள் என்று. . கதை எப்படி"

மேலும் விவாதம் தொடர்கிறது

"புதிய இலக்கியங்களைப் பாடிய ஆசிரியர் பலருக்குப் பழைய இலக்கியங்கள் வழிகாட்டவில்லையா? நீங்கள் பாராட்டும் பாரதியாரே இதற்கு உதாரணம். அவர்கள் பழைய இலக்கியங்களைப் போற்றித் துதித்திருப்பதை நீங்கள் அறியீர்களா?"

"நன்றாக அறிவேன். பழைய தமிழ் இலக்கியங்களின் சுவையைப் பருகிப் பாராட்டுவதில் நானும் சளைக்கப் போவதில்லை. ஆனால் பழைய தமிழ் இலக்கியத்தில் உள்ள பக்திதான் , இன்றும் அவற்றிற்கு ஈடான தமிழ் இலக்கியம் உண்டாக்கவேண்டும் என்ற ஆவலாக மாறுகிறது. பாரதி புதிய இலக்கியத்தைச் சிருஷ்டி செய்தது அவர் பழையை இலக்கியங்களை இம்மியும் விடாமல் அப்படியே பின்பற்றிய தாலன்று. அவர் அப்படிப் பின்பற்றவுமில்லை..பாரதியின் பெருமை

*தமிழுக்கு அவரளித்த தர்சனத்தை ஒட்டியது. பழைய மரபின் வழியே தட்டுத் தடுமாறிக் குருடனைப் போல் இடறி விழுந்ததாலன்று. தமிழன் இன்று பழகும் சொற்கள் உயிரும் வேகமும் உள்ள சொற்கள். புதிய தர்சனத்தைத் தரும் அணிகள், புதிய கருத்தையும் இலட்சியத்தையும் நோக்கித் தமிழனை அழைக்கும் இலக்கியப் பாதைகள் இவைகள் இன்று வேண்டும். இதற்குத் தமிழில் வழிசெய்து விட்டோமானால் "என்றுமுள தென்தமிழ்" என்ற பெயர் நிலைக்கும். இதைச் செய்வதுதான் தமிழில் எழுதுவது""*

**சமய சஞ்சீவி**

ஒரு பண்டிதர் ஒரு கூட்டத்தில் தனது வாதத்திறமையால் பழந்தமிழ்ச் சொற்களைத் தேடிப் பிடித்துப் பயன்படுத்த வேண்டும் என்று நிறுவிக்கொண்டிருந்த பொழுது, அவருக்குப் பதில் சொல்லத் தெரியாமல் பலரும் குழம்பிப்போயிருந்தனர்.. அந்தக்கூட்டத்திற்கு எழுத்தாளர் அகிலன் சென்றிருந்தார். அவர் அந்த நிகழ்ச்சியைப் பற்றி எழுதுகிறார்:

*"ஓர் இலக்கியக் கருத்தரங்கில் காரசாரமாக விவாதம் நடைபெற்றுக்கொண்டிருந்தது. தமிழ் இலக்கணம் கற்ற ஒருவர் , பழந்தமிழ்ச் சொற்களைத் தேடிப் பிடித்துப் பயன்படுத்த வேண்டுமென்பது பற்றி ஆணித்தரமாக எழுத்தாளர்களுக்கு அறிவுறுத்திக் கொண்டுவந்தார். . வகுப்பு அறையாக அதை நினைத்துக்கொண்டு பாடம் நடத்தினார் என்றுகூடச் சொல்லலாம். இப்படிப்பாடம் நடத்தியவருக்கு இன்றைய இலக்கியங்களைப் பற்றி ஏதுமே தெரியாதென்பது அவர் பேச்சிலிருந்தே நன்கு விளங்கியது. இலக்கியப் படைப்பாளர்கள் மறுமொழி கூறுவதற்குத் தவியாய்த் தவித்துக் கொண்டிருந்த போது பேராசிரியர் அ.சீ.ரா அவர்கள் எழுந்தார்கள்.*

*"தூய தமிழ்ச் சொற்கள் சிறிது சிறிதாக இப்பொழுது வழக்கத்துக்கு வந்துகொண்டிருக்கின்றன. நாம் வரவேற்கும் நல்லதொரு மாற்றமிது. ஆனால் இலக்கியம் படைப்பவர்களிடம் போய்ச் சொற்களைத் தேடிப்பிடித்து அடுக்கச் சொல்வது என்பது விந்தையாக இருக்கிறது. செங்கலை அடுக்கிக் கட்டடம் கட்டும் வேலையைப் போன்றதல்ல இலக்கியம்*

*படைப்பது, உயிர்த்துடிப்போடு உணர்ச்சியும் சிந்தனையும் மோதும் ஆவேசத்தில் எழுத்துக்கள் தாமாக வந்து விழுகின்றன. அங்கே எழுத்துகள் உயிர்ப்பிறவிகளாகி உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் ஆற்றல் பெற்றுவிடுகின்றன. தூய தமிழ்ச்சொற்கள் மட்டிலுமே இலக்கியமாகுமென்றால் தமிழிலுள்ள தலை சிறந்த இலக்கியம் அகராதிதான்" என்றார்கள்.*

*அவர்கள் அன்று கூறியவற்றை அப்படியே என்னால் எழுத இயலவில்லை. சொற்களின் நயமும், அழுத்தமும், கலையழகும், அவற்றிடையே இழைபோல ஓடிய உயர்தரமான பரிகாச உணர்ச்சியும், திரும்பவும் அப்படியே எழுத்தில் கொண்டு வரமுடியாதவை. ஒருவேளை அவர்கள் கூறிய சொற்களை நினைவில் வைத்துக்கொண்டு எழுதிவிட்டாலும் அவர்கள் அந்தச் சொற்களுக்கேற்றவாறு கொடுத்துப் பேசிய ஒலிநயத்தை எங்ஙனம் எழுத்தில் கொண்டுவருவது? செங்கலை அடுக்குவதுபோல் சொல்லைத்தேடி அடுக்குவதாவது? சொல் உயிர்ப்பொருளாயிற்றே எழுத்தாளர்களுக்கு? உள்ளத்தின் ஒளியால் ஈர்க்கப் பெற்றுக் கைகொடுக்கும் ஓர் உயர்ந்த சாதனத்தைச் சுட்ட செங்கலைப்போல் மலினப்படுத்தலாமா?- இந்த முறையில் அவர்கள் சிரிக்கச் சிரிக்கப் பேசிய பேச்சு, வாழைப்பழத்தில் ஊசி ஏற்றியதுபோல்* பேசிய பேச்சு , உயர்தரமான இலக்கியப் பேச்சாக அமைந்திருந்தது."



# 11. நானோர் ஆசிரியன்

எழுத்தாளர் அகிலன் அவர்கள் குறிப்பிட்டது போலப் பேராசிரியர் அ.சீ.ராவிடம் பயின்ற மாணவர்கள் தமது ஆசிரியரின் பெருமையை எடுத்துக் கூறும் போது அதைக் கேட்ட பலர் நாமும் இவரிடம் படிக்கும் வாய்ப்பைப் பெறாமல் போனோமே என்று ஏங்குவது உண்டு. ஒரு ஆசிரியர் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர் பேராசிரியர் அ.சீ,ரா. தன்னை ஒரு ஆசிரியன் என்று சொல்லிக்கொள்வதிலே பெருமை அடைந்தார் . எத்தனையோ அருமையான, பணவரவுள்ள பணிகள் அவரைத் தேடி வந்தன. ஆனால் ஆசிரியப் பணிக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டுவிட்ட அவர் ஒரு முழு நேர ஆசிரியராகவே திகழ்ந்தார். கல்லூரியில் பாடம் நடத்துவதோடன்றி வீட்டிலும் இலக்கியம் போதிக்கும் ஆசிரியனாகத் திகழ்ந்தார். தம்மை ஒரு இலக்கிய மாணவன் என்று அவர் கூறிக்கொண்டாலும் பல இலக்கியவாதிகளுக்கு ஊக்கம் கொடுத்து வழிகாட்டியவர் அவர்.

அந்தக் காலத்தில் ஆசிரியத்தொழில் அவ்வளவு வருவாய் உள்ள தொழிலாக இருந்ததில்லை. அதுமட்டுமல்ல. போட்டிகள், பொறாமைகள், பூசல்கள், மற்றவர்களின் தலையீட்டுக்கு ஆட்பட்டுப் பணியாற்ற வேண்டிய சூழ்நிலை எல்லாம் உண்டு. பேராசிரியரும் அத்தகைய இக்கட்டுகள் பலவற்றைச் சந்தித்திருக்கிறார். அவற்றால் மனம் நொந்துபோன நிகழ்ச்சிகளும் உண்டு. என்றாலும் நல்ல மாணவர்களை உருவாக்கும் பணிக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்ட அவர் அத்தடைகளையும் மீறி ஆசிரியத் தொண்டில் அரும்பணி ஆற்றினார்.

15-6-1969ல் திருச்சி வானொலியில் “நான் ஓர் ஆசிரியன்” என்ற தலைப்பில் ஒரு உரை நிகழ்த்தினார்.

அந்த உரையை இங்கே தருகிறேன். அப்பொழுதுதான் ஆசிரியர்களுக்கெல்லாம் ஆசிரியரான அவரை முழுதாகப் புரிந்து கொள்ள முடியும்.

"நான் ஓர் ஆசிரியன். ஆமாம். நானோர் ஆசிரியன். கல்விக்கோயிற் பணியாளர்களில் ஒருவன். அவ்வாறு இருப்பதில் பெருமை கொள்ளுகிறேன். பெருமையா, வாத்தியாராக...... ஏணி. தோணி, நார்த்தங்காயாக இருப்பதில் பெருமையா? கொஞ்சம் இருங்கள்.. என்னைப் பற்றிப் பேசுவதற்குக் கூச்சமாகத்தான் இருக்கிறது. இருந்தாலும் என்கதை ஆசிரிய சமுதாயத்தின் கதையாக அமையலாம் அல்லவா?

நான் ஆசிரியன் ஆனது பஞ்சத்திற்காக அன்று. விரும்பியே, தெரிந்தே , ஆசிரியன் ஆனேன். நான் இந்தப் பணியை ஏற்ற போது அதாவது நாற்பைத்தந்து ஆண்டுகட்கு முன்பு(1925), பட்டதாரிகளுக்கு வேலை கிடைப்பது அவ்வளவு கஷ்டமாக இல்லை. என்னோடு படித்தவர்கள் பலர், எளிதிலே பல்வேறு அலுவலகங்களில் இடம் பிடித்துக்கொண்டார்கள். பதவியிலிருந்து பதவிக்கு உயர்ந்தார்கள். நீங்கள் நினைப்பது சரிதான்.- முன்னேறினார்கள். நானோ ஆசிரியனாகவே இருந்து வந்தேன். இருக்கிறேன்.

பணம், அதிகாரம், , செல்வாக்கு , இவற்றையெல்லாம் அளவுகோலாக வைத்துக்கொண்டு பார்த்தால்- அப்படித்தானே உலகம் பார்க்கிறது?- வெகுவாக முன்னேறியிருக்கிறேன் என்று சொல்வதற்கில்லை. அதிகாரம் செல்வாக்கு இவற்றை விட்டுவிடுவோம். அந்தக் காலத்தில்- தற்காலத்தில் கூட- அவை ஆசிரியனுக்கு எட்டாக் கனிகள். தேவையும் இல்லை. ஊதியத்தைப் பொறுத்தவரை முதலில் ஆமை வேகத்திலும், பிறகு சிறிது விரைவாகவும் முன்னேற்றம் இருந்தது. கடந்த சில ஆண்டுகளில் ரூபாய் மாடு படுத்தது. வறுமைக் காட்டை இன்னும் ஆசிரியன் கடந்த பாடில்லை.

பிறகு ஏன் ஆசிரியனானேன்? ஆசிரியத் தொழிலில் பணம் வராது என்பது எனக்கு அப்பொழுதே தெரியும். கேட்டவர்களுக்கு அப்பொழுது சமாதானம் கூற முடியவில்லை. இப்போது, என் வாழ்க்கையைத் திரும்பிப்பார்க்கும் போது, நான் செய்தது சரி, உண்மையான முன்னேற்றத்தையே நான் தேடிக்கொண்டேன் என்பது புரிகிறது.

## சோதனைகள்

*சிறுமைகளும், அவமானங்களும் சோதனைகளும் என் ஆசிரிய வாழ்க்கையில் இல்லாமல் இல்லை. இருந்தன. ஒரு கல்லூரியில் திடீரென்று . ஒரு காரணமும் இல்லாமல் என்னை வேலையிலிருந்து நீக்கினார்கள். எங்கே போவது என்று கலங்கியிருக்கிறேன். ஒரு சமயம் பணமுடை காரணமாக, வட்டிக்கடையொன்றில் கடன் வாங்கச் சென்றேன். 'வாத்தியாரா' என்று கேட்டுவிட்டு 'நிலைமை சரியில்லீங்க!" என்று கடை முதலாளி என்னை வழியனுப்பினார். ஒரு கல்லூரியில் அதிகத் தொகைக்குக் கையெழுத்துப்போட்டு , குறைந்த தொகையைப் பெற்றுக்கொள்ளச் சொல்லி , சிக்கன வாழ்வின் உயர்வைப் பற்றியும் , தியாகத்தைப் பற்றியும், அரியதோர் உபதேசமும் செய்தார்கள். ஒரு கல்லூரியில் நடந்த விழாவில் மாநில கவர்னர் தலைமை வகிக்க வந்தார். கல்லூரி முதல்வன் என்ற முறையிலே , அவரை வரவேற்பது என் உரிமை. என்னுடைய கல்லூரி, என்னுடைய மாணவர் கூட்டம்.. ஆயினும் , மேடை மீது இருப்பதற்கு எனக்கு இடந்தர முதலில் மறுத்தார்கள். கெஞ்சிக் கூத்தாடி இடம் பெற வேண்டியிருந்தது. பல பள்ளிகளில் ஆசிரியர்கள் தமது மாணவர்கள் முன்னிலையிலேயே கேவலமாக நடத்தப் படுகிறார்கள். பணம் அல்லவா நாம் வாங்கும் கண்கண்ட தெய்வம்.! மாதக் கணக்கிலே சம்பளம் பெறாத அவதியும் எனக்குத் தெரியும். . வறுமை , முட்டுப்பாடு, வேலைபோய் விடுமோ என்ற பயம், எனக்கு இப்படியென்றால் அந்தக் காலத்து ஆரம்ப ஆசிரியர் கதி என்ன என்று நினைத்தாலே நெஞ்சு கலங்குகிறது. இப்போது நிலைமை அவ்வளவு மோசமில்லை. ஆசிரியர்களைப் பற்றிச் சிலர் நினைக்கிறார்கள். வேலையைவிட்டு, முன்போல் நினைத்த போது, ஆசிரியனை விரட்ட முடியாது. ஊதியம் சிறிது உயர்ந்திருக்கிறது. நல்லாசிரியனுக்கு விருதுகள் தருகிறார்கள். சமுதாய மதிப்பின் அடையாளமாக, ஆசிரியர் தினம் கொண்டாடுகிறார்கள். அதாவது, போகட்டும் என்று ஆசிரியர்களையே கொண்டாட விடுகிறார்கள். மற்றவர்களல்லவா கொண்டாட வேண்டும்? உண்மைதான். அந்தக் காலமும் வரும். கல்வியின் உயர்வைச்*

சமுதாயம் உணர்ந்தால் ,கல்வியின் தரத்தை ஆசிரியர்கள் உயர்த்தினால், உயர்த்துவதற்கு அவர்களுக்கு உரிமை கிடைத்தால், அந்தக் காலமும் வரும். மனிதனுடைய சாதனைகள் எல்லாவற்றிற்கும் அடிப்படையானது கல்வி. சந்திர மண்டலத்தை, மனிதன் எட்டிப்பிடித்துவிட்டான் என்று பெருமைப் படுகிறோம். ஆனால் எப்படிச் செய்தான்? அதைப் பற்றி அதிகமாக எண்ணுவதில்லை. காட்டு மிராண்டியாய், விலங்கோடு விலங்காய்த் திரிந்து வந்த ஊமை மனிதனா சந்திரனில் நேற்று நடந்தான்? எப்போதோ , மிகப் பழைய காலத்தில் , சிறு பாறைகளைக் கூராக்கி ஆயுதமாகச் செய்துகொண்டான். மரத்தோடு மரத்தைக் கடைந்து , தீ என்ற ஆற்றலைக் கண்டு பிடித்தான். அப்போது அறிவுப் பாதையிலே அடியெடுத்து வைத்த மனிதன், மெல்ல மெல்ல எத்தனையோ காலமாகப் படிப்படியாய் முன்னேறி , இன்று வான வெளியைக் கடந்து , சந்திரனில் நடக்கிறான். தனக்கு முன் , மனித் குலம் சேர்த்துவைத்த அறிவையெலாம் , பாதுகாத்து , இயன்ற அளவு வளர்த்து, ஒவ்வொரு தலைமுறையும் , அடுத்த தலைமுறைக்குத் தந்து வந்ததால் அல்லவா இந்த அற்புதம் சாத்தியமாயிற்று?

அறிவு என்று பேசும்போது, விரிந்த , மிக விரிந்த , பொருளில் அச்சொல்லை நான் பயன்படுத்துகிறேன். அறிவு மூன்று வகையானது. பூத சக்திகளின் ஓயாத இயக்கத்தின் அரங்கான இயற்கையைப் பற்றியது முதல்வகை. இது, இங்கே இந்த அண்டப் பெருவெளியில், ஆற்றலோடும், அச்சமின்றியும், வசதிகளோடும் நாம் வாழ்வதற்கு வழிசெய்கிறது. இதை விஞ்ஞானம் என்கிறோம். மற்றொரு வகை அறிவு மனிதனையும் அவனுடைய சமுதாயத்தையும் பற்றியது. மனத்தத்துவம் , வரலாறு, அரசியல், சமுதாய அமைப்பு, பொருளாதாரம் அழகுக்கலைகள், இலக்கியம் இவையும் இவைபோன்றவையும் இந்த அறிவு வகையில் அடங்கும். மனிதன் மற்றைய மனிதர்களோடு எப்படி வாழ்ந்தான், வாழ்கிறான், வாழவேண்டும், அதற்கு எந்தெந்தப் பண்பை வளர்த்துக் கொள்ள வேண்டும், எத்தகைய ஒழுக்கத்தைப் பேணவேண்டும் என்பனவற்றை விவரிக்கிறது. இந்த அறிவு. அதோடு தனி மனிதனுடைய அழகுணர்ச்சியும், தனித் தன்மையும்

எவ்வாறு மலர்ந்து, கலை யாகவோ, இலக்கியமாகவோ, மணம்வீசுகின்றன என்பதையும் இந்த அறிவு வகைக்குள்ளே காணலாம்.

இவ்விருவகை அறிவுக்கும் அப்பாற்சென்று உண்மையைக் காணத் துழவி, மனிதன் வந்த வழி, நிற்கும் இடம், செல்லும் திசை, சேரும் வீடு இவற்றைக் காணவும் காட்டவும் முயல்கிறது மூன்றாவது வகை அறிவு. இதைத்தான் தத்துவமென்றும், சமயம் என்றும், மெய்ப்பொருள் ஆய்வு என்றும் குறிப்பிடுகிறோம்.

உடல் உண்டு- ஆகவே வாழ்வதற்கு விஞ்ஞானம் தேவை. உள்ள முண்டு-ஆகவே சமுதாயக் கலைகளும், அழகுக் கலைகளும் , இலக்கியமும் தேவை.

உயிருண்டு- ஆகவே தத்துவமும் சமயமும் தேவை. இம்மூன்றுவகை அறிவும், எவ்வளவோ காலமாக வளர்ந்து வளர்ந்து பரந்த அளவுக்குப் பெருகிவிட்டன. இவ்வளவையும் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு தலைமுறையிலும் தர இயலுமா? இயலாது. பிறகு? ஒவ்வொருவனுக்கும் இயல்பாக அமைந்த சக்திகள் விருப்பங்கள் , சார்புகள் வேறு வேறானவை. ஒவ்வொரு நாட்டின் உடனடியான தேவைகளும் வேறு வேறானவை. இரண்டையும் மனத்தில் கொண்டு, பரந்து, விரிந்த அறிவு விசாலத்தின் வெவ்வேறு துறைகளை, வெவ்வேறு அளவில், இளந்தலைமுறைக்குத் தந்து, மனித குலத்தை முன்னே செல்ல, இன்னும் முன்னே செல்ல வழிகாட்டி, அவ்வழியில் நடப்பதற்குப் பழக்கும் மகத்தான முயற்சிதான் கல்வி. இடையறாது, மனிதனுடைய ஆற்றல் அனைத்தையும் பெருக்கி, அவனை வாழ்வாங்கு வாழ அழைத்துச் செல்லும் அருட்கரமே கல்வி என்பது.

இந்த அருட்கரத்தின் ஆற்றலில் நானும் ஒரு துளி. இதை எண்ணி நான் பெருமை கொள்வது தவறா? ஆனால் இந்தப் பெருமிதத்தோடு அவனுடைய நிழலாக , ஒரு தளர்ச்சியும் வந்து சேர்கிறது. எப்போதோ எழுதிய பாடல், அதைச் சொன்னாலென் நிலை விளங்கிவிடும்

*சந்திர மண்டலம் தாவிப் பிடிக்கும்*
*தந்திரம் சொல்லெனத் தளிர்க்கை நீட்டி*
*என்முகம் பார்க்கும் குழந்தை, நானோ*
*குன்றிய முடவன் , கூனன்*

*பொன்னின் மலரில் புதுப்புனல் அசைவில்*
*மின்னும் அழகொளி மாயம் காண*
*வழியெது சொல்லெனும் குழந்தை. நானோ*
*விழியிழந்து அலமரும் குருடன்*

*அன்பெனும் வாசலை அகத்திலே திறந்தால்*
*துன்பமும் தோல்வியும் தொலையுமாம், வாசலைத்*
*திறப்பதெவ்வாறெனும் குழந்தை, நானோ*
*பொய்யிலே புரளும் பூச்சி*

*சத்திய ஒளியாய், சாத்திரம் கடந்த*
*நித்திய வெளியாய் நிறைவதற் கென்னை*
*நடத்திச் செல்லெனும் குழந்தை, நானோ*
*கடவுளை மறந்த கசடன்*



*இப்படி என் பலவீனத்தை எண்ணுவதால் ஏற்படும் தளர்ச்சி, உண்மையான ஆசிரியன் ஒவ்வொருவனும் தண்ணளவில் உணர்ந்ததுதான். இதனால் அல்லவா 'ஆசிரியனாய் இருப்பதற்கு ஒருவருக்கும் தகுதி இல்லை" என்று கிரேக்க ஞானி ஒருவன் கூறினான்.*

*மாணவனை ஏதாவது ஒருதொழிலுக்குப் பழக்க வேண்டும் . ஒப்புக்கொள்கிறேன்.*

*ஆனால் இதைவிட முக்கியமானது , அவனை இன்றைய மனிதனாக, எதிர்கால மனிதனுடைய கருவாய் உருவாக்குதல் வேண்டும். எல்லோரும் இவ்வாறு நினைத்துவிட்டால், செயலாக்க முனைந்துவிட்டால்.. பிறகு குறையேது!?*

*நினைப்பார்கள், முனைவார்கள் என்றே நான் நம்புகிறேன். ஏனா!? நான் ஒரு ஆசிரியன். நம்பிக்கையே -, மனித குலத்தை உயர்த்தலாம் என்ற நம்பிக்கையே- என்வாழ்வின் அடிப்படை. நம்பிக்கை போதுமா, உனக்குத் தகுதி வேண்டாமா!? என்று கேட்கிறீர்கள். வேண்டும், அதைப் பெற முயன்றுவருகிறேன். ஒவ்வொரு ஆசிரியனும் அதைச் செய்கிறான். செய்யவும் வேண்டும். நானும், அவ்வப்போது வரும் என்னுடைய மாணவர்களும் தகுதியை நோக்கி நடக்கிறோமே, இதுவே என்னுடைய முன்னேற்றம். தெய்வம் யாவும் வணங்கிடும் தெய்வமான அறிவுத் தெய்வத்தின் கோயிலில் ஏவற் கூவற் பணி செய்கிறேனே, இத்தனை காலம் செய்தேனே, இதுவே என் பெருமை, ஆம், நான் ஓர் ஆசிரியன்."*

பேராசிரியர் மாணவர்களுக்கு ஆசானாக மட்டுமல்ல, ஒரு ஞானத் தந்தையாகவே விளங்கினார்.எத்தனையோ மாணவர்களுக்கு அவர் வீட்டிலே தங்குவதற்கு இடந்தந்தார்.

கல்லூரியில் படிக்கும் காலத்தில் மட்டுமன்று மாணவர்கள் படித்து முடித்துப் பணிபுரிந்து வாழும் பொழுதும் அவர்களுக்கு வழிகாட்டியிருக்கிறார்.

**சாவி கொடுத்தார்**

E.O சுவாமிநாதன் என்பவர் தபால்தந்தித் துறையில் பணியாற்றிக்கொண்டே பேராசிரியர் முதல்வராகப் பணிபுரிந்த வ.உ.சி கல்லூரியில் படித்துவந்தார். அவருடைய பணி மாலை நேரங்களில் இருந்ததால் காலையில் கல்லூரியில் படிக்க வசதியாக இருந்தது. சிலசமயங்களில் பகல் பணி வந்துவிடுவதுண்டு. அதனால் கல்லூரிக்குச் செல்ல முடியாது. பாடங்களைப் படித்துவிடலாம். ஆனால் பௌதிகப்

பிராக்டிகலுக்கு என்ன செய்வது? எனவே அவர் பேராசிரியரை அணுகி தனக்கு எவ்வகையாகவேனும் உதவ வேண்டும் என்று கேட்டிருக்கிறார். சுவாமிநாதன் குடும்பம் மிக ஏழ்மையான குடும்பம். எனவே அவரது நிலைமையைப் புரிந்து கொண்டு, பௌதிகப்பிரிவின் தலைமை ஆசிரியரை அழைத்து சோதனைச் சாலையின் மாற்றுச் சாவி ஒன்றைச் சுவாமிநாதனிடம் கொடுத்துவைக்கும் படியும் அவன் எப்பொழுது வேண்டு மானாலும் வந்து அங்கே சோதனைகளைச் செய்து பார்க்க அனுமதிக்கும் படியும் சொன்னார். எந்த முதல்வர் அப்படிச் சொல்லுவார்?

**வழிகாட்டும் வள்ளல்**

சுவாமிநாதன் அந்தக் கருணையை நினைத்துக் கண்பனிக்கிறார். அவர் சொன்ன இன்னொரு நிகழ்ச்சி. படித்து முடித்த பிறகு அவர் ஆசிரியராகப் பணியாற்றினார். தட்டச்சுத் தேர்வுக்கு அவர் தலைமைப் பொறுப்பாளராக நியமிக்கப் பட்டிருந்தார். தேர்வில் பங்கேற்க வேண்டிய மாணவன் ஒருவன் தனது ஹால் டிக்கட்டைக் கொண்டு வரவில்லை. அவனது பாட்டி ஹால் டிக்கட் இருக்கும் அலமாரியைப் பூட்டிக்கொண்டு எங்கோ சென்று விட்டாளாம். சுவாமிநாதன் சட்டப்படி அவனை அனுமதிக்க முடியாது. ஆனால் அவருக்கு அந்த மாணவனை அனுமதிக்க விருப்பம் . என்ன செய்வதென்று தெரியவில்லை. உடனே தொலைபேசி மூலம் பேராசிரியரிடம் செய்தியைச் சொல்லி என்ன செய்யலாம் என்று கேட்டிருக்கிறார்.

“அடேய் அந்தப் பையனுடைய கழுத்தை அறுத்துவிடாதே” என்று சொல்லி அடுத்து என்ன செய்யவேண்டும் என்பதைப் படிப்படியாகச் சொல்லியிருக்கிறார். அவர் சொன்னபடி அந்த மாணவனின் தட்டச்சுப்பள்ளிப் பொறுப்பாளரிடம் பொறுப்புப் பத்திரம் எழுதி வாங்கிக்கொண்டு அந்த மாணவனை அனுமதித்திருக்கிறார். அன்று மதியமே அந்த மாணவன் ஹால் டிக்கட்டைக் கொண்டுவந்து காட்டிவிட்டான்.

" எனக்கு வாழ்க்கையில் என்னென்ன சிக்கல் வந்தாலும் அவர் வாழ்ந்த காலம் வரை அவரைத்தான் வழிகாட்டும் படி கேட்பேன்" என்கிறார் சுவாமிநாதன். பேராசிரியர் ஓய்வு பெற்ற பிறகு எந்தக் கூட்டத்துக்குப் போனாலும் தன்னையும் கூட்டிச் செல்லவேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தாராம். அதன்படி பேராசிரியரோடு பல ஊர்களுக்குச் சென்றிருக்கிறார்..

வானொலி நிலையத்துக்கும் பலமுறை அவருடன் சென்றிருக்கிறார். தனது பேச்சைப் பதிவு செய்யும் போது தனது குரலை சற்று உயர்த்த வேண்டுமென்றால் கையைச் சற்றே உயர்த்திக்காட்டும் படியும் குறைக்கவேண்டுமென்றால் கீழே தாழ்த்திக்காட்டும் படியும் சொல்லுவாராம் பேராசிரியர். ஒருமுறை கூட அப்படிச் செய்யவேண்டிய அவசியம் எனக்கு வந்ததில்லை" என்கிறார் சுவாமிநாதன்.

மாணவர்கள் தனக்கு எவ்வளவு நெருக்கம் என்பதை ஒரு கவிதையில் சொல்கிறார் பேராசிரியர்

**மாணவன்**

எங்கோ இருந்து வந்தாய்நீ
என்னைச் சார்ந்தாய், கல்வியெனும்
துங்க நெறியில் என்னுடனே
தொடர்ந்து செல்லத் துணிந்தாய்நீ
இங்கே ஏதோ சிலகாலம்
இருக்க ஒன்றாய் இசைந்தாய்நீ,
தங்கி இங்கே உளநாளில்
தழைத்து மகனே வாழியநீ!

மாணவன் என்போன் மாண்புடையோன்
    மயங்கா உழைப்புத் திறலுடையோன்
சேணில் எங்கும் சென்றறிவுச்
    செல்வம் திரட்டும் செம்மையினோன்;
வாணாள் முழுதும் உலகுநலம்
    வளர்க்கும் வண்மை வடிவானோன்
காணும் பொருளில் உயிரில், அருட்
    கடவுள் காணும் கருத்துடையோன்

உன்றன் வாழ்வே என்வாழ்வு,
    உன்றன் நலமே எனதுநலம்
நின்றிவ் வுலகில் நீ நிறுத்தும்
    நிறைவே எனக்கு நிறைந்த புகழ்
நன்றே நினைந்து செய்திங்கே
    நாளும் பண்பில் உயர்ந்தென்றும்
என்றும் வாழி , வாழியநீ
    என்றன் மகனே வாழியநீ!



# 12.வ.உ.சி கல்லூரி

'சிந்தனை'ப்பத்திரிக்கையை மேற்கொண்டு நடத்த இயலுமா என்ற நிலைவந்த போது பேராசிரியருக்கு விவேகானந்தா கல்லூரியில் ஆங்கிலத்துறையின் தலைமைப்பொறுப்புக் கிடைத்தது. மயிலாப்பூரில் விவேகானந்தா கல்லூரியை ஒட்டி இருந்த சுல்லிவன் கார்டனில் ஒரு வீட்டில் தங்கினார். 'சிந்தனை' பத்திரிகை ஆதரவின்றி நின்றுபோனது. என்றாலும் தமிழ் பத்திரிகை உலகத்தில் தனக்கென்று ஒரு தனி முத்திரையைப் பதித்துவிட்டுத் தான் நின்றது.

**தீமைக் கரு**

விவேகானந்தா கல்லூரியில் பணி புரிந்துகொண்டிருந்த போதுதான் அவர் முதன்முதல் கல்கத்தா தமிழ்ச்சங்கத்தில் பேசுவதற்காகச் சென்றார். அங்கேயும் அவரது வீடு இலக்கிய விவாத அரங்காகவே திகழ்ந்தது. அமரர் கவிமாமணி நா.சீ வரதராசன் அங்கே பேராசிரியரைச் சந்தித்து அளவாளாவியதைப் பற்றி என்னிடம் கூறியிருக்கிறார். ஒருமுறை அவருடைய வீட்டில் பேசிக்கொண்டிருக்கும் போது ஒவ்வொருவர் மனத்திலும் தீமைக்கரு ஒன்று இருக்கிறது என்ற கருத்தை விளக்கிக் கம்பராமாயணத்தில் இருந்து பல சான்றுகளை எடுத்துக் காட்டியிருக்கிறார். அந்தத் தலைப்பில் ஒருகவிதை எழுதச் சொல்லி கவிஞரிடம் சொன்னாராம். மறுநாளே 'தீமைக் கரு 'என்ற தலைப்பில் நா.சீ.வ கவிதை எழுதினாராம். கவிமாமணி நா.சீ.வவின் சிறந்த கவிதைகளில் அதுவும் ஒன்று

**இசையமைத்தார்**

கவிமாமணி தேவநாராயணன் அவர்கள் அ.சீ. ராவை சந்தித்த நிகழ்ச்சியை என்னிடம் சொன்னார். காரைக்குடி இந்து மதாபிமானத்தார் சங்கத்தில் சந்தித்திருக்கிறார். அப்பொழுது பாரதியார் இந்து மதாபிமானச் சங்கத்தைப் பற்றி எழுதியபாடலை இசையோடு பாடும்படி திரு.தேவ நாராயணனைக் கேட்டிருக்கிறார்கள். தேவநாராயணன் இசையில் வல்லுநர் என்றாலும் யாராவது இசையமைத்துக்

.கொடுத்தால் அந்தப்பாட்டைப் பாடலாம் என்றிருக்கிறார். அருகில் இருந்த அ.சீ.ரா அவர்கள் உடனே இசையமைத்துக் கொடுக்க அதைத் தேவநாராயணன் பாடியிருக்கிறார். பேராசிரியர் அ. சீ.ரா இசையிலே நல்ல பயிற்சி உள்ளவர். மிக நன்றாக வயலின் வாசிப்பார். நடனத்தின் அடைவுகளும் அவருக்கு அத்துபடி. பலநாடகங்களிலும் நடித்திருக்கிறார். ஒரு நாடகத்தில் பைத்தியக்காரனாக நடித்துப் பெரும் பெயர் பெற்றிருக்கிறார். ஷேக்ஸ்பியரின் ஒதெல்லொ நாடகத்தில் வில்லன் இயாகோவாக நடித்த அனுப்வமும் உண்டு.

**வ.உ.சி கல்லூரி முதல்வர்**



1951 ம் ஆண்டு தூத்துக்குடியில் வ.உ சி கல்விக் கழகத்தைத் தேசீயவாதியான திரு ஏ.பி.சி வீரபாகு அவர்கள் தொடங்கினார். அந்தக்கழகத்தின் மூலம் வ.உ.சியின் பெயரால் ஒரு கல்லூரி தொடங்க முயன்றனர். அந்தக் கல்லூரிக்கு யாரை முதல்வராகப் போடலாம் என்று நினைத்த போது தனது ஆசிரியரான பேராசிரியர் அ.சீ.ராவைத் தலைமைப் பொறுப்பேற்கக் கேட்கலாம் என்றுமுடிவு செய்தார். ஏ.பி.சி .வீரபாகு அவர்கள் பேராசிரியரை அணுகித் தன் கருத்தைச் சொன்னார். ஏற்கனவே நெல்லை மாவட்டத்தில் 15 ஆண்டுகட்கு மேல் பணிபுரிந்த அனுபவம் இருந்ததாலும் நெல்லை மாவட்டத்தின் மேல் ஒருவித அபிமானம் இருந்ததாலும் பேராசிரியர் ஒத்துக்கொண்டார். அது அவரது வாழ்வின் பெரிய திருப்புமுனை. இண்டர்மீடியட் கல்லூரியாக முதலில் தொடங்கப்பட்டது. கல்லூரிக்கு நூறு ஏக்கர்வரை நிலம் இருந்தாலும் பெரும்பகுதி காடாகவும் மேடாகவும் இருந்தது. ஏ.பி.சி யுடன் சேர்ந்து பலகாலம் பாடுபட்டு அந்தக்கல்லூரி வளாகத்தைச் சோலைவனமாக மாற்றினார் பேராசிரியர். படிப்படியாக பட்டப் படிப்புக் கல்லூரியாக வளர்ந்தது. அன்பு,

அறிவு. அறம் என்ற வார்த்தைகள் கல்லூரியின் அடையாள வார்த்தைகள் ஆயின. அந்தக் கல்லூரியில் சேர்ந்த அடுத்த ஆண்டிலேயே சென்னைப் பல்கலைக் கழகத்தின் சிண்டிகேட் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். மதுரை காமராஜர் பல்கலைக் கழகம் தொடங்கப்பட்டு ஒருசில ஆண்டுகட்குப் பின் அதன் ஆட்சிக்குழு உறுப்பினர் ஆனார்.. வணிகவியல், விலங்கியல் தாவரவியல் என்று படிப்படியாக பல புதிய துறைகள் தொடங்கப் பட்டன. மாணவர்கள் தங்கிப் படிப்பதற்கு வசதியாக மாணவர் விடுதி கட்டப்பட்டது.

**தமிழ்ப்பணி**

தூத்துக்குடியில் இருந்த போது அவர் பல இலக்கிய நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார்.

ஆறுமுகசாமி அன்பு ஆசிரமம் என்ற அனாதை இல்லம் ஒன்றைப் புரவலர் ஆறுமுகசாமி நாடார் தொடங்கினார். அந்த அன்பு ஆசிரமத்தின் தலைவராகத் தான் மறையும் வரை பொறுப்பு வகித்தார் பேராசிரியர். அந்த ஆசிரம வளாகத்தில் தூத்துக்குடிக் கல்சுரல் சொஸைட்டி ஒன்று தொடங்கப் பட்டது. அதில் வாராவாரம் இலக்கியக் கூட்டங்கள் நடத்தப்பட்டன. பல கூட்டங்களில் பேராசிரியர் சொற்பொழிவாற்றியிருக்கிறார். கம்பராமாயணம், திருப்பாவை தொடர் சொற்பொழிவு நிகழ்த்தியிருக்கிறார். திருச்சி வானொலி நிலையத்தில் அவர் பேசிய திருப்பாவை , திருவெம்பாவை உரைகள் பல ஆண்டுகள் மார்கழி மாதம் ஒலிபரப்பப் பட்டது.

ஒரு பெரிய சைவத் தமிழ்ப்புலவர் திருச்சி வானொலி நிலையத்துக்கு ஒரு கடிதம் எழுதினார். “பேராசிரியர் அ.சீநிவாசராகவனைத் திருப்பாவை உரை நிகழ்த்தச் சொன்னது சரி. அவர் வைணவராயிற்றே, அவரை எப்படித் திருவெம்பாவைக்கு உரை நிகழ்த்தச்சொன்னீர்கள்? “ என்று கேட்டிருந்தார். அதற்குத் திருச்சி வானொலி நிலைய அதிகாரி எழுதிய பதிலில் “ பேராசிரியர். அ.சீ.ரா. திருவெம்பாவைப் பேச்சில் சைவ சமயச் சம்பிரதாயத்துக்கு எதிராக எதாவது சொல்லியிருக்கிறாரா.? அதில் ஏதாவது கருத்துப்பிழை இருக்கிறதா?” என்று கேட்டிருந்தார். அதற்குப் பதிலே இல்லை. அத்துடன் அந்தப் பிரச்சினை முற்றுப்பெற்றது.

# 13.வானொலியில் புதுமை

வானொலி நிகழ்ச்சிகள் பலவற்றில் பங்கு பெற்றிருக்கிறார் பேராசிரியர். அதில் பல புதுமைகளையும் செய்தார். நினைவுத்திரை என்ற அவரது நாடகந்தான் முதன்முதல் அகில இந்திய வானொலியில் ஒலிபரப்பப்பெற்ற கவிதை நாடகம். வானொலியில் நிலைய இயக்குனராக இருந்த துறைவன் கந்தசாமி அவர்கள் பேராசிரியரின் வானொலித் தொண்டு பற்றி விரிவாகச் சொல்லியிருக்கிறார்..

"1939-40ம் ஆண்டு தமிழகத்தில் ஒலிபரப்பு என்னும் விசித்திர விஞ்ஞானக்கலை அடியெடுத்து வைத்திருந்த சமயம் ."நம் ஊருக்குச் சர்க்கஸ் வந்திருக்கிறது" என்ற தோரணையிலேயே மக்கள் வானொலியில் ஈடுபாடு காட்டத் தொடங்கியிருந்தார்கள்.

"செய்தி , பேச்சு, நாடகம், இசை முதலிய நிகழ்ச்சிகள் எங்கேயோ இருந்து வருகின்றன . நம்மால் கேட்க முடிகிறது பார்த்தீர்களா?" இந்த வியப்புணர்ச்சிதான், மக்கள் மனத்தில் மேலோங்கி நின்றது. கலைஞர்கள், அறிஞர்கள் கூட இவ்வாறே மலைத்து நின்றார்கள். "கேட்கிறோமே அது என்ன? எப்படி இருக்கிறது ? என்று சிந்திக்கத் தொடங்குவதற்கு , வருஷக் கணக்கே ஆகிவிட்டது. "அச்சுக்கலை போல், வானொலியும் ஒரு புதிய புரட்சிக் கருவி , அதன் ஆற்றல் அச்சுக்கலையைவிட பலமடங்கு பெரிது. " என்பதைத் தெளிவாகப் புரிந்து கொண்டவர்கள் அந்தச் சமயத்தில் ஏழெட்டுப் பேர் இருந்திருக்கக் கூடும். அந்தச் சின்னஞ்சிறு "சிறுபான்மைக்காரர்களுள் " ஒருவர் பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்கள்".

வானொலி ஒலிபரப்பு தமிழ் நாட்டில் தொடங்கப்பட்டபோது பேராசிரியருக்கு வயது முப்பத்து நான்கு. அவர் திருநெல்வேலி மாவட்டத்தில் இலக்கியப் பேச்சுக்கெனத் தனிமுத்திரை பதித்திருந்த காலம். மேல்நாட்டு இலக்கியமும் தமிழ் இலக்கியமும் கைகோத்து அவர் மூலம் இலக்கிய

ஆர்வலர்களுக்கு ஒரு புதிய தர்சனத்தைக் காட்டிய நேரம். டி.கே .சி போன்ற மகா ரசிகர்கள் தமிழ் இலக்கிய ரசனையில் ஒரு புதிய ஒளியைப் பாய்ச்சியிருந்த காலகட்டத்தில், அந்தப்போக்குக்கு முரண்படாமலும் அதே சமயம் அகன்று விரிந்த ஒர் கண்ணோட்டத்தை உட்புகுத்தியும் இலக்கிய விமர்சனத்தில் ஒரு புதுப்பாணியை வகுத்திருந்தார் பேராசிரியர் அ.சீ.ரா. " இது என்ன புதிதாக இருக்கிறதே" என்று முதலில் ஐயத்தோடு பார்த்தவர்கள்," "ஓ, இது நன்றாக இருக்கிறதே, இந்த ஒளியில் நமது தமிழ் இன்னும் சிறப்பாகத் தெரிகிறதே" என்று சிந்திக்கத் தொடங்கினார்கள். இலக்கிய விமரிசனத்தில் ஒரு புதிய பாதை திறந்தது.

அந்தப் புதிய ஒளியை ஒலிமூலம் பரவச் செய்யக் கிடைத்த வாய்ப்பை பேராசிரியர் நன்கு பயன்படுத்திக்கொண்டார்.

அவர் என்ன செய்தார்.? இதோ துறைவன் சொல்வதைப்பார்ப்போமா?

*"வானொலியின் மகத்தான உள்ளாற்றலைப் புரிந்து கொண்ட பேராசிரியர் அ.சீ.ரா தமிழகத்தில் ஒலிபரப்புக்கலை செவ்வனே நிலைகொள்ளும் வகையில் தனது பூரண ஒத்துழைப்பைத் தந்துதவினார். இலக்கிய விளக்கம், விமர்சனம், நாடகம் ஆகிய பல்வேறு வானொலி நிகழ்ச்சித் துறைகளிலும் அவர் ஆற்றிய பணி "வானொலி'யின் வரலாற்றில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இலக்கியப் பேச்சுக்கு அடுத்தபடியாகப் பேராசிரியர் மேற்கொண்ட ஒய்வு நேரப் பணி 'வானொலி'ப் பணிதான். வருவாய், உழைப்பு இவற்றைப் பொருட்படுத்தாமல், வானொலித்துறையில் பல புதுமைகளை உருவாக்கிய பெருமை அவரைச் சாரும்.*

*அ.சீரா அவர்களின் வானொலிப்பேச்சு சொற்பொழிவாகவோ உரையாகவோ "புலமைப் படாடோபமாகவோ இராது. பேச்சாகவே இருக்கும். எத்தகைய நுண்ணிய கருத்தாக இருந்தாலும் , 'வாய்க்கு வழங்கும் ' தமிழ் என்று பாரதி கூறிய "பழகு தமிழில்'அமைத்துக் காட்டிவிடுவார் அ.சீ.ரா அவர்கள்.*

ஓர் எடுத்துக்காட்டு. நாடக அங்கதம் (Dramatic Irony) பற்றிய ஒரு பேச்சை எப்படித் தொடங்குகிறார் பாருங்கள்!

குப்பனும் சுப்பனும் பேசிக்கொண்டு போகிறார்கள்.

"உண்மைதானா சுப்பா, எங்களையெல்லாம் விட்டுவிட்டுப் போகப் போகிறாயாமே!" என்று கேட்கிறான் குப்பன்.

'ஆமாம் , நாளைக் காலையிலே புறப்படுகிறேன்"

"அடேடே, அதற்குள்ளாகவா? சரி, மறுபடியும் எப்போது இங்கே வருவாய்?"

"போனால் இங்கே வருவதேது அப்பா?" என்கிறான் சுப்பன்

குரல்கள் மங்கி மறைகின்றன. பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்த நமக்கு இதில் பிரமாதமாக ஒன்றும் இல்லை என்றே தோன்றும். ஆனால், இருங்கள். நாளைக் காலையில் சுப்பன் இறந்துவிடுவான் என்று நமக்குத் தெரிந்திருந்தால்., அதெப்படித் தெரியும் , நாமென்ன கடவுளா என்கிறீர்கள். போகட்டும். கடவுளுக்குத் தெரியுமல்லவா? இந்தப் பேச்சு அவர் காதில் விழுந்தால் , 'போனால் இங்கே வருவதேது" என்று, அந்த வார்த்தைகளுக்குச் சுப்பனும், குப்பனும், நாமும் எண்ணாத ஒரு புதிய பொருள் உதயமாகிவிடும்.

இப்படித் தொடங்கி நாடக அங்கதமென்னும் உத்தியின் தத்துவ எல்லையையே காண்பித்துவிடுகிறார் பேராசிரியர் .. .. வானொலிக் கவியரங்கங்களிலும் இலக்கியப் பேச்சரங்குகளிலும் பங்கு கொண்டு மக்களின் இலக்கியச் சுவையை உயர்த்தப் பெருந்தொண்டாற்றி யிருக்கிறார்.

**வானொலி நாடகங்கள்**

ரேடியோ நாடக உத்திகளும் இயந்திர வசதிகளும் ஆரம்ப நிலையில் இருந்த அந்தக் காலத்திலேயே , பல அரிய வானொலி நாடகங்களை ஆர்வத்தோடு உருவாக்கி அளித்தவர் அ.சீ.ரா. அவர்கள். பாசவலை, நிழல்கள் , அவன் அமரன், நிகும்பலை, நிலவு, எல்லையிலே, மண்ணும் விண்ணும், மரபு, ஊர்வசி- இவ்வாறு எத்தனையோ அற்புதமான வானொலி நாடகங்கள் ஒலிபரப்பாயிருக்கின்றன. ஒவ்வொன்றும்

நாடகத்தன்மை நிறைந்த இலக்கியப் படைப்பு ஒவ்வொன்றும் தமிழின் புத்திளமை ஆற்றலுக்குச் சான்று பகரும். ஒவ்வொன்றும் மனித இதயத்தின் ஆழங்களைக் கற்பனைத் தூரிகை கொண்டு தீட்டிய ஒலி ஓவியம்! எத்தனையோ ரேடியோ நாடக ஆசிரியர்களுக்கு வழிகாட்டியாக விளங்குகின்றன அவருடைய படைப்புகள்."

*கவிதை நாடகம்*

கவிதை நாடகம் என்னும் கலை தொடங்கப் பெறாதிருந்த காலகட்டம் அது. வானொலியோ புதிது. இந்த இரண்டையும் இணைத்துப் புதுமை செய்தார் பேராசிரியர்.

"ஒலியின் மாயத்தை வைத்து விளையாடுகின்ற கவிதையையும், உள்ளத்து உணர்ச்சிகளைக் கொண்டு விளையாடும் நாடகத்தையும் இணைத்து உருவாகும் கவிதை நாடகம் ஒரு சிறந்த இலக்கியம். இது வானொலிக்கு மிகவும் ஏற்ற வடிவம் என்பதை உறுதி செய்தவர் பேராசிரியர் அவர்கள். சாகுந்தல நாடகத்தின் இறுதிக் காட்சியை வேறொரு வகையிலே கற்பனைசெய்து சித்தரித்த 'நினைவுத்திரை' என்ற கவிதை நாடகம் 1946ல் திருச்சி நிலையத்திலிருந்து ஒலிபரப்பாயிற்று அந்த நாடகத்தின் வெற்றியால் மிகுந்த ஊக்கம் ஏற்பட்டது. இன்று , வானொலியில் கவிதை நாடகங்களுக்குத் தனிச் சிறப்பான இடம் ஏற்பட்டிருக்கிறது.

பேராசிரியர் பல வானொலி நாடகங்களைத் தாமே பயிற்சி கொடுத்துத் தயாரித்து நடத்தியிருக்கிறார். அவருடைய நாடகப் பிரதியில் தயாரிப்புக்கான குறிப்புகள் ஆங்காங்கே கொடுக்கப்பட்டிருக்கும். பாடல்களுக்கு மெட்டு அமைத்து ஸ்வரப்படுத்தியே அனுப்பிவைப்பார். தயாரிப்பில் கலந்துகொள்ளும்போது முதலில் தாமே ஒருமுறை நாடகம் முழுதையும் நடிகர்களுக்கு நடித்து விளக்குவதுண்டு. பல்வேறு பாத்திரங்களுக்கு ஏற்றவாறு வெவ்வேறான குரல் மாற்றங்களைக் கோடிட்டுக் காண்பிப்பார். . வானொலியில் பணியாற்று பவர்களும் வியந்து அநுபவிக்கும் வகையில், வானொலி சாதனத்தைத் தெளிவாகப் புரிந்து வைத்திருந்தவர் பேராசிரியர் அ.சீ.ரா அவர்கள்"

கல்லூரி ஆண்டுவிழாக்களில் பேராசிரியர் எழுதிய நாடகங்கள் நடிக்கப் பெறுவதுண்டு.

தூத்துக்குடி வ.உ.சிக் கல்லூரியில் பேராசிரியரின் மேற்பார்வையில் அவர் எழுதி இயக்கிய 'போர் முடிவில் ' என்ற நாடகத்தில் கவிஞர் ஜெயங்கொண்டாராக நடித்த அனுபவம் இந்த நூலாசிரியனுக்கு உண்டு.

தூத்துக்குடியில் புரவலர் ஆறுமுகசுவாமி நாடார் அவர்களால் நிறுவப்பட்டு நடந்துவரும் அன்னம்மாள் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் அவருடைய பல நாடகங்கள் நடிக்கப் பெற்றிருக்கின்றன. அவரது விஸ்வரூபம் என்ற நாடகம் அவரது இயக்கத்தில் அங்கே மேடையேற்றப்பட்டிருக்கிறது. அக்கல்லூரியின் முதல்வராயிருந்த பேராசிரியை வஜ்ரேஸ்வரி அவர்கள் அ.சீ.ரா தமது கல்லூரி கலைவிழாக்களுக்கு எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் உதவியிருக்கிறார் எனச் சொல்லியிருக்கிறார்.

காட்சி விளக்கம்

நாடகங்களை நடிப்பதற்கு அடிப்படையான விஷயங்களை, காட்சிகளின் தொடக்கத்தில்

தெளிவாகக் குறிப்பிட்டுவிடுவார். எடுத்துக்காட்டாக ஒன்று பார்க்கலாம்.

கம்பனுடைய அந்திம காலத்தைச் சித்தரிக்கும் நாடகம் 'அவன் அமரன்' அந்தக்காலத்தில் பெரிதும் பேசப்பட்ட நாடகம் அது. புகழ்பெற்ற நவயுகப் பிரசுராலயம் அந்நாடகத்தை நான்கணா விலையில் அச்சிட்டு வழங்கியது.

அந்த நாடகத் தொடக்கம்.

*"நாட்டரசன் கோட்டை ஆயிரம் வருஷங்களுக்கு முன்..*

*கோட்டையை அடுத்த சிறு பரம்பொன்றின் மேல் , ஐந்தாறு காட்டு மல்லிகை மரங்கள்., அவற்றின் நடுவே ஓர் அழகிய பர்ணசாலை.*

*பர்ணசாலையின் உள்ளே போவோம். எதிரே சாளரத்தின் வழியே , கோட்டையின் கோபுர விமானம் தெரிகிறது . அதன் பின்புறம் செக்கர் வான ரத்த வெள்ளம்*

*ஒரு கட்டிலில் கவிச் சக்கரவர்த்தி கம்பர் படுத்திருக்கிறார். சிந்தனைக்கும் கவிதைக்குமே வாழ்நாளை அர்ப்பணம் செய்தவர் என்பதைக் காட்டும் வெற்றிக் கோடுகள், அகன்ற நெற்றியிலே படர்ந்து, வெள்ளிய நுரை போன்ற கேசத்திலே கலக்கின்றன. கண்கள் மூடியிருக்கின்றன. எத்தனையோ கவிகள் தவழ்ந்த இதழ்கள் , இன்னும் ஏதாவது ஒரு பாடல் உதயமாகுமோ என்று எதிர்பார்ப்பவை போல், சிறிது திறந்திருக்கின்றன. முகத்திலே கம்பீரமான அமைதி தவழ்கிறது.*

*தம்பூராவை மீட்டிக்கொண்டிருக்கும் கற்றுச் சொல்லி, குறிப்பாகக் கம்பரையும் , பக்கத்திலிருக்கும் வைத்தியரையும், பெரியவர் ஒருவரையும், இன்னொரு கற்றுசொல்லியையும் பார்த்துவிட்டு , தம்புராவை நிறுத்துகிறான்.*

*கோட்டையிலிருந்து , தணிந்து ஒலிக்கும் சங்கநாதமும், மேளமும் பர்ணசாலை அமைதியைக் கலைக்கின்றன. நகரா சப்தம் கேட்கிறது.*

*கம்பர், மெல்லக் கண்விழித்து, தணிந்த, தளர்ந்த குரலில்.. .. „*

நாடகத்தின் தன்மையை இந்த முன்னுரையிலிருந்தே ஓரளவு யூகிக்க முடிகிறது. நாடகம் தொடங்குவதற்கு முன் கதாபாத்திரங்கள் எப்படி இருக்கவேண்டும் என்ற சூழ்நிலையையும் படம்பிடித்துக் காட்டிவிடுகிறது.

இந்த நாடகத்தின் இறுதியில் இந்த நாடகத்தில் வரும் பாடல்களை எந்த இராகத்தில் பாடினால் நன்று என்பதையும் பட்டியல் இட்டுக் காட்டிவிடுகிறார்.

“இந்நாடகத்தில் வரும் பாடல்களைப் பின்கண்ட முறையில் பாடலாம்:

1. ‘நந்த, நந்த” — வசந்தா-ஆதிதாளம்(அரையிடம்)
2. “நெடுவெண்” — சங்கராபரண ,விருத்தம்

| | | | |
|---|---|---|---|
| 3. | "ஓங்காநின்ற | — | " " " " |
| 4. | "வண்ணமாலை" | — | சங்கராபரணம், ரூபகம்(அரையிடம்) |
| 5. | "அசையாத சிந்தை" | — | காம்போதி.. ஆதி தாளம் |
| 6. | "காதங்கள் கோடி" | — | காம்போதி ஆதிதாளம் |
| 7. | " சரணெனக்கு" | — | தோடி ஜம்பை |
| 8. | "உலகம் யாவையும்" | — | நாட்டை , ஆதிதாளம்(அரையிடம்) |
| 9. | "மானினம்" | — | ஆனந்த பைரவி , ஜம்பை(அரையிடம்) |
| 10. | "ஆரடா சிரித்தாய், ' | — | மோகனம், ஜம்பை (அரையிடம்) பிளந்தது தூணும் |
| 11 | "அறந்தலை" | — | நாட்டை விருத்தம் |

அறிஞர் கி. சந்திரசேகரன் அவர்கள் பேராசியரின் விஸ்வரூபம் நாடகத்தைப் படித்துவிட்டு அவருக்கு எழுதிய கடிதத்தில் மிகவும் பாராட்டி எழுதியிருக்கிறார்.

*"இன்று இரண்டுமணி நேரம் நானும் என் இரு சகோதரிகளும் ராமாநுஜர் மனத்தின் அரிய சாந்தியை நீங்கள் உருவாக்கியிருப்பதை நினைந்து பலவிதமாய் அளவளாவி இலக்கிய சுகத்தை அனுபவித்தோம். உண்மையில் இராமநுஜரை எங்களுக்கு மிகமிக நெருக்கமானவராய்ச் செய்த சேவைக்குக் கைமாறுதான் தெரியவில்லை செய்வதற்கு. இலக்கியத்தை வழங்கத்தான் யாருக்கு ருசி இருக்கிறது, உங்களை விட்டால்?"*

அதே நாடகத்தைக் கலைமகளில் படித்துவிட்டு எழுத்தாளார் தி. ஜானகிராமன் அவர்கள் எழுதிய கடிதத்தில்

*"கலைமகளில் தங்கள் ' விஸ்வருபம்' கண்டேன் . சமீப காலங்களில் வந்த இலக்கியசிருஷ்டிகளில் மகோன்னதமான வடிவெடுத்திருக்கிறது. தங்கள் படைப்பாற்றல் திவ்யமான*

*விஸ்வரூபம் எய்தியுள்ளது. பாத்திரங்கள் ஒவ்வொன்றும் பட்டை தீட்டிய வைரமாகப் பரிபூரணத் தன்மையுடன் உருவாகியிருக்கின்றன. நாடகப் பண்பு , அக-புற ஓட்டங்கள், அற்புத மன உணர்ச்சி நிறைவு. அந்தக் காலத்தைக் கண்முன் கொண்டுவரும் தேர்ந்த சொல்லாட்சி,— எல்லாமாகச் சேர்ந்து பெறற்கரிய ரஸானுபூதியை ஏற்படுத்துகின்றன. தங்களுடைய நாடகங்கள் பலவற்றைப் படித்தும் ,வானொலியில் கேட்டும் இருக்கிறேன். ஆனால் இந்த நாடகத்தில் தங்கள் பரிபூரண வளர்ச்சியும் அமைதிறமும் உச்ச நிலைக்கு வந்து கலைஞர்க்கு அற்புதமான விருந்தாக அமைந்துவிட்டன.*

*நெஞ்சில் தோய்ந்து வாழ்ந்து மனத்தையும் நோக்கையும் மாற்றும் அபூர்வமான படைப்பு , சரணாகதி செய்த ஒரு கையின் பேனாவைப் பகவானே பிடித்து எழுதிவிட்டானோ என்றுகூட எனக்கு ஒரு பிரமிப்பு. அதுவும் கவிக்கு ஒரு பெருமைதானே!"* என்று எழுதியுள்ளார்.



# 14.எனது ஆசான்

1958ம் ஆண்டு ஜூலை மாதத்தில் ஓர் நாள். நெல்லை மாவட்டம் கயத்தாற்றில் உள்ள வீரபாண்டிய கட்டபொம்ம போர்டு உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியர். தி சுப்பிரமணிய பிள்ளை அவர்களிடம் சென்று என்னுடை பள்ளியிறுதிச் சான்றிதழைக் கேட்டேன். அவர் சான்றிதழை என்னிடம் கொடுக்க மறுத்துவிட்டார்.

"நீதான் பள்ளியிலேயே முதல் மாணவனா வெற்றிபெற்றிருக்கிறாய். சமீபத்தில் திருச்செந்தூர் முருக கோவிலில் வைத்துப் பேராசிரியர் சீநிவாசராகவனை சந்தித்தேன். அவரிடம் உன்னைப் பற்றிச் சொல்லியிருக்கிறே அவர் 'முருகன் சன்னிதியில் வைத்துச் சொல்லியிருக்கிறீர்க நிச்சயம் நான் பார்த்துக்கொள்கிறேன். அவனை என்னிட அனுப்புங்கள்' என்று சொன்னார். அவருக்கு ஒரு கடித தருகிறேன் நீபோய் அவரைப் பார்" என்று சொன்னார்.

பேராசிரியருக்கு ஒரு கடிதமும் பள்ளிச் சான்றிதழு என்னிடம் கொடுத்தார். அவற்றை வாங்கிக்கொண் தூத்துக்குடியில் இருக்கும் வ.உ.சி கல்லூரிக்குச் சென்றே திருநெல்வேலியைத் தவிர வேறு எந்த நகருக்கும் அதற்குமு நான் சென்றதில்லை. எந்தப் பெரிய மனிதரையு சந்தித்ததில்லை, எனவே உள்ளத்தில் நடுங்கிகொண்டே சென்றேன். என்னைச் சந்திப்பாரா, சரியான உடை கூட இல்லாமல் அரை டிராயிருடன் வந்திருக்கிறேனே, பார்ப்பாரா பேசுவாரா என எண்ணினேன். கண்ணனைக் காணச்சென் அக்ரூரர் நினைத்தாராம் " மறைகளெல்லாம் போற்றிப் புகழு கண்ணனை நான் தனியாகக் காணமுடியுமா? என்னோ பேசுவானா?" என்று. அதே நிலையில்தான் நானிருந்தேன் கல்லூரிக் கட்டிடத்தைப் பார்த்ததும் பிரமிப்பு. பயந்துகொண்டே உள்ளே சென்றேன். வாசலில் என்னை வழிமறித்த பணியாள் நீ யாரைப் பார்க்க வேண்டும்?" என்றார்.

"பிரின்ஸிபாலைப் பார்க்க வேண்டும்" என்றேன்

"ஏன் இப்படி உம்மென்றிருக்கிறாய். சரி, கொஞ்சம் இரு என்று சொல்லிக்கொண்டு நான் கொடுத்த கடிதத்தை

கொண்டு உள்ளே பேராசிரியரிடம் கொடுத்தார். அதைப் பார்த்ததும் அவர் என்னை உள்ளே அழைத்தார்.

உள்ளே சென்றேன். அங்கே அமர்ந்திருந்தவரைப் பார்த்ததும் ஏதோ பூர்வஜன்மத்தில் அவரைப் பார்த்திருப்பது போல் இருந்தது. என்னுள்ளே இருந்த பயம் மறையத் தொடங்கியது.

"ஓ, நீதான் அந்தக் கயத்தாற்றுப் பையனா? " என்று கேட்டார். பின் தொடர்ந்து

"அடுத்த மாதம் மூன்றாம் தேதி(3-8-1958) வந்து கல்லூரியில் சேர்ந்துகொள். புத்தகம் வாங்குவதற்கு மட்டும் நீ வருடத்துக்கு 25 ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கும். வரும்போது 25 ரூபாய் கொண்டுவா. மற்றப்படி நீ ஹாஸ்டலில் தங்கிப் படிக்கலாம். கல்லூரி நேரம் தவிர மற்ற நேரத்தில் ஹாஸ்டலில் சிறுசிறு வேலை செய்யவேண்டியிருக்கும். சான்றிதழை மேனேஜரிடம் கொடுத்துவிட்டுப்போ " என்றார்.

சரியென்று சொல்லிவிட்டு மேனேஜரிடம் சான்றிதழைக் கொடுத்துவிட்டு ஊருக்குச் சென்றேன். எனது உறவினர் சிலருக்கு நான் கல்லூரியில் போய் படிப்பதில் விருப்பமில்லை. எங்கள் உறவினர்களில் எவருமே கல்லூரி வாசலை மிதித்ததில்லை. எனவே பொறாமை. என் தாயாரிடம் வந்து இல்லாததும் பொல்லாததும் சொல்லிக் குழப்பிவிட்டார்கள். "உன்னால் எப்படி ஒவ்வொரு வருடமும் இருபத்தைந்து ரூபாய் கொடுக்க முடியும்! இப்பொழுது இருபத்தைந்து ரூபாய் என்று சொல்லுவார்கள். பிறகு ஐம்பது என்பார்கள்" என்று சொன்னார்கள். என் தாயார் பயந்துபோய் என்னை மீண்டும் தூத்துக்குடி சென்று சான்றிதழை வாங்கிகொண்டு வந்துவிடும்படி சொன்னார். நான் மீண்டும் தூத்துக்குடி சென்றேன். வ.உ.சி கல்லூரி மேனேஜர் திரு சேஷன் அவர்களைப் பார்த்தேன். என் தாயாருக்கு உடல்நிலை சரியில்லை என்றும் சான்றிதழைத் திருப்பிக் கொடுக்கும் படியும் கேட்டேன். அவர் என் நிலையைப் புரிந்து கொண்டார். "உன்னால் 25 ரூபாய் கொடுக்க முடியாது அவ்வளவுதானே!. பிரின்ஸிபால் இன்று சாயங்காலம் சென்னையிலிருந்து

வருகிறார். நான் அவரிடம் பேசுகிறேன்.. நீ மாலை 6 மணிக்கு வா" என்றார். மாலையில் சென்று அவரைச் சந்தித்தேன்.

" நீ 25 ரூபாய் கட்ட வேண்டாமென்று சொல்லிவிட்டார் .சந்தோஷமாக ஊருக்குப்போய் 3ந்தேதி வா" என்றார்.

3-8-1958ல் மீண்டும் வ.உ.சி கல்லூரி சென்றேன். மேனேஜர் என்னைப் பார்த்து, முதல்வரின் வீட்டுக்குச் சென்று அவரைச் சந்திக்கும்படி சொன்னார். அவருடைய வீடு கல்லூரிக்குப் பின்புறம் கல்லூரி வளாகத்திலேயே இருந்தது. அங்குச் சென்றேன். பேராசிரியர் அப்பொழுது வீட்டில் இல்லை. வெளியிலே நின்று கொண்டிருந்தேன். அவரது மனைவி வாசல் பக்கமாக வந்தவர் என்னைப்பார்த்து யாரென விசாரித்தார்.

"உன் பேரென்ன ?" என்று கேட்டார்.

"இராமசாமி" என்றேன்

"சரிதான், அப்படியானால் உன்னை அவர் இந்தாத்தில்தான் தங்கச் சொல்லுவார். இராமசாமி என்ற பேர் அவருக்கு ரொம்பப் பிடிக்கும்" என்றார்.

சிறிது நேரத்தில் பேராசிரியர் வந்தார். என்னைப் பார்த்தார்.

" நீ ஹாஸ்டலில் தங்க வேண்டாம். இங்கே முதல் அறையில் வெங்கடேசன் சீனிவாசன் என்று இரண்டுபேர் தங்கியிருக்கிறார்கள். அவர்களோடு நீயும் தங்கிக். ஹாஸ்டலில் போய்ச் சாப்பிடு. அங்கே சாப்பிடும் மாணவர்களின் பெயர்களை எழுதிக் கணக்குவைத்துக் கொள்வது உன்பொறுப்பு." என்றார்.

அவர் காட்டிய அறையில் சென்று தங்கினேன்.

**வண்ண மயில்**



பேராசிரியர் அவர்கள் வீட்டில் இரண்டு மயில்கள் வளர்த்து வந்தார்கள். அவர் வெளியிலே சென்றுவிட்டு வீட்டுக்குத் திரும்பும் போது அவற்றிற்கு எப்படித் தெரியுமோ. எங்கிருந்தாலும் குரல்

கொடுக்கும். அவரைத் தேடி வீட்டுக்குளேயே பறந்து வந்துவிடும். அவரும் அவற்றை அன்போடு தடவிக் கொடுத்துத் தானியம் ஏதாவது கொடுப்பார். அவர் கையிலிருந்தே உணவெடுக்கும் மயில். அந்த மயிலைப் பற்றிப் பேராசிரியர் ஒரு கவிதை எழுதியிருக்கிறார்.

“வாவென் றழைத்தேன், எங்கிருந்தோ
வாகைப் பசுமைக் குள்ளிருந்து
கூவிக் குலவிச் சிறை நிமிர்த்திக்
குதித்து வந்தது கோலமயில்
தேவர்க் கிறையைச் சிறைமீட்ட
திறலைத் தாங்கும் தோகையினை
பாவி என்முன் விரித்தாடிப்
பரிந்து வந்தது நீலமயில்

வையப் பச்சை, வான்நீலம்,
வடித்த பவளத் தளிரசைவில்
வெய்யில் தீட்டும் பொன்மெருகு
மேகத் தறியில் விதவிதமாய்
நெய்யும் சரிகை, நெடுவெளியில்
நெருப்பை வீசி இரவுமகள்
செய்யும் மாயம் இவையனைத்தும்
செறியும் விஞ்சைச் செல்ல மயில்

எதனால் வந்தது? அறியேன், நான்
எறியும் சோளம் ஒருபிடிக்கா?
நிதமும் என்றன் குரல்கேட்டு
நொடித்த பழக்கம் அதனாலா?
இதய மிரண்டில் துடிக்குமொரு
ஏகப் பொருளை இனங்காட்டி
இதுவும் அதுவும் எதுவுமொளி
அதுவே என்ப தகவிடவா?

கவி பாடலாம்

காலையில் சென்று கணக்கெடுப்பேன். சாப்பிட்டுவிட்டுக் கல்லூரிக்குச் செல்வேன் மதியம் சாப்பிடும் நேரம் கணக்கெடுப்பேன். இரவும் கணக்கெடுப்பேன். இப்படியாக ஓடிக்கொண்டிருந்தது காலம். பேராசிரியர் 1952ம் ஆண்டிலிருந்தே சென்னைப் பல்கலைக்கழகச் சிண்டிகேட் உறுப்பினராயிருந்ததால் அடிக்கடி சென்னைக்குச் சென்றுவிடுவார். விடுமுறை நாட்களிலும் வெளியூர் சென்றுவிட வேண்டிவரும். எனவே நான் விடுமுறைக் காலங்களிலும் வீட்டுக்குச் செல்லாமல் பேராசிரியர் வீட்டிலேயே தங்கிவிடுவேன். அந்தக்கால கட்டத்தில் அறிஞர் கி.வா.ஜகன்னாதன் மஞ்சரி இதழில் 'கவி பாடலாம் ' என்ற தொடரை எழுதிவந்தார். அதை நூலகத்தில் தொகுத்துவைத்திருந்தார்கள். அதைப் படித்து யாப்பிலக்கணம் கற்றுக்கொண்டேன். யாப்பிலக்கணத்தை மிக எளிதாகப் பாமரனுக்கும் புரியும் வகையில் கி.வா.ஜ எழுதியிருந்தார்.

இலக்கண விளக்கம்

ஒரு விடுமுறை காலத்தில் பேராசிரியரின் கவிதை ஒன்று குழந்தையைப் பற்றிய கவிதை 'தாயகம்' என்ற பத்திரிகையில் வெளிவந்தது. அதில் இரண்டாம் அடியின் இறுதிச்சீர் குற்றியலுகரத்தில் முடிந்திருந்தது. அடுத்த அடியின் முதல் சீர் உயிரெழுத்தில் தொடங்கியிருந்தது. குற்றியலுகரத்தை அடுத்து உயிரெழுத்து வந்தால், 'உயிர்வரின் உக்குறள் மெய்விட்டோடும்' என்ற சூத்திரத்தின் படி ஓசை குறையும். இதைக் கி.வா.ஜ. மிக விளக்கமாகக் கவிபாடலாம் தொடரில் எழுதியிருந்தார். எனவே அந்த இலக்கணப்படி பேராசிரியர் எழுதியிருப்பது தவறாயிற்றே என நினைத்தேன். எனவே அவரோடு சாப்பிட அமர்ந்திருந்த போது அவருடைய கவிதையைப் பற்றி விளக்கம் கேட்டேன். அவர் என்னை வியப்போடு நிமிர்ந்து பார்த்தார். "ஓ, நீ ஒரு இலக்கணப் புலவனா?" என்று கேட்டார். இல்லை இப்பொழுதுதான் கவிபாடலாம் தொடரில் படித்தேன் .அதனால்தான் கேட்டேன்.

"பேஷ், பேஷ், நல்ல சந்தேகம்தான். சாப்பிட்டு முடிந்த பிறகு உனக்கு அதைப்பற்றி விளக்குகிறேன்" என்றார்.

சாப்பிட்டு முடித்ததும் அந்தக் கவிதையை எடுத்து வரச்சொனார். அதைக் கொண்டு காட்டினேன்..,,

"இதோ இந்தக் 'கு' வுக்குப்பக்கம் கமா போட்டிருக்கிறேனா?"

"ஆமாம்" என்றேன்.

'கமா போட்டால் என்ன அர்த்தம்?"

"அங்குச் சற்றே இடைவெளி கொடுத்துப் படிக்க வேண்டும்" என்றேன்.

" அப்படி வா வழிக்கு. அந்தக்காலத்திலே ஓலைச் சுவடியில் எழுதினார்கள். கவிதைகளையும் தொடர்ந்து எழுதினார்கள். எங்கு ஒரு அடி முடிகிறது என்பதை எதுகையை வைத்துத்தான் கண்டுபிடிக்கவேண்டும். கமா, அரைப்புள்ளி போன்ற குறியீடுகள் கிடையாது. எனவே படிப்பவனுக்கு எங்கே நிறுத்திப் படிக்கவேண்டும் என்று தெரியாது. இப்பொழுது அச்சுக்கலை வந்தபிறகு அடியை மடக்கியே எழுதுகிறோம். கமா போட்டால் அங்கே நிறுத்திப் படிக்கிறோம். ஓரடி முடிந்து அடுத்த அடிக்குக் கண்போவதற்குள் சிறிது கால அவகாசம் கிடைத்துவிடுகிறது. எனவே குற்றியலுகரத்தின் பின் இயல்பாகக் கமா போட முடியுமென்றால், அடுத்த சீர் உயிரெழுத்தில் தொடங்கலாம். தவறில்லை. இடைவெளி கொடுத்துவிடுகிறோம். எனவே" உயிர்வரின் உக்குறள் ' சூத்திரத்தை அங்கே நோக்க வேண்டாம். அதைப்போலவே ஒருஅடியின் ஈற்றில் உகரம் வந்து அடுத்த அடியின் முதலில் உயிரெழுத்து வந்தாலும் பாதகமில்லை. ஆனால் இடைவெளி கொடுக்க முடியாத போது இந்தச் சூத்திரத்தை நிச்சயம் கடைப்பிடிக்க வேண்டும். வெண்பா போன்ற தளை முக்கியம் வாய்ந்த பாவினங்களிலும் கவனிக்க வேண்டும்" என்றார் .

எவ்வளவு நுட்பமாக ஆராய்ந்திருக்கிறார் என எண்ணி வியந்தேன்.

சவுக்கை மரம்

"சரி, நீ ஒரு கவிதை எழுதேன், " என்றார்

"எதைப் பற்றி எழுதுவது ?" என்று கேட்டேன்

அந்த நேரம் அவரது வீட்டின் பின்புறத்திலுள்ள சவுக்கைத்தோப்பிலிருந்து ஒ வென்று இரைச்சல் கேட்டது.

"சவுக்கை மரத்தை"ப் பற்றி எழுது. தாருதத் என்ற கவிஞர் சவுக்கை மரத்தைப் பற்றி ஒரு அழகிய கவிதை எழுதியிருக்கிறாள். நீயும் எழுது பார்க்கலாம்."என்றார்.

சவுக்கை மரத்தைப்பற்றி அறுசீர்விருத்தத்தில் ஐந்து விருத்தங்கள் எழுதி அவரிடம் காட்டினேன். பல இடங்களில் திருத்தம் செய்து கொடுத்தார். அவர் திருத்திக் கொடுத்த தாளை இன்னும் பத்திரமாக வைத்திருக்கிறேன்.

"இன்று பத்திரிகையில் எழுதும் பல புலவர்களைவிட நீ நன்றாக எழுதுகிறாய்" என்றார். எனக்கு உச்சி குளிர்ந்து போயிற்று.



செந்தமிழ்ச் செம்மல்

1960 ம் ஆண்டு அவருக்குத் தருமபுரம் ஆதீனத்தில் 'செந்தமிழ்ச் செம்மல்' என்ற பட்டம் கொடுத்தனர். அதற்குப் பாராட்டாக வ.உ.சி கல்லூரி விடுதியில் ஒரு கூட்டம் நடந்தது. அந்தக் கூட்டத்தில் அவரைப் பாராட்டி நான் ஒரு கவிதை படித்தேன்.

அதிலே ஒரு விருத்தம்

"பட்டத்தால் பலருலகில் பெருமை பெற்றார்
பாரினிலே பலவிதமாய் நன்மை உற்றார்
பட்டந்தான் சிலராலே விளக்கமுற்றுப்
பாங்குடனே தன்பெயரை நாட்டி நிற்கும்

தட்டின்றி நம்செம்மல் பெற்ற தாலே
தன்னைத்தான் விளக்கமுற்றே பட்டம் நிற்கும்
கிட்டிட்ட தன்பெரிய பேறு கண்டு
கிளர்ந்தெழுந்து மலர்ச்சிகொளும் பூரிப்பாலே"

அந்தக்கூட்டட்த்தில் ஏற்புரையாகப் பேராசிரியர் பேசும் போது, 'என்வீட்டினிலே ஒரு குட்டிக்கவிஞன் இருக்கிறான் என்பதில் எனக்குஒரு மகிழ்ச்சி "என்றார்

## ஆசானை எவ்விடத்தும்

நான் கவிதை படித்தேன் என்பதைக் கேள்விப்பட்டு அதை வாங்கிக்கொண்டுபோய் தூத்துக்குடி ரோட்டரிக்கிளப்பில் அதை அச்சடித்து எல்லோருக்கும் கொடுத்தனர்.

மறுநாள் தூத்துக்குடி நகரமக்கள் பாராட்டிய கூட்டத்தில் பேராசிரியர் அருணாசலக் கவுண்டரும், சா.கணேசன் அவர்களும் கலந்து கொண்டார்கள். அதிலும் என்னை அந்தக் கவிதையைப் படிக்கச் சொன்னார்கள். கவிதையைப் படிக்குமுன் பேராசிரியரை வாழ்த்தும் தகுதி எனக்கில்லை. நான் அவரது மாணவன். எனவே வணங்கிப் படிக்கிறேன் என்றேன்.

கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள் பேசும் போது ஆசிரியனை வாழ்த்தும் தகுதி மாணவனுக்குத்தான் உண்டு. எனச் சொல்லி 'நேசனைக் காணா விடத்து நெஞ்சாரவே புகழ்தல், ஆசானை எவ்விடத்தும் அப்படியே " என்ற வெண்பாவை எடுத்துச் சொல்லி எனை வாழ்த்தினார். என்னுடைய நாட்குறிப்பில்,

"இன்றுதான் என் வாழ்நாளில் முதன் முறையாக என் கழுத்தில் ஒருமாலை விழுந்தது" என்று எழுதிவைத்திருக்கிறேன்.

## உண்ணும் போதும் கவிதை

பேராசிரியரோடு சாப்பிடும் போதெல்லாம் ஏதாவது கவிதை வரியைச் சொல்லி அதை வைத்துக் கவிதை எழுதச் சொல்வார். ஒரு முறை சாப்பிட்டுக்கொண்டிருந்த போது சாதம் மிகவும் குழைந்து போயிருந்தது.. உடனே பேராசிரியர் "இராமசாமி,

மண்ணெனக் குழைந்து மலரென விரிந்து வயிற்றினுள் அடங்கும் இச்சாதம்"

'அடுத்த அடியை நீ சொல் பார்க்கலாம்' என்றார்.

"விண்ணெனப் புடைத்து வீங்கிடும் வயிறு, வெளியெலாம் பரவிடும் காற்று" என்றேன்

கண்ணெலாம் சுழல கருத்தெலாம் நழுவக் கட்டிலை நாடிடும் தேகம்" என்றார் பேராசிரியர்

"நீ பாட்டை முடி" என்றார்

பண்ணெலாம் பிந்த இசையெலாம் நடுங்கப் பரவிடும் நெடுந்துயிற் குறட்டை" என்றேன் நான்.

இப்பொழுது பாட்டை முழுதும் பார்க்கலாம்.

மண்ணெனக் குழைந்து மலரென விரிந்து வயிற்றினுள்
அடங்குமிச் சாதம்
விண்ணெனப் புடைத்து வீங்கிடும் வயிறு, வெளியெலாம்
பரவிடும் காற்று
கண்ணெலாம் சுழல, கருத்தெலாம் நழுவக் கட்டிலை
நாடிடும் தேகம்
பண்ணெலாம் பிந்த இசையெலாம் நடுங்கப் பரவிடும்
நெடுந்துயிற் குறட்டை!

ஒருமுறை சாப்பிடத் தொடங்குமுன் சாதம் தீய்ந்து போயிருந்த வாசனை வந்தது. அதையும் பொருட்படுத்தாமல் சமையல்காரர் சுப்பிரமணியன் அதை இலையில் போட்டு விட்டார். அன்று காலையில் எனக்கு அவர் ஆறிய காப்பியைக் கொடுத்ததால் அவர் மேல் எனக்குச் சற்றுக் கடுப்பிருந்தது. பேராசிரியர் என்னைப் பார்த்து, இராமசாமி கவிதையைத் தொடங்கலாமா? என்றார். நானும் தலையசைத்தேன்.

"சோறெனும் மலையைச் சுட்டிடும் கரண்டிச் சுப்பிர மணியனே வருக!" என்றார்

"ஆறிய காப்பி அமுதென அளிக்கும் அண்ணலே மணியனே வருக" எனச் சொல்லி என் ஆத்திரத்தைத் தீர்த்துக்கொண்டேன்

"நாறிய போதும் நம்மிலை போடும் நற்பணி நாயக வருக!" என்றார் பேராசிரியர் "தேறிடும் பட்டம் இவர்க்குநாம் கொடுப்போம் தீய்த்திடும் திலகமே" என்போம் என்றேன் நான்.

சேர்த்துப்பார்க்கிறபோது ஓர் அருமையான செய்யுளாகத் தெரிகிறதல்லவா?

சோறெனும் மலையைச் சுட்டிடும் கரண்டிச் சுப்பிர மணியனே வருக!
ஆறிய காபி அமுதென அளிக்கும் அண்ணலே மணியனே வருக .
நாறிய போதும் நம்மிலை தள்ளும் நற்பணி நாயக வருக
தேறிடும் பட்டம் இவர்க்குநாம் கொடுப்போம் 'தீய்த்திடும் திலகமே"
என்போம்!

ஒரு முறை சமையல்காரர் வரவில்லை . அவரது மனைவியின் சமையல். அன்று பருப்பு வேகவில்லை. உடனே பேராசிரியர் என்னைப் பார்த்து "இராமசாமி நான் ஒரு ஈற்றடி கொடுக்கிறேன் வெண்பாப் பாடு " என்றார்.

"வெந்துவிடும் வேகாப் பருப்பு" என்பது ஈற்றடி. எனக்குத் தர்மசங்கடமாகப் போய்விட்டது. சமையல் செய்திருப்பது மாமி. ஏதாவது.கிண்டல் அமையுமாறு பாட்டமைந்துவிட்டால் , அவ்வளவுதான், நான் தொலைந்தேன்.

"சொல்லில் நெருப்பேற்றி, சூழும் உணர்வலையில்
பல்வகையாய்ப் பாக்கள் பரிமாறி- நல்விதமாய்
எந்தை இராகவன் ஏற்றும் தமிழ்த் தீயில்
வெந்துவிடும் வேகாப் பருப்பு" என்றேன்.

மாமியைக் குற்றம் சொல்லாமல் பேராசிரியரைப் போற்றிப் பாடியதில் இருவருக்குமே மகிழ்ச்சி.

"இவனுக்கு இன்னொரு ஸ்வீட் போடு" என்றார் பேராசிரியர்.

பெருமாள் புளியோதரை

பேராசிரியர் நண்பர்களோடு தூத்துக்குடிப் புதுக்கிராமத்தில் இருக்கும் பெருமாள் கோவிலுக்கு ஒரு புரட்டாசி சனிக்கிழமையன்று சென்று கொண்டிருந்தார். அதே நாளில் தெப்பக்குளத்தெருவில் ஒரு பெரியவர் உபன்யாசம் செய்வதாகச் செய்திவந்தது. அங்கே போகலாமே என்றார் ஒரு நண்பர். அதற்கு அவருடைய இன்னொரு நண்பரான சுப்பராமய்யர் " நாங்கள் பெருமாள் கோவில் புளியோதரையை விட்டுவிட்டு அங்கே வரத் தயாராயில்லை. நாங்கள் அப்படி வரவேண்டுமென்றால் இராகவன் புளியோதரையைப் பற்றி ஒரு பாட்டுப்பாட வேண்டும் " என்றார். உடனே பேராசிரியர் ஒரு பாடல் சொன்னார்

"வானந் தன்னில் மறைந்துள்ளாய்
வைய மண்ணில் புகுந்துள்ளாய்
ஞானம் மிளிரும் முனிவருளம்
நயந்து கோயில் கொண்டுள்ளாய்
ஏனமாகி எனை அணைந்தாய்
எனினும் அறியான் என்றோநீ
போன திசையின் முனையிலெலாம்
புளியோ தரையாய் நின்றனையோ?"

இறைவனின் சௌலப்யத்தைக் காட்டும் மிக அற்புதமான பாடல் அன்று உருவாகியது.

"வானத்திலே மறைந்திருக்கிறாய், உன்னை அடைதல் கடினம் என்று மக்கள் வாளா விருந்தனர். சரி மண்ணுக்குப் போவோம் என்று கீழே இறங்கி வந்தாய். அப்படியும் தெரிந்து கொள்ளவில்லை. ஞானிகளின் உள்ளத்தில் குடிகொண்டாய். தம்மோடு வாழுவோரிடம் இருப்பதை அறியாமல் மக்கள் தத்தளித்தனர். 'சரி, போகட்டும் , அவர்கள் அடக்கி ஆளுமொரு மிருகமாகப் போவோம் எனப் பன்றியாக வந்தாய். அப்படியும் காணக்கூடவில்லை. "இவர்களெல்லாம் சாப்பாட்டுப்பிரியர்கள். தமது வயிற்றை வயிற்றுப் பெருமாள் என்று சொல்பவர்கள்.

எனவே அந்த வயிற்றுப் பெருமாளுக்குத் தேவைப் படும் உணவுப்பொருளில் ஒன்றான புளியோதரையாகப் போவோம் என, இறைவா நீ இறங்கி வந்தாயா" எனப் பொருள்படும் கருத்து நிறைந்த பாடல்.

**விட்டில்**

விட்டில் என்ற தலைப்பில் ஒருபாடலை எழுதியிருந்தார் பேராசிரியர். அந்தப் பாடலை என்னிடம் படித்துக்காண்பித்தார். அவர் படிக்கின்ற பொழுதே அந்தப் பாடல் அவரது சுயானுபவம் நிறைந்த ஒன்றாகத் தோன்றியது. பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் இடையே உள்ள பந்தத்தைப் படம்பிடிக்கும் பாடல். ஏங்குகிற ஆத்மா இறைவனிடம் வேண்டுகிற பாடல். கருடனெனப் பறக்கின்ற இறைவனின் பெருகு நிழலில் தன் சிறகையும் விரிக்க ஒரு இடம்கேட்கிறது. கிடைக்கிறதா.? என்பதையெல்லாம் உணர்ச்சிபூர்வமாக விவரிக்கும் பாடல்;

அன்று மாலை அவரைப்பார்க்க திரு ஏ.பி.சி வீரபாகுவும் வேறுசில நண்பர்களும் வந்திருந்தனர். அவர்களுக்கு அந்தப்பாடலை வாசித்துக்காட்ட விரும்பினார் பேராசிரியர்.

"இராமசாமி, இங்கே வா" என்று அழைத்தார்

உள்ளே சென்றேன்.

"விட்டிலைக் கொண்டுவா?" என்றார். நான் மேஜையில் தேடினேன்.

"மண்டு, அங்கேயில்லையடா. அந்தப் பெட்டிக்குள் பார்." என்றார். அவர் அதிகபட்சமாகத் திட்டுவது, மண்டு ,மடையா என்ற வார்த்தைகளால் தான். அவர் அப்படித் திட்டினால்தான் எங்களுக்கும் பாந்தமாக இருக்கும்.

அவர் சுட்டிக்காட்டிய பெட்டியிலிருந்து விட்டில் கவிதையைக் கொண்டு வந்தேன். அதைக் கையில் வாங்கிப் படிக்கத் தொடங்கினார்.

"ஐயா,உன் திருமுகத்தைக் காண எண்ணி
ஆலயமாய் என்மனத்தை அமைத்தங்கே என்
தெய்வமே , உன்வடிவைப் பதித்து நாளும்
சேவிக்கத் துடிதுடித்தேன், ஆனால், ஆனால்

வெய்யவினை புழுக்கூடும் கோயிலாமோ
விண்ணையங்கு சிறைவைத்துப் பூட்டப் போமோ
உய்வளிக்கும் நெடுங்கருணைக் கடலே, உன்னை
ஒட்டை இந்த உளுத்த கையில் ஒடுக்க போமோ?

அவ்வளவுதான். அவர் உள்ளத்தில் என்ன ஆற்றாமையோ தெரியவில்லை. கண்ணீர் பெருகியது. அவரால் மேற்கொண்டு படிக்க முடியவில்லை. தேம்பித் தேம்பி அழத் தொடங்கிவிட்டார். அவரைக் கட்டுப்படுத்தக்கூடவில்லை. அவர் கையிலிருந்த தாளைப் பலவந்தமாகப் பிடுங்குவதைத் தவிர வேறு வழி தோன்றவில்லை. காகிதத்தை வாங்கிய பின்னும் அழுகை சிறிது நேரம் தொடர்ந்தது. கவிஞனுடைய சுயானுபவம் கவிதையாக முகிழ்க்கிறபோது, கவிஞன் தன்னை மறந்து அந்தக் கருத்தின் தாக்கத்தில் மூழ்கிவிடுகிறபோது இது நிகழும். இப்படித்தான் நிகழும் இது உன்னதக் கவிதை வெளிப்பாடு.

அந்தப் பாடலில் கடைசியில் ஒரு விருத்தம். . எழுதிய கவிஞனின் மன அனுபவத்தோடு ஒன்றிப் படிக்கிறபோது மனத்தை உருக்கிவிடும்.

என்ன செய்வேன், வரம்புடைய சிதராய் என்னை
ஏன்படைத்தாய், இவ்வுடைந்த பானைக்குள்ளே
மன்னி உனை எண்ணி எண்ணி மறுகும் காதல்
மாயாத வேதனையை ஏனோ வைத்தாய்?
துன்னியெழும் அகண்டமெனச் சூழும் தீயைத்
தொட்டுவிழத் துடிக்கின்ற விட்டில் என்னை
என்னரசே, துடிப்பொடுங்க எரிப்ப தென்றோ
ஏழையுயிர்ச் சாம்பலை நீ தரிப்ப தென்றோ?

**" 'நான்' சாகும்நாள் எந்நாளோ?"**

1962ம் ஆண்டு கார்த்திகை மாசம் சோமவாரம். சிதம்பரநகரில் உள்ள செல்வவினாயகர் ஆலயத்தில் ஒரு கவியரங்கம். அந்த

அரங்குக்குத் தலைமை பேராசிரியர். நானும் கவிதை படித்தேன். எனது கவிதையின் தலைப்பு 'நான் சாகும்நாள் எந்நாளோ?" அந்தக்கவிதையை நான் படித்த போது முகத்தைச் சுளித்தவர்களும் உண்டு. ஆனால் பேராசிரியர் மிக நல்ல கவிதை என்று பராட்டினார்.

மறுநாள் அவருடைய வீட்டுக்கு வித்துவான் மறை. திருநாவுக்கரசு வந்தார். அவர் மறைமலை அடிகளாரின் புதல்வர். மறைமலையடிகளின் வரலாறு என்ற புத்தகத்தை எழுதியவர். அவர் பேராசிரியரிடம் எனது கவிதையைக் குற்றம் சாட்டிப் பேசினார். கோயிலில் அதுவும் ஒரு நல்ல நாளில் இராமசாமி இப்படி ஒருகவிதையைப் படிக்கலாமா?. வளர்ந்து வாழ வேண்டிய பையன் இப்படிப் பாடலாமா?" என்றார்.

உடனே பேராசிரியர் என்னை அழைத்தார்.

"நீ நேற்றுப் படித்த கவிதையைக் கொண்டு வா" என்றார். எடுத்துப்போனேன்.

"இந்தக்கவிதையை இவன் எழுதியிருப்பதைப் பார்த்து நான் சந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கிறேன். நீங்கள் எழுதலாமா என்கிறீர்களே" என்று சொல்லி விட்டு ஒவ்வொரு வரியாகப் படித்துப் பொருள் சொன்னார். அது எப்படி விஷிஷ்டாத்வைதத் தத்வத்தோடு ஒத்துப்போகிறது என விளக்கினார். "

" நன்றாய் உன்னைக் கண்டிடவே 'நான்' என்னும் ஆணவம் என்று சாகப்போகிறது?" என்று கேட்பதில் என்ன தவறு ?" என்றார். அவர் அந்தக்கவிதையின் உட்பொருளை விளக்கிய போது எனக்கே ஆச்சர்யமாக இருந்தது. என்னுடைய கவிதைக்குள் இவ்வளவு தத்துவமா என்ற வியப்புத்தான் மேலிட்டது.

**என்றன் மைந்தன் இளங்கவிஞன்**

தூத்துக்குடியிலே கல்சுரல் அக்காதமிக் கூட்டங்கள் ஆறுமுகசாமி அன்பு ஆசிரமக் கூடத்தில் வாராவாரம் நடைபெற்றுவந்தது. ஒருவாரம் அதில் ஒரு கவியரங்கம். எந்தத்

தலைப்பும் கொடுக்கப் படவில்லை. அப்பொழுது நான் சிதம்பர நகரில் ஒருவீட்டில் குடியிருந்தேன். கவியரங்கில் என்ன தலைப்பில் கவிதை எழுதலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது அந்த வீட்டில் என்னைத் தவிர வேறு யாருமில்லை. வெளியிலே பிச்சைக்காரன் ஒருவன் "அம்மா தருமம் போடு தாயே" என்று கூவிக்கொண்டிருந்தான். நான் கண்டுகொள்ளவில்லை. அங்கிருந்து நகராமல் மீண்டும் மீண்டும் குரல் கொடுத்துக்கொண்டிருந்தான். பிச்சை வாங்காமல் நகருவதில்லை என்று சங்கல்பமோ என்னவோ?. சிறிது நேரம் கழித்து வெளியே வந்து "வீட்டில் யாருமில்லை. போய்வா" என்றேன்

"இதைச் சொல்ல உனக்கு இவ்வளவு நேரமா? முதலிலேயே சொல்லியிருந்தால் வேறிடத்திற்குப் போயிருப்பேனே, சரி, சரி நீ எதையாவது போட்டு அனுப்பு" என்றான். பத்துக்காசுகள் போட்டு அனுப்பிவைத்தேன். அந்தப் பிச்சைக்காரன் என்னை வெகுவாகப் பாதித்துவிட்டான். எனவே அந்தக் கவியரங்கில் 'பிச்சைக்காரன்' என்ற தலைப்பில் தனி மொழியாகக் கவிதை எழுதலாம் என்று முடிவெடுத்து எழுதி முடித்தேன். அந்தக் கவியரங்கிற்குப் பேராசிரியர் அ.சீ.ரா தான் தலைமை. அவர் என்னைக் கவிதை பாட அழைத்த போது,

" என்றன் மைந்தன் இளங்கவிஞன் இராமசாமி பாடுகிறான்" என்று அழைத்தார், அந்தப் பாடல் அன்று வெகுவாகப் பாராட்டுப் பெற்றது. கவிதை படிக்கும் போது இடையிடையே புகுந்து கேள்விகேட்டு பேராசிரியர் அந்தக் கவிதையை மக்கள் விரும்பிக் கேட்க வைத்தார்,. வீட்டுக்கு வந்தவுடன் அந்தக் கவிதையை வாங்கி அதில் ஒருசில திருத்தங்கள் செய்தார். அவை அந்தக் கவிதைக்கு மேலும் மெருகூட்டின!

'பல்லிளித்துப் பல்லிளித்துப் பச்சைப் புளுகையெலாம்
சொல்லில் உதிரவிட்டுச் சூழ்ச்சிபல உள்ளடக்கி
வன்மை உலோபியர்பால் வாலைக் குழையவிட்டுச்
சென்று பரிதவிக்கும் தீமை எனக்கில்லை" என்று

எழுதியிருந்தேன்.

தீமை என்ற சொல்லை எடுத்துவிட்டுச் செம்மை என்ற சொல்லைப் போட்டார். அந்தச் சொல் அந்தக் கருத்துக்குப் புதிய வலுவைச் சேர்த்தது. செம்மை ஒரு அங்கதமாகிவிட்டது.

**பாட்டைப் படித்துப் பயனில்லை**

கல்லூரியில் என்னுடன் படித்த உலகநாதன் என்பவன் நன்றாக வீணை வாசிப்பான். பேராசிரியர் அ.சீ. ரா கல்லூரிக்கு ஒரு இசைக்குழுவை உருவாக்க எண்ணி கல்லூரி மாணவர்களில் இசையில் ஆர்வமுள்ளவர்களை அக்குழுவிலிணைத்தார். உலகநாதனுக்கும் அதில் இடம் கொடுத்தார். ஒருநாள் அந்த இசைக்குழுவுக்காகப் பேராசிரியர் ஒரு பாடலுக்கு இசையமைத்துக் கொடுத்தார். அவர்கள் வாத்தியங்களில் அதை இசைத்தனர். நான் அங்கே அமர்ந்து கேட்டுக்கொண்டிருந்தேன்.

" இராமசாமி, இது என்ன இராகம் தெரிகிறதா?" என்று கேட்டார்.

"எனக்குக் கர்நாடக சங்கீதம் தெரியாது" என்றேன்.

"பாட்டு எழுதிகிறாய். சங்கீதமும் தெரியவேண்டும்" என்று சொல்லி

"பாட்டை எழுதிப் படித்துப் பயனில்லை" என்றார்.

"பிறகு நான் ஈற்றடி தருகிறேன். அதை வைத்துக் கட்டளைக்கலித்துறையை முடி பார்க்கலாம்" என்றார்.

அவர் கொடுத்த ஈற்றடி

"நாட்டிய தென்னை உலகநா தன்வீணை நல்லிசையே! " என்பது.

நான் அவர் முன்பு உபதேசமாகச் சொன்ன வார்த்தை களையே முதாலாக வைத்துத் தொடங்கினேன்.

"பாட்டை எழுதிப் படித்துப் பயனில்லை, பண்ணினொலி
கூட்டிடும் நல்லிசை, கொஞ்சிடும் பல்லியம் கூடிவரும்
பாட்டொலி கேட்டுப் பரவசம் எய்திப் பயனடைய
நாட்டிய தென்னை உலகநா தன்வீணை நல்லிசையே"

என எழுதிக்காட்டினேன். ஒரு குழந்தையின் ஆர்வத்தோடு அக்கவிதையை அங்கிருந்த அனைவருக்கும் படித்துக்காட்டினார்.

**தனியாவர்த்தனம்**

தூத்துக்குடியிலே சங்கீத சபா இருக்கிறது. அதன் நிறுவனர்களில் அவரும் ஒருவர். அதன் புரவலராகவும் இருந்தார். கச்சேரிகளுக்கு அவர் செல்ல இயலாத போது புரவலர் அனுமதிச் சீட்டை என்னிடம் கொடுத்துப் போகச் சொல்லுவார். கிராமப் புறத்திலிருந்து வந்த எனக்கு வில்லுப்பாட்டு, கும்மி, கோலாட்டம் தவிர வேறு எதுவும் தெரியாது. புரவலர் அனுமதிச் சீட்டுடன் போவதால் முதல் வரிசையிலே உட்கார வைத்துவிடுவார்கள். எழுந்தும் போக முடியாது. ஆரம்ப நாட்களில் "இது என்ன 'தரனன்ன' இதில் ரசிக்க என்ன இருக்கிறது?" என்று நான் வெறுப்படைந்ததுண்டு. சங்கீதக் கச்சேரியில் தனியாவர்த்தனம் நடைபெறும் போது பலர் வெளியிலே எழுந்து சென்றுவிடுவார்கள். எனக்கு அதுதான் பிடிக்கும். "தரனன்னவை ரசிக்கிறார்கள், தாளத்தை ஒதுக்குகிறார்களே' என்று நான் வியப்பதுண்டு.

பின்பு கர்நாடக இசையை ஓரளவு ரசிக்கக் கற்றுக்கொண்டேன். ஆனால் இன்றளவும் அதன் நுணுக்கங்கள் எனக்குத் தெரியாது. ஆனால் அதை நான் தெரிந்து கொள்ளவேண்டும் என்பதற்காகத்தான் சங்கீதக் கச்சேரிகளுக்கு என்னை அனுப்பினார் என்பதை நானறிவேன்

**கணக்கு, கவிதை, கடவுள் , கற்பனை**

எனது பட்டப்படிப்பு முடிவடையும் தறுவாயில் எனது வகுப்பு மாணவர்கள் எல்லோரும் சேர்ந்து விடைபெறு விழா நடத்தினோம். அழைப்பிதழைக் கவிதையில் எழுதியிருந்தோம். அழைப்பிதழ் நல்ல கவிதையில் இருந்ததைப் பார்த்து பேராசிரியருக்கு மகிழ்ச்சி. அந்தக்கூட்டத்துக்கு அவர்தான் தலைமை. மாணவர்களின் சாதாரணக் கூட்டம் என்று அதைக் கருதாமல் அன்று மிக அருமையான இலக்கியச் சொற்பொழிவு

ஒன்றை நிகழ்த்தினார். நாங்கள் கணிதயியல் மாணவர்கள் என்பதாலே அன்று அவர் எடுத்துக்கொண்ட பொருள்" கணக்கு, கவிதை கடவுள் கற்பனை" கணக்கு, கவிதை , கடவுள் மூன்றுக்குமே அடிப்படை கற்பனை எனச் சொல்லி எப்படிக் கற்பனை அந்த மூன்றையும் வழிநடத்துகிறது என்பதை ஒருமணி நேரத்துக்குமேல் நாங்களெலாம் மெய்மறந்து கேட்கும் படி பேசினார். அன்று அந்தப் பேச்சைக் கேட்டவர்கள் அனைவரும் பேறுபெற்றவர்கள்.

**வாழ்க்கை நிலையாமை**

1964ம் ஆண்டு அவரது மனைவி மறைந்தார். அவர் மறைந்த மறுதினம் பேராசிரியர் வகுப்புக்கு வரமாட்டார் என்று எண்ணி மாணவர்கள் வகுப்புக்குச் செல்லாமல் விடுதியில் இருந்தார்கள். ஒரு பியூன் போய் எல்ல மாணவர்களையும் அழைத்துவந்து இன்றும் வகுப்பு உண்டு என்றான்.வகுப்பில் பேராசிரியர் சோகமே உருவாய் நின்றுகொண்டிருந்தார். அன்று அவர் எடுத்த பாடம் ஷேக்ஸ்பியரின் ஹாம்லட். எடுத்தபகுதியோ நாயகி ஒபிலியா இறந்துவிட அவளுக்குக் கல்லறை கட்ட இருவர் இடுகாட்டில் குழிதோண்டிக் கொண்டிருக் கின்றனர். குழி தோண்டிக்கொண்டே அவர்கள்" பிறப்போடு வந்தது இறப்பு, வாழ்வு நிலையற்றது" என்பதாகப் பேசுகின்றனர்.

பொங்கிவந்த துயரை அடக்கிக்கொண்டு இரண்டுமணி நேரம் 'வாழ்க்கை நிலையாமை ' பற்றி மாணவர்களுக்குச் சொற்பொழிவாற்றினார்.

**ஒலிநாடா வகுப்பு**

இன்னொரு நிகழ்ச்சி. நான் பி.எஸ்ஸி படிக்கும் போது எங்களுக்குப் பேராசிரியர் ஷேக்ஸ்பியரின் மேக்பத் நாடகத்தை நடத்தினார். அந்த வகுப்பில் ஏதோ ஓர் மாணவன் சற்று மூர்க்கமாக நடந்து கொண்டதால் சினமுற்ற பேராசிரியர் அடுத்த வகுப்புக்குப் பாடம் நடத்த வரவில்லை. என்றாலும் அவரது கடமையுணர்வின் காரணமாக அவரது சொற்பொழிவை ஒலிநாடாவில் பதிவு செய்து வகுப்புக்கு அனுப்பியிருந்தார்.

ஒலிநாடாமூலம்தான் அடுத்த இரண்டு வகுப்புகளும் நடந்தன. பேராசிரியர் வகுப்புக்கு வராதது எங்களுக்கு மிகவும் மன வருத்தத்தைக் கொடுத்தது. எனவே அனைவரும் ஒன்று திரண்டு அவரது வீட்டுக்குச் சென்று மன்னிப்புக்கேட்டோம். அதன் பின்னர் அவர் வகுப்புக்கு வந்து பாடம் நடத்தினார். இப்பொழுது அந்தஒலிநாடா கிடைத்தால் அவர் வகுப்பு நடத்தும் சிறப்பை கேட்கக்கூடும்.

அப்பொழுது ஸ்பூல்டைப் ஒலிநாடாதான் உண்டு. இப்பொழுது இருப்பது போலக் கேசட் எல்லாம் கிடையாது.

மேக்பத் நாடகத்தை மொழிபெயர்க்கும் படி என்னிடமும் இன்னொரு மாணவனிடமும் சொன்னார். இரண்டு பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு ஆளுக்கு ஒருபகுதியை மொழிபெயர்க்கச் சொன்னார். அவரே முதல் காட்சியின் முதல் உரையாடலை மொழிபெயர்த்துக் கொடுத்தார். மூன்று சூனியக்காரிகளின் உரையாடலாக வருவது முதல் காட்சி

முதற் சூனியக்காரி பேச்சை அவர் மொழிபெயர்த்துத் தந்தார்

"என்றுநாம் கூடுவோம் கூடுவோம்,
இழுத்தடர் மழையிலா, இடியிலா
ஏறிடும் மின்வெட்டிலா"

அதைத்தொடர்ந்து எனக்குக் கொடுக்கபட்ட பகுதியை நான் மொழிபெயர்த்தேன். அந்த மாணவன் ஏதும் செய்யவில்லை. முழுதையும் நானே செய்திருக்கலாம். ஏனோ விட்டுவிட்டேன்.

**குயில் பாட்டு கற்பனையே!**

வ.உ.சிக் கல்லூரி நடத்திய பாரதி விழாவிலே பேராசிரியர் 'குயில் பாட்டை'ப் பற்றிச் சொற்பொழிவாற்றினார். குயில் பாட்டில் ஏதோ தத்துவம் இருக்கிறது என்று ஆரம்ப காலத்தில் நம்பிய பேராசிரியர் ஆங்கில இலக்கியங்களையெல்லாம் தெளிவுறக் கற்ற பிறகு தனது எண்ணத்தை மாற்றிக்கொண்டார். அன்றையப் பேச்சில் குயில் பாட்டில் பல அறிஞர்களால் என்னென்ன தத்துவங்கள் சொல்லப்படுகின்றன

என்பதையெல்லாம் சொல்லி அவை ஒவ்வொன்றும் எவ்வாறு வலுவிழந்து போகின்றன என்பதை எடுத்துக்காட்டி குயில் பாட்டு கவிதை தரிசனம் , கற்பனையின் எல்லைநிலம் என்பதை நிறுவினார். அவர் பேச்சை முழுதும் குறிப்பெடுத்தேன். மறுநாள் கல்லூரியில் கட்டுரை வகுப்பில் முதல்நாள் பேச்சைக் கட்டுரையாக எழுதச் சொல்லி, தமிழ்ப்பேராசிரியர் சொன்னார். நான் பேராசிரியர் பேச்சு முழுதையும் கட்டுரையாக எழுதினேன். 32 பக்கங்கள். தமிழாசிரியர் என்னை அழைத்து "இராமசாமி,உன் கட்டுரை ஏட்டிலிருந்து அந்த 32 பக்கங்களை மட்டும் நான் கிழித்து எடுத்து வைத்துள்ளேன். அதை உனக்குத் தரமாட்டேன் " என்று சொல்லிவிட்டார்.

**ஆரல்வாய்மொழிக் காற்று**

பாரதியினிடம் பேராசிரியருக்கு அபரிமிதமான ஈடுபாடு. "எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி

இருந்ததும் இந்நாடே, என்ற பாடலை விளக்க அவர் பீடம் அமைத்துப் பேசுவதைக்கேட்கவேண்டும். குலசேகரன் பட்டணத்துக்கு அவர் போனபோது ஒருவீட்டில் நடந்த நிகழ்ச்சிகளை ஒவ்வொன்றாகச் சொல்லி நம்மை ஒரு கற்பனை உயரத்துக்குத் தூக்கிச் சென்று பளீரென ஒரு மின்வெட்டுப்போலப் பாரதியின் எந்தையும் தாயும் பாடலை எடுத்து வீசுவார். எத்தனை முறை முன்பு அந்தப் பாடலைப் படித்திருந்தாலும் பேராசிரியரின் அந்தப் படப்பிடிப்பை மறக்கவே முடியாது. அதைப்போலத்தான் ஆரல்வாய் மொழி என்ற ஊரிலே இரண்டு மலைகளுக்கு இடையே வீசும் காற்று எப்படித் தனி வேகம் பெறுகிறது என்பதை எடுத்துச் சொல்லி அதை இரண்டு சொற்களுக்கு இடையே வரும் வேறொரு சொல் பெறும் பாங்கையும் இரண்டு சொற்களுக்கிடையே கிடக்கும் மோனம் பெற்றுவிடுவதையும் எடுத்துக்காட்டுகளோடு விளக்குவார். அப்படி அவர் சுட்டிக்காட்டும் பாடல்களிலொன்று

பாரதியின் பாஞ்சாலி சபதத்தில் வரும்

"ஐயோஇவர்க்கடிமை என்றான் " என்ற வரியில் 'ஐயோ' என்ற சொல் ஆரல்வாய்மொழிக்காற்று என்று சொல்லுவார்.

முதல் தமிழ்ப் பேச்சு



சென்னைப் பல்கலைக் கழகத்தில் கல்கி நினைவுச் சொற்பொழிவு வழங்கப் பேராசிரியரை அழைத்தார்கள். எந்த நினைவுச் சொற்பொழிவாக இருந்தாலும் அதை ஆங்கிலத்தில் தான் வழங்க வேண்டும் என்பது விதி. பேராசிரியர் சொற்பொழிவாற்ற ஒத்துக் கொள்ளுவதற்கு முன் ஒரு நிபந்தனை விதித்தார். பேச்சின் தலைப்பு 'ஒரு நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை" என்பது.

எனவே தமிழில்தான் பேசுவேன் என்றார். இதையே வேறு யாராவது சொல்லியிருந்தால் ஆங்கிலம் தெரியாததால் தமிழில்தான் பேசுவேன் என்று சொல்லுகிறார் என்று நினைத்திருப்பார்கள். ஆனால் ஆங்கிலப்பேராசிரியர் தமிழில்தான் பேசுவேன் என்றதும் பல்கலைக்கழகம் சற்றே சிந்திக்கத் தொடங்கியது. பேராசிரியர் பல்கலைக்கழகத்தின் மிக முக்கியமான சிண்டிகேட் உறுப்பினர். எனவே பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக இருந்த திரு. இலக்குமணசாமி முதலியார் அவர்கள் இறங்கி வந்து ஒப்புதல் அளித்தார். 19ம் நூற்றாண்டுத் தமிழ்க்கவிதையின் பரிணாம வளர்ச்சியைப் பற்றிய மிக அருமையான ஆராய்ச்சி அது. அதில் பாரதியை முத்தாய்ப்பாக வைத்து அவர் தமிழ் மறுமலர்ச்சியின் மலராக மலர்ந்திருப்பதை மிக அற்புதமாகப் படம்பிடித்திருக்கிறார். "ஒரு நூற்றாண்டுத் தமிழ்க்கவிதை" என்ற தலைப்பில் அது புத்தகமாக வெளிவந்துள்ளது.

வ.உ.சிக் கல்லூரியில் 1959-முதல் 1962 ஏப்ரல் வரைபடித்தேன். கணிதத்தில் பட்டம் பெற்ற பிறகு அதே கல்லூரியில் ஆங்கிலத் துறையில் டியூட்டராகப் பணியில் சேர்ந்தேன்.

வேலைக்குச் சேர்ந்து சம்பாதிக்கத் தொடங்கிய பிறகு அவருடைய வீட்டில் தொடர்ந்து தங்கியிருப்பது சரியில்லை என நினைத்தேன். ஆனால் அவரிடம் சொன்னால் சம்பாதிக்கத் தொடங்கியதும் வெளியிலே போக நினைக்கிறானே எனத் தவறாகப் புரிந்து கொள்வாரோ என்ற பயம். இராமசாமி இப்பொழுது சம்பாதிக்கிறான். அவன் வெளியே போய்த் தங்கினால் இந்த இடத்தில் வேறொரு ஏழைமாணவனை இருக்கச்சொல்லலாமே என அவர் நினைத்திருக்கிறார். ஆனால் என்னிடம் நேரிடையாகச் சொன்னால் நான் வருத்தப் படுவேனோ என நினைத்துப் பேராசிரியர் வைத்தமாநிதியிடம் என்னிடம் எடுத்துச்சொல்லும் படி சொன்னார். பேராசிரியர் வைத்தமாநிதி என்னிடம் சொன்னதும் அன்றைக்கே தூத்துக்குடி சிதம்பர நகரில் ஓர் அறையை வாடகைக்கு எடுத்தேன். பேராசிரியர் அ.சீ.ரா விடம் சென்று தயங்கித்தயங்கி விஷயத்தைச் சொன்னேன்.

"நீ இங்கே இருந்தால் எனக்கும் வசதியாகத்தன் இருக்கும். .ஆனால் வேறு யாரேனும் தப்பாகப் பேசக்கூடாது பார். அதனால்தான் வைத்தமாநிதியிடம் சொன்னேன். நீ எப்பொழுதும் போல் இங்கு வரலாம், போகலாம்" என்றார்.

சிதம்பர நகர் சென்ற பிறகு கல்லூரி முடிந்ததும் தினமும் அங்கு வந்துவிடுவேன். அவரது கடிதப் போக்குவரத்துக்களைக் கவனித்துக்கொண்டேன். அவர் எழுதிய புதிய கவிதைகளை எனக்கு வாசித்துக்காட்டுவார். அவர் கவியரசர் கண்ட கவிதை தொகுப்புக்ககாகத் தாகுரின் கவிதைகளை மொழிபெயர்த்து வந்த காலமது. அவற்றை நகல் எடுக்கும் பணியை நான் செய்து வந்தேன். மொழிபெயர்ப்பு எப்படிச் செய்யவேண்டும் என்பதற்கு அது ஒரு பாடமாக அமைந்தது.

ஓரிரு மாதங்கள் கழித்து என்னிடம் "ஆச்சார்யா பில்டிங்கை ஹாஸ்டலுக்காக வாடகைக்கு எடுத்திருக்கிறோம். அந்த விடுதிக்கு ரெசிடென்ட் டியூட்டராக உன்னை நியமித்திருக்கிறேன். நீ இனிமேல் வெளியே தங்க வேண்டாம். அங்கே உனக்காக ஒரு அறை ஒதுக்கப்பட்டிருக்கிறது. அங்கே சென்று கவனித்துக்கொள். அங்கே இருந்தாலும் மாலை நேரத்தில் நீ இங்கே வந்துவிட வேண்டும்" என்றார்.

என்னைக் கேட்டால் என்ன செய்வேன்?

பேராசிரியர் சென்னைக்குப் பல்கலைக்கழகச் சிண்டிகேட் கூட்டத்திற்காகச் சென்றிருந்த சமயம் வ.உ. சி கல்லூரியில் ஒரு நிகழ்ச்சி நடந்தது.. கல்லூரியில் பேராசிரியராக இருந்த ஒருவரின் மனைவி சற்றே கால் ஊனமானவர். அவருடைய மனைவியைப் பார்த்து சில மாணவர்கள் "நடையா இது நடையா, ஒரு நாடகமன்றோ நடக்குது" என்று பாடிக் கேலி செய்தார்கள். அந்த அம்மையார் தனது கணவரிடம் சொல்ல அவர் மாணவர் விடுதி வார்டனிடம் சொன்னார். அவர் அந்த மாணவர்களுள் ஒருவனை அடித்துவிட்டார். மறுநாள் கல்லூரியில் பெரிய கலவரமாகிவிட்டது. மாணவர்கள் கல்லூரிக்கு வராமல் வெளியில் நின்று கூச்சல் போட்டுக்கொண்டிருந்தார்கள். எனக்கு மாணவர்களிடம் சற்று நல்ல பேர் இருந்ததால் நான் அவர்களிடம் சென்று என்ன காரணம் என்று வினவினேன். அவர்களிடம் கல்லூரி முதல்வர் வரும் வரை பொறுத்திருக்கும் படி வேண்டினேன். ஒரு சிலர் என் பேச்சைக் கேட்டுக்கலைந்து சென்றனர். ஆனால் கலாட்டாச் செய்வதற்கென்றே ஒரு மாணவர் கும்பல் இருக்குமே! அவர்களுக்கு நான் அப்படிச் சொன்னதும் சில மாணவர்கள் கலைந்து போனதும் பிடிக்கவில்லை. இந்தக் கலாட்டாவில் சில பொதுமக்களும் கலந்துகொண்டிருந்தனர். எனவே என்மேல் ஏதாவது பழியைப் போடவேண்டுமென்று தீர்மானித்தனர்

எனவே தூத்துக்குடியில் பிரபலமாக இருக்கும் ஒரு மதத்தினரை நான் குறைவாகப் பேசியதாகச் சொல்லிக் கதைகட்டி விட்டனர். மறுநாள் கல்லூரியில் ". We want Ramasami" என்று வெளியே ஆர்ப்பாட்டம்.. நான் கல்லூரியில் முதல் மாடியில் இருந்தேன். எதற்காக என்பெயரைச் சொல்லிக் கூவுகிறார்கள் என்பது எனக்குப் புரியவில்லை. எனது நண்பர் பேராசிரியர் சங்கரன் அவர்கள் என்னிடம் வந்து "நீங்கள் ஏதோ தவறாக ஒரு மதத்தினரைப் பற்றிப் பேசினீர்களா?" என்று கேட்டார்.

"நான் அப்படிப் பேசுவேனா? உங்களுக்குத்தான் என்னைப் பற்றித் தெரியுமே!" என்றேன்

"தெரியும். ஆனால் யாரோ தூண்டிவிட்ட புரளி. மாணவர்கள் உங்கள்மேல் கோபமாக இருக்கிறார்கள்." என்றார்.

'என்னவென்று நானே போய்க் கேட்டுவிடுகிறேனே!" என்றேன். "வேண்டுமென்றே அவர்கள் இப்படிச் செய்கிறார்கள். சில பொதுமக்களும் கூட்டத்தில் இருக்கிறார்கள். எனவே இப்பொழுது நீங்கள் கீழே போகவேண்டாம். நேற்று நீங்கள் கீழே போய் சிலரைத் திருப்பி அனுப்பியதுதான் அவர்களது கோபத்துக்குக் காரணமென நினைக்கிறேன்" என்றார்.

சிறிது நேரம் கத்தி விட்டுக் கூட்டம் கலைந்தது. என்மேல் எந்தக் குற்றமுமில்லை என்பதால் நான் இதைப்பற்றிச் சிறிதும் பயப்படவில்லை. நான் தங்கியிருந்த இடத்துக்குத் தனியாக நடந்துசென்றேன். சில மாணவர்கள் என்னை வழிமறித்துத் தாக்க வந்தனர்.

"நீங்கள் என்னைத் தாக்குவதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனால் பின்னால் உண்மை தெரியவரும் போது நீங்கள் வருத்தப்படுவீர்கள்" என்றேன். இதற்குள் மாணவர் போல் வந்த பொதுமக்களில் ஒருவர் கையை ஓங்கிகொண்டுவந்தார். இதைப் பார்த்துக்கொண்டிருந்த மாணவன் ஒருவன்(அவன் கல்லூரி யூனியன் செயலாளர். எந்த மதத்தை நான் குறை சொன்னதாகச் சொன்னார்களோ அந்த மதத்தைச் சேர்ந்தவன்) வேகமாக ஓடிவந்தான். என்னைத் தாக்க வந்தவர் கையைப் பிடித்துத் தள்ளினான்.

" இவரைப் பற்றி எனக்குத் தெரியும். இவர்மேல் எந்தத் தவறும் இல்லை. யாரோ புரளி கிளப்பிவிட்டிருக்கிறார்கள். இவர்மேல் யாராவது கையை வைத்தால் நான் பொல்லாதவனாகிவிடுவேன்" என்றான். கூட்டம் கலைந்து சென்றது.

இதற்குள் தூத்துக்குடி முழுதும் "கல்லூரியாசிரியர் இராமசாமி பொதுமக்கள்முன் மன்னிப்புக் கேட்கவேண்டும்" என்று பிட் நோட்டீஸ் அடித்து வினியோகம் செய்தனர்.

பேராசிரியர் சென்னையிலிருந்து வந்ததும் என்ன சொல்லுவாரோ என்ற பயம்தான் எனக்கு. அவர் ஏதாவது கோபமாகச் சொன்னால் என்னால் தாங்கிக்கொள்ள முடியாது.

மறுநாள் பேராசிரியர் வந்தார். என்னிடம் எதுவுமே கேட்கவில்லை. மாணவர்களின் கோரிக்கைப் பட்டியலில் முதல் இடத்தில் இருந்த என்பெயர் நீக்கப்பட்டுவிட்டது என்பதை அறிந்தேன். சற்று நிம்மதியாக இருந்தது.

பேராசிரியர் ஏதும் கேட்காமலிருந்ததும் மனத்தில் சங்கடத்தை விளைவித்தது. என்ன சொல்லப்போகிறாரோ என்று ஒவ்வொரு நிமிடமும் பயந்து கொண்டிருந்தேன். அவருடைய அறிவுரையைக் கேட்டு மாணவர்கள் ஒழுங்காக வகுப்புகளுக்குத் திரும்பினார்கள்.

மறுநாள் மாலை நான் குற்றம் சொன்னதாகச்சொல்லப்பட்ட மதத்தைச் சேர்ந்த பெரியவர்கள் பலர் பேராசிரியரை அவரது இல்லத்தில் சந்தித்தனர்.

"எங்கள் மதத்தைச் சேர்ந்த மக்கள் கொதிப்படைந் திருக்கிறார்கள். எனவே ஆசிரியர் இராமசாமி பொதுமன்னிப்புக் கேட்கவேண்டும்" என்று சொன்னார்கள்.

"சற்றுப் பொறுங்கள், அந்த ஆசிரியரைக் கூப்பிடுகிறேன்" என்று சொல்லி என்னை அழைத்தார் பேராசிரியர். நான் அங்குச் சென்று வந்திருந்தவர்களுக்கு வணக்கம் சொன்னேன். அவர்களுள் ஒருவருக்கு என்னை நன்றாகத் தெரியும்.

"நான் தூத்துக்குடிக்கு வந்து பதினைந்து ஆண்டுகள் ஆகின்றன. என்றாவது உங்கள் மதத்தைச் சேர்ந்தவர்களைப் புண்படுத்திப் பேசியிருக்கிறேனா?" என்று கேட்டார் பேராசிரியர்

"ஐயையோ , உங்களை அப்படிச் சொன்னால் எங்கள் வாய் அழுகிப்போய்விடும்" என்றார் ஒரு பெரியவர்.

" நான் சொல்லியிருக்க மாட்டேன் என்று நினைத்தால் இவனும் சொல்லியிருக்க மாட்டான். இவனை நான் வளர்த்து வருகிறேன்" என்றார். என் கண்களில் கண்ணீர் முட்டியது.

அப்படியொரு பெரியவரைக் குருவாய் அடைய என்ன தவம் செய்திருக்கிறேனென நினைத்தேன்.

"இந்தப் பையனை எனக்கு நன்றாகத் தெரியுமே. உங்களுக்குச் செந்தமிழ்ச்செம்மல் பட்டம் கொடுத்த போது ரோட்டரிக்கிளப்பில் பேசியிருக்கிறாரே. இவர் நிச்சயம் அந்தத் தவற்றைச் செய்திருக்க மாட்டார். நாங்கள் எங்கள் மக்களைச் சமாதானம் செய்கிறோம்" என்று சொல்லிச் சென்றுவிட்டார்கள். பேராசிரியர் என்னைக் குற்றம் சாட்டியிருந்தால் இவ்வளவு ஆண்டுகள் கழித்தும் அதை நினைத்துப்பார்த்தால் நெஞ்சு பதைக்கிறது. எவ்வளவு அழகாக நிலைமையைச் சமாளித்தார் என்பதை எண்ணி இன்றும் வியக்கிறேன். அவருடைய நிர்வாகத் திறமைக்கு இது ஒரு சான்று. என்மேல் அவர் கொண்டிருந்த நம்பிக்கையை எண்ணி இன்றும் நெகிழ்ந்துபோகிறேன்.

**உயர்த்தித் திருத்தினார்**

அவருடைய நிர்வாகத் திறமைக்கு இன்னொரு நிகழ்ச்சியையும் சான்றாகச் சொல்லவேண்டும்.

ஹாஸ்டலில் தலைமைச் சமையல்காரருக்கு அடுத்த நிலைமையில் இருந்த இன்னொரு சமையல்காரர் சமையலுக்கு வைத்திருந்த பொருட்கள் சிலவற்றைத் திருடிவிட்டார். தலைமைச் சமையல்காரர் வேலையை விட்டுவிட்டதால் இவருக்குத் திருடுவது எளிதாயிற்று.

பேராசிரியர்தான் ஹாஸ்டலுக்கு வார்டன். உதவி வார்டன் அந்தச் செய்தியைப் பேராசிரியரிடம் சொல்லி "அந்தச் சமையல் காரரை வேலையை விட்டு நீக்க வேண்டும்" என்று சொன்னார்.

பேராசிரியர் சற்றுச் சிந்தித்துவிட்டு "தேவையில்லை. அவருக்குத் தலைமைச் சமையல்காரராகப் பதவி உயர்வு கொடுங்கள்" என்றார். அந்தச் சமையல்காரருக்குப் பதவி உயர்வு கொடுக்கப்பட்டது. அதன் பிறகு அந்த விடுதியே கதியாக இருந்தார் அவர். அதுமட்டுமல்ல உணவின் சுவையும் அதிகரித்தது. எந்தப்பொருளும் திருடு போகாமல் அவர் பார்த்துக்கொண்டார். சிக்கனமாகப் பொருட்களைச் செலவழித்தார். அதனால் உணவுக்கட்டணமும் குறைந்தது.

இரவோடு இரவாக..

1964ம் ஆண்டு. ஹிந்தி எதிர்ப்புப் போராட்டம் தீவிரமாக இருந்தசமயம். மாணவர்கள் கல்லூரிக்கு வெளியே குழுமிக் கூட்டமாகக் கோஷம் எழுப்பிக்கொண்டிருந்தனர்.

அவர்களை நேரடியாகச் சந்தித்து அவர்களிடம் பேசினார் பேராசிரியர். தில்லியில் பண்டிட் ஜவஹார்லால் நேரு தலைமையில் நடந்த கூட்டத்தில் அவரிடமே தான் இந்தி வெறியர்களைக் கண்டித்துக் கூறிய வார்த்தைகளைக் கூறி, தான் ஆங்கில ஆசிரியனாக இருந்தாலும் தமிழ்தான் தனக்கு இதயம் என்றும் சொன்னார். தமிழ்ப்பற்றில் தான் எவருக்கும் தாழ்ந்தவனல்ல என்றும் அதைக்காக்க வன்முறை சரியல்ல." என்பதையும் விளக்கினார். மாணவர்கள் அமைதியாகக் கலைந்து சென்றனர். மறுநாள் கரூரில் துப்பாக்கிச் சூடு நடந்து பலர் உயிரிழந்தார்கள் என்ற செய்தி மாலையில் கிடைத்தது. நான் பொறுப்பாளனாக இருந்த மாணவர் விடுதிக்கு இரவு எட்டுமணியளவில் சென்றபோது ஒரே இருட்டாக இருந்தது. மாணவர்கள் அங்கே நடு மைதானத்தில் அமைதியாக வட்டவடிவில் அமர்ந்து கொண்டிருந்தார்கள். நான் அங்குச் சென்று எல்லோரும் அறைகளுக்குச் செல்லுங்கள். எலக்ட்ரீஷியனை வரச்சொல்லி மின்பழுதைப் பார்க்கச் சொல்கிறேன் " என்றேன்.

" மின்சாரத்தில் பழுதில்லை. நாங்கள் வேண்டுமென்றே பழுதாக்கியிருக்கிறோம்" என்றான் ஒரு மாணவன்.

"ஏன்" என்றேன்.

" இன்று கரூரில் துப்பாக்கிச் சூடு நடந்திருக்கிறது சில மாணவர்கள் இறந்திருக்கிறார்கள். நாங்கள் துக்கம் அனுஷ்டிக்கிறோம் " என்றார்கள். நானும் அவர்கள் மத்தியில் அமர்ந்துகொண்டேன். மறுநாள் சிதம்பர நகரில் இருந்த தபால் நிலையத்தை விடுதி மாணவர்களோடு இணைந்து வெளி மாணவர்கள் தகர்க்கப் போவதாகத் தெரியவந்தது. என் விடுதியில் இருந்த மாணவர்கள் சற்று அமைதியானவர்கள். பெரிய இடத்துப்பிள்ளைகள். அவர்களே இப்படிக் கொதித்துப்

போயிருக்கிறார்கள் என்றால் மறுநாள் பெரிய விபரீதம் நிகழப்போகிறது. மாணவர்கள் பெயரில் சில போக்கிரிகளும் கலாட்டாச் செய்யலாம் என எண்ணினேன். நேரே முதல்வரின் இல்லத்துக்குச் சென்றேன். அங்கே உதவி வார்டனும் இருந்தார். அவர்களிடம் விஷயத்தைச் சொன்னேன்.

"போலீசுக்குச் சொல்லலாமா? என்றார் உதவி வார்டன்.

"வேண்டாம். என் கல்லூரிக்குள் போலீஸ் நுழையக் கூடாது. " என்று சொல்லிப் பேராசிரியர் சற்றுச் சிந்தித்தார்.

உடனே யார் யாரையோ தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டார். கல்லூரி மேனேஜரை வரச் சொன்னார். பிறகு எங்களிடம் சொன்னார்.

" இன்று இரவு பன்னிரண்டு மணிக்கு ஏழெட்டுப் பேருந்துகள் கல்லூரி விடுதிக்கு வரும். விடுதி மாணவர்களை அவர்களின் ஊருக்கு அனுப்பிவிடுங்கள். எவரிடமாவது காசில்லையென்றால் மேனேஜரிடம் பணம் வாங்கிக் கொடுங்கள். உடனே சென்று கலவரப்படுத்தாமல் மாணவர்களிடம் எடுத்துச் சொல்லுங்கள்" என்றார். மாணவர்கள் தனித்தனியாக வெவ்வேறு விடுதிகளில் இருந்ததாலும், முதல்வர் நல்லதைத்தான் செய்வார் என்ற நம்பிக்கையாலும் அவர்களைச் சம்மதிக்க வைப்பது கடினமாக இல்லை. அவர்களும் தமக்கு ஏதாவது ஆபத்து நேருமோ என்று பயந்ததும் ஒரு காரணம். பன்னிரண்டு மணிக்கு விடுதி இழுத்து மூடப்பட்டது. மறுநாள் காலை கடப்பாரை கம்பு சகிதம் வெளி மாணவர்கள் விடுதிக்கு வந்தார்கள். விடுதி பூட்டப்பட்டிருந்தது. எனவே அவர்கள் தங்கள் முயற்சியைக் கைவிட வேண்டியதாயிற்று. தபால் நிலையம் காப்பாற்றப்பட்டது. கல்லூரி வளாகத்துள் போலீஸ் நுழையும் ஆபத்தும் தவிர்க்கப் பட்டது.

**மேல்சபை உறுப்பினர்**

அவர் சென்னை சட்டசபையின் மேல்சபை உறுப்பினராகச் சிலகாலம் பணியாற்றினார். அங்கே அவர் ஆற்றிய முதல் பேச்சு எல்லோராலும் பாராட்டப்பட்டது. 1965ல் அவர் முதலில் மேல்சபைக்கு ஆசிரியர்கள் சார்பில் தேர்தலில் போட்டியிட முடிவுசெய்தார். நான் அப்பொழுது திருவனந்தபுரத்தில்

தொலைபேசிப் பயிற்சி நிலையத்தில் பயிற்சி பெற்றுக்கொண்டிருந்தேன். பேராசிரியர் அவர்கள் மேல்சபை உறுப்பினர் பதவிக்குப் போட்டியிடுகிறாரென்று கேள்விப்பட்டதும் தூத்துக்குடி சென்றேன். நெல்லை மாவட்டத்தில் கோவில்பட்டி மற்றும் சங்கரன் கோவில் தாலுக்காப் பள்ளிகளுக்குச் சென்று ஓட்டுச் சேகரிக்கும் பணி எனக்குக் கொடுக்கப் பட்டது. கழுகுமலை, சங்கரன் கோவில், இராஜபாளையம். குருவிகுளம் கயத்தாறு கெங்கைகொண்டான் முதலிய ஊர்களுக்குச் சென்று ஆசிரியர்களைச் சந்தித்து ஓட்டு வேட்டையாடினேன். கயத்தாறுக்கு வந்து அங்கிருந்து தூத்துக்குடியைத் தொலைபேசியில் (அப்பொழுதெல்லாம் தபால் அலுவலகத்தில் மட்டும்தான் தொலைபேசி உண்டு).தொடர்புகொண்டேன். பேராசிரியரின் பெயர் வாக்காளர் பட்டியலில் இல்லையென்றும் அவர் போட்டியிட இயலாது என்றும் சொல்லிவிட்டார்கள் என்ற செய்தி கிட்டியது.

செய்தி அதிர்ச்சியைத் தந்தது. அடுத்து பட்டதாரிகள் தொகுதியில் நின்று வெற்றிபெற்று மேல்சபை உறுப்பினர் ஆனார். மேல்சபையில் அவர் செய்த தொண்டுகள் பற்றி டாக்டர் செரியனும், திரு. மாணிக்கவேலர் அவர்களும் வெகுவாகப் பாராட்டியிருக்கிறார்கள்.

## முருகன் அருள்

ஒரு சமயம் அவருக்குத் தொண்டையில் கோளாறு ஏற்பட்டுப் பேசமுடியாது போய்விட்டது. அப்பொழுது திருச்செந்தூர் சென்று தேனாபிஷேகம் செய்யச்சொல்லி அவருக்குத் தெரிந்த யாரோ சொன்னதால், அவர் திருச்செந்தூர் சென்று முருகனுக்குத் தேனாபிஷேகம் செய்து அந்தத் தேனைப் பருகிவந்தார். ஒருசில நாட்களில் அவரது நோய் முற்றிலும் குணமாகிவிட்டது. அதுமுதல் ஒவ்வோராண்டும் விடுமுறைக்குப் பின் கல்லூரி திறப்பதற்கு முன் செந்தில் சென்று முருகனுக்கு அபிஷேகம் செய்து வணங்குவதை வழக்கமாய் வைத்திருந்தார்.

## தீபாவளி

அவரது வீட்டில் ஒவ்வோராண்டும் தீபாவளிக்கு முன் அவரது பணியாட்கள் அனைவருக்கும் புதுத் துணி வாங்கித் தருவார். எனக்கும் வருடாவருடம் தீபாளிக்கு முன் புதுத்துணி கொடுப்பார். நான் சம்பாதிக்கத் தொடங்கிய பிறகும் எனக்குத் தீபாவளிக்குப் புதுத் துணி கொடுப்பதை அவர் நிறுத்தவில்லை. தீபாவளியன்று நாங்கள் பட்டாசு வெடிப்போம். அவர் வாசலில் அமர்ந்து வேடிக்கை பார்ப்பார். தீபாவளியை அவர் மற்றவர்களுக்கு உதவி செய்வதற்காகக் கொண்டாடினார். ஆனால் அவர் விரும்பிக் கொண்டாடும் பண்டிகை ஒன்று உண்டு. அதுதான் கோகுலாஷ்டமி. கிருஷ்ணன் பிறந்த அந்தத் தினத்தை மிகப் பயபக்தியுடன் கொண்டாடுவார். அன்றுமட்டும் பஞ்சகச்சம் கட்டிக்கொண்டு பூஜை செய்வார். மற்றப் பண்டிகைகளை அவ்வளவு ஆர்வத்தோடு கொண்டாடி நான் பார்த்ததில்லை.

நான் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தபோது எனக்கு மாதாமாதம் மூன்று ரூபாய்ப் பணம் ஊரிலிருந்து வரும். அது ஓரிரு மாதங்கள் வரவில்லை. கால் செருப்பு பிய்ந்து போய்விட்டதால் வேறு செருப்பு வாங்கக் கையில் பணமில்லை. எனவே செருப்பின்றிக் கல்லூரி சென்றேன். தூத்துக்குடித் தகிக்கும் வெயிலில் செருப்பின்றி நடக்கப் பழகிக் கொண்டேன். ஒருநாள் பேராசிரியர் நான் செருப்பின்றி நடப்பதைப் பார்த்துவிட்டார். உடனே அவரது டிரைவர் பாடலிங்கத்தை அழைத்து மறுநாளே எனக்குச் செருப்பு வாங்கிக்கொடுக்கச் சொல்லி உத்தரவிட்டார்.

## பூச்சி வைத்தியம்

ஒருநாள் வலதுகை நடுவிரலில் ஏதோபூச்சி கடித்துவிட்டது விரல் வீங்கியிருந்தது. இதைக்கவனித்த பேராசிரியர் "ஏன் விரல் வீங்கியிருக்கிறது?" என்று கேட்டார்

"ஏதோ பூச்சி கடித்துவிட்டது" என்றேன்

"இங்கே என் அருகில் வா" என்றார். சென்றேன்.

"கையை நீட்டு"

நீட்டினேன். பூச்சி கடித்த விரலைப் பிடித்துக்கொண்டு ஏதோ மந்திரம் சொல்வதுபோல் முணுமுணுத்தார். பிறகு அவர் வலியால் துடிப்பதுபோல் நெளிந்தார்.

"உங்களுக்கு வலிக்கிறதா?" என்று கேட்டேன்.

" ஆமாம், உன் வலி எனக்கு வந்துவிட்டது. உனக்கு நாளைக்குள் சரியாகிவிடும்" என்றார். என்னுடைய வலியை அவர் வாங்கிக்கொண்டதாகச் சொன்னதைக் கேட்டு என் மனம் நெகிழ்ந்தது..

அவர் உண்மையிலே மந்திரம் போட்டாரா அல்லது மனோதத்துவ ரீதியாக எனக்குச் சிகிச்சையளித்தாரா என்று தெரியவில்லை. எனது விரல் வீக்கம் அவர் சொன்னது போலவே மறுநாளே குணமாகிவிட்டது.

# 15.பாதைகள் எல்லாம் பள்ளிக்கூடம்

ஒருமுறை என்னிடம் ஒரு புத்தகத்தைக் கொடுத்து அதை நன்கு படித்துவிட்டு அதற்கு விமரிசனம் எழுதச் சொன்னார்... நானும் அதை ஒருமுறைக்கு இருமுறை படித்துவிட்டு விமரிசனம் எழுதினேன். பேராசிரியருடைய உரைநடைப் பாணியிலேயே அந்த விமரிசனத்தை எழுதியிருந்தேன். படித்துப்பார்த்தார்.

"கருத்து மிக நன்றாக இருக்கிறது. ஆனால் என்னுடைய நடையைப் பின்பற்றி நீ அப்படியே எழுதியிருப்பது தவறு. நீ நன்றாக எழுதினால் கூட அதை நீயே எழுதியதாக யாரும் சொல்ல மாட்டார்கள். நீ தவறாக எழுதினால் அதை நான் எழுதியதாக நினைத்து எனக்குக் கெட்ட பேர் வந்துசேரும். எனவே உனக்கு என்று ஒரு தனிப்பாணி அமைத்துக்கொள்.. அதுதான் நல்லது" என்றார்.

**பாம்புப் பாடம்**

ஒருநாள் அவரது இல்லத்தின் முன் நுழைவாயிலை ஒட்டித் தரையில் பதிக்கப் பட்டிருந்த குழாயில் ஒருபெரிய பாம்பு புகுந்து கொண்டது. அதைப்பார்த்து அந்த வீட்டு வேலைக்காரன் அதை அடிப்பதற்காகப் பெரிய கம்போடு வந்து குழாயில் கம்பை விட்டுக் குத்திக்கொண்டிருந்தான். அதை வேடிக்கை பார்க்க நாலைந்து பேர். அதில் ஒருவன்,

"நீ குழாயில் கம்பை விட்டுக் குத்தினால் அது கோபம் கொண்டு வெளியே வந்து உன்னைக் கொத்திவிடும்" என்றான். அந்த வேலைக்காரனுக்குப் பயம் வந்து விட்டது. இதற்கிடையில் எதிர்முனையில் நின்று சிலர் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார்கள். அந்தப் பொல்லாத பாம்பு எதிர்முனை வழியாக வெளியில் வர முயன்று பலர் இருப்பதைப் பார்த்து உள்ளே திரும்பிச் சென்றுவிட்டது.

"குழாயைப் பேர்த்து எடுத்துவிடலாம்" என்றான் ஒருவன். நாம் பேர்த்து எடுக்கும் போது அது வெளியே வந்து கொத்திவிட்டால் என்ன செய்வது" என்றான் இன்னொருவன். இரு முனையிலும் ஆட்கள் நிற்பதைப் பார்த்து அந்தப் பாம்பு உள்ளேயே பதுங்கியிருந்தது. அதை நல்லபாம்பு என்றான்

ஒருவன். இல்லை சாரைப்பாம்பு என்றான் இன்னொருவன். பிறகு அவரவர்களுக்குத் தெரிந்த பாம்புக் கதைகளைப் பேசத்தொடங்கினார்கள்.

நல்ல பாம்புக்குச் சாரைப் பாம்புதான் கணவன். அவை இணைவதைப் பார்ப்பது பெரிய புண்ணியம். அந்த நேரத்தில் ஒரு துணியை அவற்றிற்குத் தெரியாமல் அவற்றின் மேல் போட்டுவிட்டால் அந்தத் துணி மஞ்சளாகிவிடும். அந்தத் துணியை எடுத்து வீட்டில் வைத்திருந்தால் செல்வம் கொழிக்கும்" என்றான் இன்னொருவன்.

உள்ளே ஒருவேளை நல்ல பாம்பும் இருக்குமோ என்று சொல்லிக்கொண்டு அதைக் கற்பனையில் பார்த்து அவன் நான்கடி பின்னால் சென்று நின்று கொண்டான்.

அந்தச் சமயம் பேராசிரியர் அங்கே வந்தார். வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த என்னிடம்,

" என்ன நடக்கிறது இங்கே?" என்று வினவினார். விஷயத்தைச் சொன்னேன்.

" அப்படியா, அதற்கு ஏன் இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்கிறீர்கள் . அப்படியே விட்டுவிட்டுப் போய்விடுங்கள். அது தானாக வெளியிலே போய்விடும்" என்றார்

"ஐயா அது உள்ளே இருந்தா இந்தப்பக்கம் போகிற போதெல்லாம் பயமாக இருக்கும்" என்றான் ஒருவன்.

"அப்படியென்றால் ஒன்று செய்யுங்கள். எல்லோரும் ஒரே பக்கமாகச் சென்று நில்லுங்கள். அந்தக் குழாயின் வாயிலில் பச்சைத் தழைகளையும் உலர்ந்த தழைகளையும் போட்டு எரியுங்கள். புகை நிறைய வரும் . அதற்கு அஞ்சிப் பாம்பு அடுத்த முனையில் வந்து வெளியே போய்விடும் " என்றார்

அப்படியே செய்தோம். பாம்பு புகையின் நெடியைத் தாங்காமல் வெளியே வந்து எதிர்ப்புறமாக வெளியே சென்றது. ஆறடிக்கு மேலிருந்த சாரைப்பாம்பு அது.

"குழாயின் இரண்டு புறமும் சல்லடைக் கம்பிபோட்டு மூடிவிடு" என்று வேலைக்காரனிடம் சொன்னார் பேராசிரியர். பிறகு என்னைப் பார்த்து

"இராமசாமி, இந்த நிகழ்ச்சியை ஒரு கட்டுரையாக எழுதி என்னிடம் காட்டு" என்றார்.

கட்டுரை எழுதினேன். நடந்த நிகழ்ச்சியை அப்படியே எழுதி அவரிடம் காட்டினேன்.

" நீ என்ன பத்திரிகைக்குச் செய்தியா அனுப்புகிறாய்?. இந்த நிகழ்ச்சியை ஒருசிறந்த கருத்தை எடுத்துச் சொல்லுவதற்கு முகவுரையாக எடுத்துச் சொல்லி அதிலிருந்து ஒரு இலக்கியத்தை நீ படைக்க வேண்டும். நீ செய்தித் தொகுப்பாளன் அல்ல. இலக்கியவாதி. எந்த நிகழ்ச்சியையும் அந்தக் கண்ணோட்டத்தோடு பார்க்க வேண்டும் " என்று சொல்லி அந்தச் சாரைப்பாம்பு நிகழ்ச்சியில் அடிப்படையாக அமைந்தது "பயம்". சாரைப்பாம்புக்கு ஆட்களைக்கண்டு பயம். ஆட்களுக்குச் சாரைப்பாம்பைக் கண்டு பயம். இந்த "பய" உணர்ச்சி எப்படி மக்களை ஆட்டிப்படைக்கிறது என்பதைச் சொல்ல இது ஒரு நல்ல தொடக்கம். பயத்திலிருந்து அபயம் வந்தது. அபயம் தான் வேதங்களில் முக்கியமாகச் சொல்லப்படுகிறது. அதுதான் ஆதார சுருதி. எனவே தான் பாரதி முதலில் 'அச்சம் தவிர்' என்றான்" என்று கிட்டத்தட்ட ஒருமணி நேரம் ஒரு அழகிய இலக்கியப் பாடம் நடத்திவிட்டார்.

அவருடைய கட்டுரைகள் பெரும்பாலும் இப்படித்தான் ஒரு நடை முறை நிகழ்ச்சியிலிருந்து தொடங்கி பெரியதத்துவம் ஒன்றைப் படம்பிடித்துக் காட்டிவிடும். அது மாபெரும் இலக்கிய விருந்தாக அமையும்.

எடுத்துக்காட்டாக இதோ இந்தத் தவளை நிகழ்ச்சி ஒரு அருமையான கட்டுரைக்கு எப்படி ஆதாரமாகிறது என்றுபாருங்கள்!

"போன சனிக்கிழமை. இரவு என்வீட்டு முற்றத்தில் தவளை ஒன்று பிரசன்னமாயிற்று. தவளையா? ஆமாம் முரட்டுத்தவளை: தத்தித் தத்தி என்னை நோக்கித் தாவி வந்தது. அதற்குத

தெரியுமா, தவளைகளைக் கண்டால் எனக்கு ஒரே அருவருப்பு என்று.? . இதேதடா தரித்திரம் இங்கே வந்து தொலைந்தது? 'என்று கூச்சலிட்டுக் கொண்டு முற்றத்திலிருந்து தவளையை வெளியேற்றும் பணியில் முனைந்து அங்கும் இங்கும் பாய்ந்தேன். என் பதற்றத்தைக் கண்டோ என்னவோ தவளை நடுமுற்றத்தில் நின்றது. ஒளியற்ற தனது கோலிக்கண்களால் விழி பிதுங்க என்னைப் பார்த்தது. குடத்தில் இருந்த தண்ணீரை அதன் மேல் சாய்த்தேன். பயனில்லை. தண்ணீரைக் கண்டு தவளையா கலங்கிவிடும்.? அது அசையவில்லை.,,,,,,, என்ன விகாரமான ஜந்து. கண்ணைப் பார்., வெளியிலே துள்ளி விழுந்துவிடும் போல் இருக்கிறது!. அந்த வாய்! அப்பா எவ்வளவு பெரிது! இதை வைத்துக்கொண்டுதான் கம்பர் கவந்தனை சிருஷ்டி செய்திருக்கவேண்டும். உடம்பு முழுதும் சொறி! குஷ்ட ரோகியைப் போல! " என்று எண்ணி என் அருவருப்பை அளந்து கொண்டிருந்த போது. சரேலென "'முக்கூடற்பள்ளு" என்ற நூலில் இருந்து ஒரு அடி ஞாபகத்துக்கு வந்தது. சொறிபடர்ந்த இந்தத் தவளையைப் பற்றித்தான் அந்த நூல் ஆசிரியர்

"நீர்ப்படு சொறித்தவளை கூப்பிடுகுதே!"என்று பாடுகிறார். தவளையை நேரிற் காணும் போது ஏற்படும் அருவருப்பு , இந்தச் சொற்களைப் படிக்கும் போது ஏற்படவில்லை. அதற்குப் பதிலாக அருமையான வர்ணனை என்று பாராட்டத் தோன்றுகிறது. இது ஏன்?

மழையரசன் வருகிறான் என்று எச்சரிக்கை பரிமாறும் கட்டியங்காரனாக நிற்கிறது நீர்ப்படு சொறித்தவளை. ஆனால் இது எப்பொழுது தெரியுமா? 'முக்கூடற்பள்ளு' ஆசிரியருடைய மனநிலை எது என்பது தெரிந்து அதோடு நாம் ஒட்டி நிற்கும் போதுதான். இதைச் செய்யாவிட்டால் அவருடைய பேச்சுப் பொருளற்றதாகத் தோன்றும், செய்யும் போது கவிதையும் நயமும் அழகும் நம்முடைய நெஞ்சைக் கவ்விவிடும்.. இலக்கியத்தைப் பூரணமாக அனுபவிக்க வேண்டுமானால் இப்படிக் கவிஞனோடு ஒன்றி நிற்கும் மனப்பாங்கு வேண்டும் .

இதைத்தான் 'இலக்கியக் கண்' என்று அறிஞர்கள் பேசுகிறார்கள்.

கொலுவைக்கவேண்டும் என்று அவரது தங்கை அமுத நிகழ்ச்சி பிரபஞ்சப் பொம்மைகளைப் பற்றிய ஒரு அருமையான கட்டுரைக்கு வித்தாகிறது. கொல்லனுடைய உலைக்களம் கவிதையை விளக்கக் காரணமாகிறது.

சிறுமியர் மணல்வீடு கட்டுகிறார்கள். அந்தக்காட்சியை மிக அழகாகப் படம்பிடிக்கிறார் பேராசிரியர் "செவ்வான நெருப்பு வெள்ளம் வற்றியது. அதிலிருந்து தெறித்து விழுந்த முத்துக்களைப் போல , மேலே நட்சத்திரங்கள் ஒன்றிரண்டு தோன்றின. வீட்டுத் திண்ணைகளில் அகல்விளக்குகள் கண்சிமிட்டின. சிறுமியர் வீடுகட்டி முடித்துவிட்டார்கள். ஒரு பிடி உயரத்துக்குச் சுற்றிலும் மணற்சுவர். , வாசலில் ஆளோடி, திண்ணை,உள்ளே கூடம், முற்றம் , அங்கணம், சமையல் அறை , பின்புறம் கிணறு. ஆம் சமையல் அறையும் கிணறும் இல்லாமல் போகுமா? கொத்துவேலை செய்தது பெண்களல்லவா?. சமையல் அறையில் அடுப்பு வேறே. அடுப்பில் நாலைந்து ஈர்க்குச்சிகள், அடுப்பு எரிவதாகப் பாவனை. அடுப்பின் மேல் மரச்செப்பு. அதுதான் சோறு கொதிக்கும் வெண்கலப்பானை.ஒவ்வொரு அறையின் மத்தியிலும் ஒரு பூவரசன் பூ. சிறிது நேரத்துக்கெல்லாம் ஓவென்று இரைந்து தாவி வந்த மேல்காற்று ஒரு நொடிப் பொழுதில் தன் பேய்க்கையால் அந்த மணல்வீட்டைக் கலைத்து, பூவரச மலர்களை உருட்டிச் சென்றது." இது ஒரு கவிதையை அறிமுகப்படுத்தப் பயன்பட்டது

பேராசிரியர் ஒரு நண்பரிடம் தனக்குப் பிடித்த கவிதைகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அப்பொழுது நானும் உடனிருந்தேன். அவருக்குப்பிடித்த எல்லாக் கவிதைகளிலும் அவருக்கு மிகவும் பிடித்தது பிரான்ஸிஸ் தாம்சன் எழுதிய 'HOUND OF HEAVEN' என்று சொன்னார். 'இலக்கிய மலர்கள்' என்ற புத்தகத்தில் அதைப்பற்றி அருமையான கட்டுரை எழுதியிருக்கிறார். அதற்கு முன்னோடிதான் மேலே கொடுத்துள்ள 'மணல்வீடு' நிகழ்ச்சி..

'இப்படி வாழ்க்கையில் பார்க்கிற ஒவ்வொரு நிகழ்ச்சியும் நமக்கு எதையாவது எடுத்துச் சொல்லும். அவற்றை நன்கு கவனித்து வைத்துக்கொள்ள வேண்டும்' என்று பேராசிரியர் சொல்வதுண்டு..

பயன்தரும் பாராட்டு

தீபம் நா. பார்த்தசாரதி அவர்கள் ஒருமுறை என்னிடம் சொன்னார்:

" நான் அதிகம் அறிமுகமாகாத காலம். கல்கியில் என் கதை ஒன்று வெளியானது. அது எனக்கு மிகவும் பிடித்த கதை. அதைப்பாராட்டி யாராவது எழுதுவார்கள் என்று எதிர்பார்த்தேன் ஒரு பாராட்டுக் கடிதம் கூட வரவில்லை. பிரபலமாயிருந்தால்தான் பாராட்டுக்கிடைக்கும் போலும் என்று நினைத்தேன். சிலநாட்கள் கழித்துக் கல்கி அலுவலகத்திலிருந்து ஒருகடிதத்தை எனக்கு அனுப்பினார்கள் கடிதத்தைப் பிரித்தால் முத்தான கையெழுத்தில் பேராசிரியர் அ.சீ.ரா அவர்கள் என்கதையைப் பாராட்டி எழுதியிருந்தார்கள். அந்தக் கடிதத்தைக் கண்களில் ஒற்றிக்கொண்டேன் அவ்வளவு அழகான கையெழுத்து. அருமையான பாராட்டு. எனக்கு அது மிகுந்த ஊக்கம் அளித்தது" பேராசிரியர் பாராட்டுவதிலும் ஒரு விசித்திரம் இருக்கும்.

1961ம் ஆண்டு என நினைக்கிறேன். வ.உ.சி கல்லூரியில் இலக்கிய விழா. பேராசிரியர் தலைமை. நாகர்கோயிலிலிருந்து வந்த ஒருதமிழ் ஆசிரியர் திருக்குறளைப்பற்றிப் பேசினார். இன்னொரு தமிழ்ப் பேராசிரியர் சிலப்பதிகாரம் பற்றிப் பேசினார். சிலப்பதிகாரம் பற்றிப் பேசியவரின் பேச்சில் சுவையில்லை. வகுப்பெடுக்கிற பாணியில் பேசிவிட்டு அமர்ந்துவிட்டார். ஆனால் திருக்குறளைப்பற்றிப் பேசியவர். மிக அருமையாகப் பேசினார்.. சுவையாகப் பேசினார். கருத்தாழமாகப் பேசினார்.

பேராசிரியர் அ.சீ.ரா தனது தலைமையுரையில் சிலப்பதிகாரம் பற்றிப் பேசியவரை ஓகோவென்று புகழ்ந்து பாராட்டினார். திருக்குறளைப் பற்றிப் பேசியவரைச் சற்றே

பாராட்டிவிட்டு அவருடைய பேச்சில் அவர்சொன்ன கருத்து ஒன்று சரியில்லை என்று சொல்லி அதைபற்றிப் பேசி அவரைச் சாடிவிட்டார்.. நான் அப்பொழுது மாணவன். எங்களுக்கெல்லாம் வருத்தம். நன்றாகப் பேசியவரைக் குற்றம் சொல்லியும் சாதாரணமாகப் பேசியவரைப் பாராட்டியும் ஏன் பேசினார் என்பது விளங்கவில்லை. பேராசிரியர் அப்படிப் பேசினார் என்றால் அதற்கு நிச்சயம் ஒரு காரணம் இருக்கும் என்பது எனக்குத் தெரியும். எனவே வீட்டுக்கு வந்ததும் பேராசிரியரிடம் இதுபற்றிக் கேட்டேன்.

அவர் சற்றே புன்னகைத்தார். "எனக்குத்தெரியும், மாணவர்கள் என்மேல் கோபமாகத்தான் இருப்பார்கள். ஆனால் அன்று நான் ஏன் அப்படிப் பேசினேன் தெரியுமா? சிலப்பதிகாரத்தைபற்றிப் பேசியவரிடம் சரக்கு அதிகம் கிடையாது. அவரால் அவ்வளவுதான் பேச முடியும். அவரைப் பாராட்டுவதால் ஒன்றும் பாதகமில்லை. அவராவது மகிழ்ச்சியடைவார் இல்லையா? ஆனால் திருக்குறளைப் பற்றிப் பேசிய அந்த இளைஞர் நல்ல அறிவாளி. முன்னுக்கு வரக்கூடியவர். நல்ல சிந்தனை இருக்கிறது. ஆனால் இன்று அவர் பேசியதில் மிகப் பெரிய கருத்துபிழை இருந்தது. அவரைப் பாராட்டிவிட்டு அப்படியே விட்டிருந்தால் தாம் சொல்வதெல்லாம் சரியென்று அவர் நினைக்கக்கூடும். அது அவர் வளர்ச்சிக்குத் தடையாகும். வேண்டுமென்றால் பார். அவர் பின்னாளில் பெரும் புகழ் பெறுவார் என்றார். அவருடைய கணிப்பு வீணாகவில்லை.

பேராசிரியரின் பேட்டி ஒன்று 1967ம் ஆண்டு தீபம் இதழில் வெளியாகியிருக்கிறது.. அதில் அவர் தான் முதன் முதல் எழுதிய கட்டுரையைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்

"1925-26ல் கலாநிலையம் என்ற ஒரு பத்திரிகை வெளிவந்தது. பேராசிரியர் தெ.பொ மீனாட்சி சுந்தரனார் அவர்களும் திரு டி.என் சேஷாசலம் அவர்களும் சேர்ந்து நடத்திய பத்திரிகை அது. அந்தப் பத்திரிகையில்" சேக்கிழாரும் கண்ணப்பரும்" என்ற தலைப்பில் திரு தெ.பொ.மீ அவர்கள் தொடர்ந்து எழுதிவந்தார். தமிழ் இலக்கியத்திற்கும் சிறப்பாகக்

கம்பனுக்கும் அந்த இதழில் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வந்தது. அதைப் பார்த்த உடனே எனக்கும் எழுத வேண்டும் என ஆசை ஏற்பட்டது. எழுதினேன். அதில் சிலப்பதிகாரம் , மணிமேகலை பற்றிய விவாதம் எனது பங்காக இருந்தது."

**பெண்பெயரில் ஆண் புகுந்து..**

திரு தி.ஜ.ர வும் அ.சீராவும் சேர்ந்து சுதத்திரச் சங்கு என்ற பத்திரிக்கையில் பெண்கள் பெயரில் எழுதிய வேடிக்கையை அ.சீ.ரா அந்தப் பேட்டியில் நினைவு கூர்கிறார்.

"1933ல் சென்னையில் சுதந்திரச் சங்கு என்ற வார இதழ் தொடங்கப்பட்டது. வ.ரா, தி.ஜ.ர ஆகியோர் அந்தப் பத்திரிகையில் பணியாற்றி வந்தனர். சென்னை செல்லும் போதெல்லாம் சுதந்திரச் சங்கு அலுவலகத்தில்தான் தங்குவேன். அப்போது சுதந்திரச் சங்கு இதழில் பெண்கள் பகுதி ஒன்றைத் தொடங்கி அப்பகுதியில் ராஜாத்தி என்னும் புனைபெயரில் தி.ஜ.ர வும் ரங்கம் எனும் புனைபெயரில் நானும் எழுதி வந்தோம்.. ராஜாத்தி என்பவள் முற்போக்கு எண்ணம் உடையவள். பெண்கள் படித்துப் பட்டம் பெற்றுப் பணியாற்றித் தனித்து இயங்க வேண்டும் என்றும் திருமணம் என்ற கட்டுப்பாடு அவர்களை விலங்கிட்டு விடக்கூடாது என்றும் எண்ணுபவள். ரங்கம்- பழைய மரபுகளைப் பின்பற்றி வாழுபவள். இப்படி நாங்கள் எழுதிவந்ததைப் படித்த பலர் எங்களைப் பெண்கள் என்றே எண்ணினார்கள். அப்பொழுதுதான் தி.ஜ.ரவின் சந்தனக் காவடி வெளியாயிற்று.

**எதிர்பாரா உதவி**

சந்தக் கவிமாமணி தமிழழகன் அவர்கள் தூத்துக்குடிக்காரர். அவர் பேராசிரியரைத் தூத்துக்குடியில் வைத்துப் பலமுறை சந்தித்திருக்கிறார். அப்படி ஒரு சந்திப்பின் போது அவருடைய கவிதைகள் எழுதப் பெற்ற கையெழுத்து ஏட்டை அ.சீ.ராவிடம் கொடுத்தார். அ.சீ.ரா அதை வாங்கிவைத்துகொண்டு 15 நாள்கள் கழித்து மீண்டும் வரும்படியும் அதற்குள் அவரது கவிதைகளைப் படித்து அவற்றைப் பற்றிச் சொல்வதாகவும் சொன்னார்.. தமிழழகன் இரண்டு மாதங்கள் கழித்து அவரைப்

பார்க்கப் போனபோது "உங்கள் கவிதைகளைப் பார்த்தேன் நன்றாக இருக்கின்றன. கையெழுத்துப் பிரதியை பழனியப்பச் செட்டியாருக்கு அனுப்பியிருக்கிறேன். அவர் அதை வெளியிடுவார். அவரைப்போய்ப் பாருங்கள்" என்று சொன்னார். தமிழழகனுக்கு மகிழ்ச்சியில் என்ன சொல்வதென்றே தெரியவில்லை. "அந்தப்புத்தகத்துக்கு நீங்கள்தான் முன்னுரை தர வேண்டும்" என்றார்.

அதற்கு அ.சீ.ரா" இது உங்களுடைய முதல் புத்தகம். நான் முன்னுரை தரலாம் .ஆனால் ஏதாவது தமிழ்ப் பேராசிரியரிடம் முன்னுரை வாங்குங்கள். அதுதான் நல்லது. உங்களது அடுத்த புத்தகத்துக்கு நான் முன்னுரை தருகிறேன்" என்றார். அவரே தமிழழகனை மு.வ.விடம் அனுப்பிவைத்தார். மு.வ.வின் முன்னுரையோடு அந்தப் புத்தகம் வெளிவந்தது. கவிஞர்களை எந்தக் கைமாறும் கருதாது ஊக்குவிப்பதற்கு இது ஒரு சான்று.



# 16. சாதனை படைத்த தமிழாக்கங்கள்

'சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்' என்றான் பாரதி. அதுமட்டுமல்ல. பிறநாட்டார் நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும் என்றும் சொன்னான். பாரதி சொன்ன இந்த இரண்டு கடமைகளையும் செவ்வனே செய்தவர் பேராசிரியர் அ.சீ.ரா. அவரே சொல்வதுபோல மொழிபெயர்ப்பு என்பது காற்றைப் பிடித்துக் கரகத்தில் அடைக்கும் கதைதான்.

ஒரு மொழிபெயர்ப்பாளனுக்கு இருக்கவேண்டிய தகுதிகள்

**1. தெளிவுறவே அறிந்திடுதல்**

எதை மொழிபெயர்க்கிறானோ அதைத் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். அதற்கு எந்த மொழியிலிருந்து மொழிபெயர்க்கிறானோ அந்த மொழிப் புலமை அவசியம். அதுமட்டுமல்ல அந்த மொழி பேசும் மக்களின் பண்பாட்டையும் அறிந்திருத்தல் அவசியம்.

2. அடுத்து எந்த மொழியில் பெயர்க்கிறானோ அந்த மொழியில் புலமை. அதுமட்டுமன்று அந்த மொழிபேசும் மக்களின் பண்பாட்டைப் பற்றிய ஞானம். அது தாய்மொழியாய் இருந்தால் இன்னும் சிறப்பு

3. அடுத்து எதை மொழி பெயர்க்கிறோமோ அந்த அமைப்பைப் பற்றிய அறிவு. கவிதையைக் கவிதையாய் மொழிபெயர்த்தால் கவிதை எழுதும் திறன் அவசியம்..

அப்படிச் செய்யும் போது மூலக்கவிஞனுடைய மனத்தை உணரும் பாங்கு அவசியம். அந்தக் கவிஞனாகத் தன்னை மாற்றிக்கொண்டு, அந்தக் கவிதை எந்த மொழியில் மாற்றம் பெறுகிறதோ அந்த மொழியில் எழுதினால் எப்படிச் சிந்தித்திருப்பான் என எண்ணிப்பார்க்கும் திறமை..

3 அடுத்ததாக எந்த விதமான மக்களை அது சென்றடைய வேண்டுமென்று கணித்து அதற்கேற்ற நடையில் எழுதுவது.

4 அப்படிச் செய்யும் போது மாற்று மொழியின் பண்பாட்டுக்கு ஏற்றவகையில் சொல்லையோ சொற்றொடரையோ தேர்ந்தெடுத்துக்கொள்ளுதல்.

5. அந்த மொழிபெயர்ப்பை , மூலத்தை அறியாதவன் படிக்கும் போது எந்த மொழியில் அது மாற்றம் பெற்றிருக்கிறதோ அந்த மொழியில் எழுந்ததாகவே கருதவைக்கும் ஆற்றல்.

பேராசிரியர் மேற்கண்ட ஆற்றல் அனைத்தும் கைவரப்பெற்றவர்.

**மூலமா மொழிபெயர்ப்பா?**

இதோ ஒரு பாடல்

சிற்றடி துள்ள நடந்தனள்- செல்வச்
சீரடி மின்ன விரைந்தனள்-அந்தப்
பொற்றொடிச் சேலையின் பொன்முனை-அவள்
போகிற போதெனைத் தொட்டது.

பாடலின் துள்ள லோசை, துள்ளித் துள்ளி நடந்து செல்லுகிற விரைவு, அவள் சேலையை அசைக்கிற காற்று, அலைபாய்கிற சேலையினொரு முனை தொட்ட பரவசம், இவை யாவையும் அந்த நான்கு அடிகள் எவ்வளவு அழகாகக் காட்டிவிடுகின்றன. அப்படி விரைந்து செல்பவள் ஒரு தமிழ்ப்பெண்ணாகத்தானே நமக்குக் காட்சியளிக்கிறாள்.! இந்தக் கவிதை ஒரு தமிழ்க்கவிதையாகத்தானே குதிபோடுகிறது! ஆனால் இது மகாகவி இரவீந்திரநாத் தாகுரின் கவிதையின் தமிழாக்கம். பிறமொழிக் கவிதையைத் தன்மொழியாக்குதல் என்பது இதுதான்..

படுகை மேட்டினிலே - வளைந்த
பாதைத் திருப்பத்திலே
குடம் இடுப்பினிலே- கொண்டு
கொடியென நடந்தாள்

இதுவும் தமிழாக்கம்தான். சந்தம் குதிபோடுகிறது.

வருகிறான் வருகிறான் வருகிறான்
அரவமின்றி ஆர்பதத்தின்
அசைவு கேட்கவில்லையா
வருகிறான் வருகிறான் வருகிறான்
கோடை வெய்யில் வாசம் மல்கும்
கோலக் காட்டுப் பாதையில்
முடுகார் இராவினில்
முழங்கு மேகத் தேரினில்
வருகிறான், வருகிறான், வருகிறான்

எந்த விதமான சந்தமும் இல்லாமல் சாதாரணமான அகவலில் மிக எளிமையாக நடக்கும் கீழ்க்காணும் பாடலைப் பாருங்கள். ஒரு அற்புதமான காட்சியை என்ன அழகாக அந்த எளிய செய்யுள் படம்பிடித்து விடுகிறது!

ஒருநாட் போல வருகிறான், போகிறான்
தோழி அவனிடம் சென்று என் கூந்தலில்
சூடிய மலரிதைச் சேர்த்திடு, யாரிதை
அனுப்பிய தென்பான்,என்றால்,என்றால்
ஐயோ, பெயரைச் சொல்லி விடாதே,
நமக்கென்ன ஏதோ வருகிறான், போகிறான்
வந்து மரத்தடிப் புழுதியில் தங்குவான்
இந்தா, இந்த மலர்களும் இலைகளும்
அங்கே ,அந்த மரத்தின் அடியிலே
பரப்பிவை, பாவம், என்னவோ முகத்தில்
ஏதோ சோகம், என்ன சோகமோ,
எனது நெஞ்சிலும் புகுந்தது, அவனோ
மனத்தில் உள்ளதைச் சொல்லவே மாட்டான்.
நமக்கென்ன, ஏதோ வருகிறான் போகிறான்.

என்ன அருமையான பாடல். இவையெல்லாமே தாகுர் கவிதையின் தமிழாக்கம்தான். தாகுரின் பாடல்களின் மொழிபெயர்ப்பு "கவியரசர் கண்ட கவிதை 'என்ற தலைப்பில் நூலாக வெளிவந்திருக்கிறது.

**கவியரசர் கண்ட கவிதை**

பேராசிரியர் தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் "கவியரசர் கண்ட கவிதை"நூலின் முன்னுரையில் சொல்கிறார்

"மொழிபெயர்ப்பும் ஒரு புதுப்படைப்பே. புதுப்படைப்பிலும் அரியது மொழி பெயர்ப்பு. ஒரு கவிஞனது உள்ளம் ஒரு மொழியின் உயிரோட்டமாக உருக்கொண்டதனை , மற்றொரு மொழியில் உயிரோட்டமாக வேறொரு கவிஞன் உருக்கொடுப்பதுவே கவிதையின் உண்மையான மொழிபெயர்ப்பு.

இது ஒரு கவிதைப் பெருஞ்சித்து. இந்நாளின் சித்தனான பாரதிக்கும் கைவராத இந்தப் பெருஞ்சித்து கவிமணிக்கு வாய்த்திருந்தது. நண்பர் 'நாணலு'க்கும் வாய்த்துள்ளது. பல் மொழி இலக்கிய வெள்ளத்திடையே திளைத்து வாழ்வதன் பயன் இது. கவிமணியைப் போலவே முதல் நூலை எளிதாக்கி, அதன் உயிர்ராகம் குன்றாமல் பாடியுள்ளார் நண்பர் சீநிவாசராகவன். முதல் நூலிலும் இனிக்கிறது என்தமிழ்க் காதுக்கு இவருடைய தமிழ்."

பேராசிரியர் அ.சீ.ரா தன்னுடைய கூற்றில் தான் எப்படித் தாகுரின் பாடல்களை மொழிபெயர்த்தார் என்பதைத் தெளிவாகக் கூறியிருக்கிறார். இது ஒவ்வொரு மொழிபெயர்ப்பாளனும் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய ஒன்று.

"ஆங்கில முலத்திலிருந்து பாட்டின் பொதுப்படையான பொருள், வங்காளி முலத்துடன் ஒப்பிட்டுப் பார்ப்பதன்மூலம் அப்பொருளுக்குத் தெளிவு, பாடலின் ஒவ்வொரு சொல்லையும் கூர்ந்து நோக்கித் திரட்டிய தொனி, சொல்லுக்கும் சொல்லுக்கு இடையே உள்ள மோனத்தைத் துழவிப் பெற்ற கமகங்கள், பாட்டின் சந்தத்திலும் ஒலி நயத்திலும் ஆழ்ந்து ஆழ்ந்து கண்ட உணர்ச்சிச் சூழல் இவை அனைத்தையும் ஒன்றாய், பிரிக்க

முடியாத உணர்ச்சி உயிர்த்தத்துவமாய், தமிழிலே , தமிழிலேயே இயற்கையாக அரும்பிய ஒன்றாகத் தருவதே, என்னுடைய இலட்சியமாக அமைந்தது."

அந்த இலட்சியத்தில் சிறந்த வெற்றி பெற்றுள்ளார் என்பதற்கு மேலே காட்டியுள்ள பாடல்கள் சான்று. அவர் தாகுரின் பாடல்களைத் தமிழாக்கம் செய்துகொண்டிருந்த போது நான் அவருடைய வீட்டிலே தங்கியிருந்தேன். ஒரு பாடலைத் தமிழாக்கம் செய்ததும் அதை என்னிடம் படித்துக்காட்டுவார். அதைப் பிரதி செய்து தனியாக வைத்துவிடுவேன். அந்தப்பாடல்களில் ஏதேனும் சந்தேகம் வந்தால் அதை அவரிடம் கேட்பேன். விளக்கம் தருவார். சிலசமயங்களில் பொருள் புரிவது சற்றுக்கடினமாக இருக்கிறது என்பதை என்னுடைய முகபாவத்திலிருந்தே தெரிந்து கொண்டுவிடுவார்.

"எந்த இடம் உனக்குப் புரியவில்லை?" என்று கேட்பார். அதை விளக்கிவிட்டு அதை மேலும் எளிமைப்படுத்துவார். ஒரு மாணவன் சொல்வதுதானே என்று அலட்சியப் படுத்தமாட்டார்.

தூத்துக்குடி மீன்வளத்துறையில் பணியாற்றுவதற்காக டாக்டர் பட்டாச்சார்யா என்பவர் வந்திருந்தார். அவருடன் பேராசிரியருக்குப் பழக்கம் ஏற்பட்டு இருவரும் சிறந்த நண்பர்கள் ஆனார்கள். பட்டாச்சார்யா அ,சீ,ரா இல்லத்துக்கு அடிக்கடி வருவதுண்டு. அவர் ஏதாவது நகைச்சுவையைக் கேட்டால் உரத்த வகையில் "ஹா,ஹா,ஹா" என்று வாய்விட்டுச் சிரிப்பார். அவர் சிரிப்பைக் கேட்பதற்கு நாங்கள் ஆர்வமாயிருப்போம். அவர் தாகுர் கவிதைகளில் ஆழங்கால் பட்டவர். பேராசிரியர், அவரிடம் தான் மொழிபெயர்த்த கவிதையைத் தமிழில் படித்து அதற்கு ஆங்கில விளக்கமும்

சொல்வார். அகலிகை என்ற கவிதையை அன்று அவருக்குப் படித்துக்காட்டி அதில் " the sacred bath of dust" என்று ஓரிடத்தில் வருகிறது. அதைத் 'தூசியெனும் கங்கையினில் முழ்கி' என்று மொழியாக்கம் செய்திருக்கிறேன்" என்று டாக்டர் பட்டாச்சார்யாரிடம் சொன்னார். பட்டாச்சார்யா தான்

அமர்ந்திருந்த இருக்கையிலிருந்து எழுந்து பேராசிரியரின் இரு கரங்களையும் பிடித்துக்கொண்டு" புரொஃபெஸர் ராகவன், என்ன சொல்வதென்று தெரியவில்லை. தாகுர் வங்காளி மூலத்தில் கங்கை என்ற சொல்லைத்தான் பயன்படுத்தியிருக்கிறார்" என்று சொல்லிவிட்டு" உங்களுக்குக் கங்கை என்ற சொல்லைப் பயன்படுத்த வேண்டும் என்று எப்படித் தோன்றியது?" என்று கேட்டார். "கவிஞனுடைய உள்ளத்தில் தோய்ந்துவிட்டால் இது சாத்தியமே" என்றார் பேராசிரியர். இதைப்போலவே "stony obstacles ' இமாலயத் தடையானது". தாகுர் மூலத்தில் இமாலயம் என்ற சொல்லைப் பயன்படுத்தியிருந்தார். இப்படிப் பல இடங்களில் நேர்ந்ததைக் கண்டு டாக்டர் பட்டார்ச்சார்யா அ. சீ. ரா வின் வித்தகத்தை எண்ணி வியந்தார்.

**விமரிசனங்கள்**

கவியரசர் கண்ட கவிதையைப் பற்றிய விமரிசனங்கள் அனைத்துமே பேராசிரியரின் திறமையை வியந்து போற்றுகின்றன.

ஹிந்து, இண்டியன் எக்ஸ்ப்ரஸ், ஆகிய ஆங்கில ஏடுகளும், ஆனந்த விகடன்,கல்கி, கலைமகள், சுதேசமித்ரன் ஆகிய இதழ்களும் அவற்றுள் அடங்கும். ஆனந்த விகடனில் பல பக்கங்களில் அதன் விமரிசனம் வந்துள்ளது.

அதிலிருந்து இதோ ஒரு துளி.

"அ.சீ.ரா எத்தகைய இலக்கிய மேதை என்பது நாடறிந்த உண்மை. வண்ணக் கலாப மயிலின் ஒயிலோடு அசைந்தாடிவரும் தமிழ்நடையும் , செதுக்கிவிட்ட சிற்பம் போல் தெளிவும் உறுதியும் சேர்ந்து இயங்கும் கருத்தாழமும் , பட்டை தீட்டிய வைரமாய்ப் பழுத்திடும் பழுத்த கல்வி ஞானமும் , மணியிலிருந்து பிரிக்கமுடியாத ஒளியைப்போலச் சொல்லவந்த பொருளோடு ஒன்றி நிற்கும் மன நெகிழ்ச்சியும், பொங்கிவரும் புதுப்புனலாய்த் தங்குதடையின்றிப் பாயும் கற்பனை ஓட்டமும் அவர் எழுத்துக்களின் உயிராக இயங்கும் தனிமுத்திரைகள்.

கவியரசர் கண்ட கவிதைகளைத் தமிழ்க்கவிதைகளாகப் படைக்க அவர் மேற்கொண்ட முயற்சியில் , இந்தச் சிறப்புகள்

எல்லாம் விசுவரூபம் எடுத்து "கவியரசர் கண்ட கவிதை'யை ஒரு மாபெரும் இலக்கியச் சாதனையாக நிலைநாட்டியுள்ளன. தாகூர் கவிதை தமிழ்க் கவிதையாகப் புது வாழ்வு பெற்றுவிட்டது.

மூலக்கவிதைகளில் தோய்ந்து நிற்கும் ஈடுபாடு, மூலத்தைச் சிதையாமல் தன்னை ஒதுக்கிவைக்கும் தியாக உணர்ச்சி, ஒருமொழியின் கவிதையை இன்னொரு மொழியின் கவிதையாக வடிப்பதற்குத் தேவையான மொழிஞானம், கவித்துவ சக்தி, வங்கமொழி ஆங்கிலம் இரண்டையும் தமிழாக்கித் தருவதற்கு இன்றியமையாது வேண்டிய தமிழ் நெஞ்சம் இவை அனைத்தும் இந்நூல் முழுதும் மணம் வீசி, "மொழிபெயர்ப்பு" என்னும் கடுமையான பணியை, "இதயப்பெயர்ப்பு" என்னும் சிருஷ்டிக் கலையாக உயர்த்திவிட்டன.

ஒருவிநாடி நேரம் , ஒளிவெள்ளமாய் வண்ணக் கோலமிட்டு, உடனே கருகிவிடும் மத்தாப்பு ஒளியாக அமையவில்லை இந்நூல். காலப் பெருநடையில் கலங்காத சோபையுடன் , கவிதா தேவியின் சந்நிதியில் முத்துச் சுடர் வீசி நிற்கும் "நந்தாவிளக்கு, நடுங்காத பொற்சுடர். "

கல்கி விமரிசனத்தில் ஒரு தெறிப்பு:

"கவியரசர் கண்ட கவிதை என்ற இந்த அரிய நூல் இருபதாம் நூற்றாண்டு மொழிபெயர்ப்பு இலக்கியத்திலே ஒரு சரித்திரப் பெருஞ்சாதனையாகும். பேராசிரியர் அ.சீ.ரா அவர்கள் இன்றையத் தமிழ் நாட்டிற்கு எழுதித் தந்த நன்கொடைச் சாசனம் இந்த நூல்"

"தாகூர் பாட்டுகளின் தமிழாக்கங்களுக்குள் இத்தொகுப்பைவிடச் சிறந்ததில்லை.. தமிழிலக்கி யத்திற்குச் சேர்த்துள்ள செல்வம் இது." ---சுதேசமித்திரன்.

அறிஞர் கி. சந்திரசேகரன் சொல்கிறார்:

"பாட்டுக்களை- உங்கள் தமிழ்ப் பாட்டுக்களைப் பாடிப்பாடி மெய்மறக்கிறேன். தாகூர் செய்தது விந்தையெனில் , உங்கள் மொழிபெயர்ப்பும்- கேவலம் மொழிபெயர்ப்பா இது.! விந்தைக்கெல்லாம் விந்தையாய் அமைந்துள்ளது. ஆங்கிலத்தில் 'பிறைமதி'யை அனுபவித்ததைவிட உங்கள் இனிய சொற்களில் வரம்பற்ற இன்பத்தைக் காண்கிறேன்.

ரசிகன், கவிஞன், விமர்சகன் எல்லாமாய் உள்ளவர் நீங்கள். அலகிலா உலகை அளப்பதைப் போன்ற கவியுள்ளம் யாருக்கும் வருமா சீக்கிரம்?. வந்திருப்பதைக் காண்கிறேன்., மலைக்கிறேன்."

அவர் ஆங்கிலத்திலிருந்து பல அரிய கவிதைகளை மொழியாக்கம் செய்து அவற்றை விளக்கிக் கல்கிப் பத்திரிகையில் தொடராக வெளியிட்டிருக்கிறார்.

அவற்றை வெளியிட்டு வரும்போது படித்த மாணவர்கள் பலர் தங்கள் பாடத்தில் வரும் ஆங்கிலப் பாடல்களையும் தமிழில் மொழிபெயர்த்துக் கட்டுரைவடிவில் கல்கியில் எழுதினால் அவற்றைப் புரிந்து படிக்கவும் தேர்வில் சிறந்த வெற்றிபெறவும் முடியுமே என்று கல்கியாசிரியருக்கு எழுத அவரின் வேண்டுகோளின்படி மாணவர்களுக்காக அவர்களின் பாடங்களில் வரும் கவிதைகளைத் தமிழாக்கம் செய்து கட்டுரைகள் எழுதினார்.

அதற்கு முன்னுரையாக அவர் எழுதியது ஒரு மிகச் சிறந்த கட்டுரை

"எங்களுக்குப் பாடமாக உள்ள ஆங்கிலப் பாடல்கள், தமிழ்ப் பாடல்கள் இவற்றையும் இலக்கியச் செல்வத்'தொடரில் விமர்சனம் செய்யக்கூடாதா?" என்று கல்லூரி மாணவர்கள் பலர் கேட்கிறார்கள். செய்தால் என்ன? என்று உற்சாகப் படுத்துகிறார் கல்கி ஆசிரியர். செய்யலாம் என்று எண்ணுவதற்குள், ஒருகுரல் காதில் விழுகிறது "சரி,சரி. இனிமேல் ஆசிரியருக்குக் கொண்டாட்டம்தான். தற்குறிப்பேற்றம், உருபும் பயனும் உடன்தொக்கத்தொகை, பொருள்மொழிக்காஞ்சி, இடந்தலைப்பாடு என்றெல்லாம் விளாசத் தொடங்கிவிடுவார். இல்லாவிட்டால் ஹோமர் பின்பற்றிய உவமை, எதுகையில்லாச் செய்யுள், யதார்த்தவாதம், இலட்சியவாதம், ரொமாந்திக் இலக்கியம் இப்படியாக ஆங்கில இலக்கிய வாதச் சங்கேதச் சொற்களை அள்ளிவீசித் திணற அடித்துவிடுவார்' என்று கவலைப்படுகிறது அந்தக்குரல்.

அப்படி ஒன்றும் பயப்பட வேண்டாம். இதுவரை இருந்ததுபோலவே, இனியும் 'இலக்கியச் செல்வ'த் தொடர் பாடல்களில் உள்ள பொருள் வளத்தையும் கவிதைப

பாங்கையுமே தரும். இதனால் மாணவர்களுக்கு , சிறந்த உதவி கிடைக்கும். மாணவரல்லாத மற்றவர்களும் கவிதையின் அழகை நுகர்வார்கள். பாடமாக அமைந்துவிட்டது என்பதால் பாடல் ஒன்றின் கவிதைத்தன்மை குறைந்துவிடுமா? விடாது. பாடமாக உள்ள பாடலைப் பற்றிப் பேசுகிறேன். என்பதால் பாடலை மறந்து பாடத்துக்குப் போய்விடவா போகிறேன்? அதுவுமில்லை. பாடலை மறந்தால் பின்னர் பாடந்தான் ஏது?. பாடலை உணர்வதற்காகத்தானே பாடமும் வகுப்பும்!

வாருங்கள் போகலாம் அற்புதமான பாடம் ஒன்றைக் காணுவதற்கு"

டென்னிசனின் லோட்டஸ் ஈட்டர்ஸ் என்ற கவிதையை எடுத்துக்கொண்டு முதலில் அலசினார் பேராசிரியர். இப்படிப் பல பாடப்பாடல்களைத் தமிழுலகுக்கு அறிமுகம் செய்தார்.

அவர் மொழியாக்கம் செய்த பாடல்கள் பல. ஆங்கில இலக்கியத்திலிருந்து 'இலக்கியச் செல்வம் ' தொடருக்காக தமிழாக்கம் செய்தவைதவிர வடமொழியிலிருந்தும் பல பாடல்களை மொழியாக்கம் செய்திருக்கிறார். இவைதவிர தமிழ் மொழி இலக்கியத்தைக் குறிப்பாக சங்கப் பாடல்கள், கம்பன், பாரதி பாடல்களை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து "வெளிநாட்டார் அவற்றை வணக்கம் செய்ய' வைத்திருக்கிறார்.

அவர் மொழியாக்கம் செய்தவற்றுள் முக்கியமானவை

1. உமர்கய்யாம் பாடல்கள்
2. காளிதாசனின் மேக சந்தேசம்
3. குலசேகரரின் முகுந்த மாலை
4. ஆதிசங்கரரின் மநீஷா பஞ்சகம்
5. பஜகோவிந்தம்
6. தாருதத் பாடல்கள்
7. டென்னிசனின் துயிற்கனி நாடு
8. வால்ட் விட்மனின் புல்லின் இதழ்கள்-சில பாடல்கள்
9. தோரேயின் வால்டன்

ஆங்கிலத்தில் ஆக்கிய தமிழ்க்கவிதைகள்

1 நம்மாழ்வார்

2 voicc of a poct(பாரதியின் பாடல்கள் சில)

3 Leaves from kamban(கம்பனின் படல்கள் சில)

4 சங்கப்பாடல்கள் சில

**ஆங்கிலத்தில் சங்கப்பாடல்**

அவரது சங்கப்பாடல்கள் மொழிபெயர்ப்பு எப்படி நிகழ்ந்தது என்பதைப் பற்றிப் பேராசிரியர். கு.நா. சிவராமகிருஷ்ணன் அவர்கள் கூறுவதைக் கேட்போமா?(பேராசிரியர் கு.நா.சி கி.வா.ஜ வின் மாணவர். வ.உ.சி கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியவர்)

*“1964ம் வருடம் வருடம் கல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கத்தார் விருப்பப்படி சங்க இலக்கியம் பற்றி ஆங்கிலத்தில் பேசும் பணி அமைந்தது. ஆங்காங்கு உள்ள உதாரணப் பாடல்களைத் தமிழிலேயே எழுதிக்கொண்டு ஆங்கில விளக்கத்திற்குரிய இடத்தை ஒதுக்கிப் , பேச வேண்டிய ஆங்கிலச் சொற்பொழிவைத் தட்டெழுத்தில் தயாரித்துக்கொண்டு விட்டேன். . இந்த நிலையில் பேராசிரியரைச் சந்தித்தேன். “நான் உதாரணமாக எடுத்துள்ள சில பாடலுக்கு ஆங்கிலத்தில் விளக்கம் சொல்ல இயலாமல் திணறிக்கொண்டிருக்கிறேன். நாளோ நெருங்கிக் கொண்டிருக்கிறது. என்ன செய்வதென்று தெரியவில்லை என்று கூறினேன். “அப்படியா , என்ன பாடல்கள் , இங்கே காட்டுங்கள் பார்க்கலாம்.” என்றார். பாடல்களைப் பார்த்த மாத்திரத்தில் அந்தந்தப் பாடலுக்குக் கீழே ஆங்கில விளக்கத்தைத் தங்குதடையில்லாமல் ஒரெழுத்தைக் கூட அடிக்காமல் எதையோ பார்த்துப் பிரதிசெய்கிற பாங்கில் எழுதிவிட்டு வாசித்துக் காட்டினார். அவர் அன்று செய்த மொழிபெயர்ப்பில் ஒன்றிரண்டு இதோ:*

*அன்னாய் , வாழி, வேண்டன்னை நம்படப்பை*

*தேன்மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு*

*உவலைக் கூவற்கீழ்*

*மானுண் டெஞ்சிய கலுழி நீரே!(ஐங்குறுநூறு 203)*

*"Mother, the waters of the ditch*
*In the uplands of his country*
*Muddled by the drinking deer,*
*Are sweeter far*
*Than the milk and honey here*
*In our back - garden*

*தான் துழந்தட்ட தீம்புளிப் பாகர்*
*'இனிது' எனக் கணவன் உண்டலின்*
*நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே*
*(குறுந்தொகை- 167)*

*The tenderly sour soup,*
*Ladled and cooked by herself*
*When the husband took it*
*Saying "It is sweet"*
*On her bright face broke*
*The ripple of a smile.*

மேல்காற்று, இலக்கியச் செல்வக்கட்டுரைகள், குருதேவரின் குரல் கட்டுரைத் தொகுப்பு, கவியரசர் கண்ட கவிதை ஆகியவை பேராசிரியரின் மொழிபெயர்ப்புத் திறனைப் படம்பிடித்துக்காட்டுபவை.



# 17. நாணற்காடு

நான் நின்றுகொண்டிருந்த இடம் ஆற்றின் கீழைக்கரை. அதற்கும் சற்றுக் கிழக்கே ஒரு நாணற்காடு. காட்டில் புகுந்துவந்த காற்று தமிழ்ப்பாட்டில் நனைந்த பரிசைத் தந்தது. அதன் இசை என் உணர்வைத் தாக்கி உள்ளத்தைப் பிழிந்தெடுத்தது. என்ன மாயம் என்றே எனக்குப் புரியவில்லை. இருள் சிறிது சிறிதாக மறைந்துகொண்டு வந்தது. திடீரென வெடித்துவந்த காற்று என்னைத் தூக்கியடித்தது.

என்ன ஆயிற்று , என் நினைவு எங்கே போயிற்று? சற்றைக்கெல்லாம் நினைவு மீண்டது. ஏதோ ஒரு புதிய ஒளி என்னை ஆண்டது. நாணற்காட்டின் மத்தியிலே இருந்தேன். நாணற்புல்லின் மேலே திரண்டிருந்த பனித்துளி ஒவ்வொன்றினின்றும் ஒரு சூரியன் சிரித்துக்கொண்டிருந்தான். ஆற்றின் மேல்கரையினின்றும் மேல்காற்று வீசியது. நாணற்பூக்கள் இலக்கிய மலர்களாகக் காட்சியளித்தன. நான் புதுப்பிக்கப் பெற்றேன். புது மெருகு ஏறியது. இருள் கரைந்தது. அந்த நாணற்காடே காவிய அரங்காக மாறியது. நாணற்பூக்கள் காற்றிலே பறந்த போது வெள்ளைப் பறவைகள் பறப்பன போலிருந்தன.

புதிய புதிய அனுபவங்கள் கொள்ளக் கிடைத்தன.

**காவியச் சோலை**

கன்னலாக , காதலாகக் காலன் படையாகப் பெண்ணொருத்தி தோன்றினாள். அழகி ஊர்வசி நடம் பயின்றாள். நிலவு விஞ்ஞானம் பேசியது. மூன்று மறுக்களைத் தாங்கி சிவன் சிலைவடிவில் எதிரே நின்றான். பாம்புப்பிடாரன் மகுடி ஊதினான். வெயிலில் சுருண்ட நாகம் ஆடியதா இல்லை வாடியதா என்று தெரியாத சோகம் இழைந்தது. காற்றைத் தடுக்காத கண்ணாத்தா ஊஞ்சல் ஆடினாள். பரதேசி பாடினான். எண்ணெய் வற்றிய விளக்கிலே தீச்சுடர் படர்ந்து எரிந்தது. பெருமாள் கோவில் புளியோதரையிலே ஒரு புனிதம் விரிந்தது.

கோபுர வாசல் வழியே காற்று வீசியது. விளக்கைச் சுற்றி விட்டில் பேசியது. இன்னும் இன்னும் எத்தனை காட்சிகள்! பார்த்துப் பார்த்துப் பரவசமுற்றேன். கேட்டுக் கேட்டுக் கிறுகிறுத்தேன். இதுவரை நாணற்காடாக, காவியச் சோலையாக நான் குறிப்பிட்டது எனது குருநாதர் பேராசிரியர் அ.சீ.ரா அவர்களைத்தான்.

**கோஹினூர் வைரம்**

அவருடைய உள்ளம் கவிதை உள்ளம். தமிழ் அமுதைப் பருகிய உள்ளம். ஆங்கிலப் பேராசிரியராக இருந்த அவர் ஒருமுறை சொன்னார்.

" ஆங்கிலம் என் வயிற்றுக்கு, தமிழ் என் நெஞ்சுக்கு." ஆம் வயிற்றுக்குத் தீனிபோட்டு நெஞ்சுக்கு நிமிர்வளித்தார்.

அவர் இலக்கியத்திலே சமயத்தைக் கண்டார். சமயத்திலே இலக்கியத்தைக் கண்டார். அவர் ஒரு பட்டைதீட்டப் பட்ட வைரம். அவ்வைரத்தின் ஒரு பட்டையிலிருந்து தமிழ் ஒளி வீசும்.. இன்னொரு பட்டையிலிருந்து ஷேக்ஸ்பியர் ஒளிருவார். மற்றொன்று கவிதை பாடும். வேறொன்று மேடையிலே வேள்விசெய்யும்.

இலக்கிய மேடை, பட்டிமண்டபம், கவியரங்கம், விவாத மேடை , ஆங்கில ஆய்வு, தமிழ் ரசனை, இசை அலசல், ஈர்க்கும் உரையாடல், சமயச் சொற்பொழிவு என்று அவருக்குத்தான் எத்தனை முகங்கள். எல்லாம் ஒளியுமிழ அவர் ஒரு கோஹினூர் வைரமாகத் திகழ்ந்தார். தமிழரசி அதைத் தலையிலே சூடிக்கொண்டாள்.

**எது கவிதை?**

கவிதை என்பது வெறும் சொற்களின் குவையல்ல. எண்ணம், கற்பனை, சுயானுபவம், தன்னைச் சுற்றி நிகழ்கின்றவற்றைக் கூர்ந்து நோக்கி அவற்றின் பாதிப்பால் வெளிப்படும் மெய்ப்பாடு,

மேல்நோக்கு, சொல்லாட்சி, காட்சிவியப்பு, எல்லாவற்றுக்கும் மேலாக ஒரு அழகான போகம்.

பேராசிரியர் சொல்கிறார்:

"எண்ணத்தேரில் ஏறி உளம்
எங்கும் திரிந்து, நாளெல்லாம்
மண்ணில் மனிதர் உறுகின்ற
மறுக்கம் முழுதும் தேர்ந்தறிவு
விண்ணை அளந்து, விஞ்சுமெழில்
வியப்பைச் சொல்லில் வடிவாக்கிக்
கண்ணின் முன்னே தருவதுவே
கவிதை என்னும் பெருவிஞ்சை.

**கவிதை பிறந்த கதை**

நாணலின் கவிதை எப்படிப் பிறந்தது? கேட்போமா?

"ஒரு பங்குனி நண்பகல், வெயிலாவது வெயில். வெயில் குழம்பிய ஒரு முனையைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அப்போது மேற்குத் தெருவிலிருந்து என் தெருவில் நுழைந்தான் வயதான பாம்புப் பிடாரன் ஒருவன். தலையிலே முண்டாசு, இடையிலே கோவணம். கக்கத்திலே பாம்புப்பெட்டி, வலது கையிலே மகுடி,. என்னைப் பார்த்து விரைந்து வந்து அந்தக் கிழவன் என் வீட்டு வாசலில் தன்கடையை விரித்தான். பெட்டியைத் திறந்து பாம்பை எடுத்து வெயிலில் எறிந்தான். கீழே குந்திய வண்ணம் மகுடியிலே விசித்திரமான சந்தங்களில் நுண்ணிய ஒலிகளை எழுப்பினான். பாம்பு ஆடவில்லை. தரைவெப்பம் தாங்காமல் என்வீட்டு முன்னிருந்த சாண் நிழலில் ஒண்டியது. மேலே இருந்து பார்க்கிற 'எசமானு'க்கு பாம்பு தெரிய வேண்டுமே! அதற்காகப் பாம்பை எடுத்துத் தெரு அனலில் எறிந்தான் பிடாரன். அவன் மகுடியில் ஒலி மாயங்கள் விம்மின. என் நெஞ்சை ஏதோ பிசைந்தது. பாம்பின் ஊமைத் துயரம் என்னை என்னவோ செய்தது.

ஓரணாவைப் பெற்றுக்கொண்டு பிடாரன் போனான். ஆனால் என் நெஞ்சு கனத்ததே அந்தப் பாரம் இறங்கவில்லை.

பிடாரனுடைய மகுடி விளைத்த மயக்கம், அதுவும் தணியவில்லை. இந்த மகுடி என்ன சொல்கிறது என்ற வினா என்னை உறுத்தியது. மெல்லப் பாடல் ஒன்று தலை தூக்கியது.

"பாம்புப் பிடாரன் ஊதிய குழலில்
பதைத்துத் துடிக்கும் குரலெதுவோ
சாம்பற் காடும் தாழை மடலும்
சண்பக மணமும் மறந்திசையில்
கூம்பிய பேதைமை கூட்டிய நெறியிற்
குறுகிக் குடத்தில் அடைந்து மனம்
தேம்பி மயங்கும் பாம்பின் குரலா
திகைத்திது காணும் என்குரலா?

**சாவா வாழ்வா?**

"இப்படி அவ்வப்போது தோன்றும் மனச் சலனங்களே என் பாடல்களுக்குத் தாயும் தந்தையும் ஆகும். சாவைப் பற்றி முதலில் எழுதினேன்.அப்போது சாவைப் பற்றி எனக்கொன்றும் தெரியாது. பிறகு வாழ்வைப் பற்றி எழுத முயன்றேன். அதைப்பற்றியாவது துல்லியமாகத் தெரியுமா? அதுவும் இல்லை. ஆனால் இந்த மயக்கில்தானே, வானும் ,மண்ணும் வாழ்வும், சாவும் , மனித உள்ளமும் பின்னுகிற இந்த மயக்கில்தானே- அது எது, திகைப்பா, வியப்பா, பிரமிப்பா, ஆசையா, அவலமா, அழகா, சத்தியமா, யாரால் சொல்ல முடியும்? அது எதுவாக இருந்தாலும் அந்த ஒன்றில்தானே - கவிதை பிறக்கிறது." என்கிறார்..

உண்மைதானே!.. கவிதை என்ற மாயத்துக்கு வேறென்ன பெயர் சொல்வது?

நாணற்புதரில் அவர் முதல் கவிதை எழுந்த காரணத்தால் 'நாணல்' என்று பெயர் வைத்துக்கொண்டார்.

**வெள்ளைப்பறவை**

"வெள்ளைப் பறவை" என்ற அவரது கவிதை நூலுக்கு 1968ம் ஆண்டில் சாகித்ய அகாதமிப் பரிசு கிடைத்தது. முதன்முதல் கவிதைக்கு ,தமிழில் , சாகித்ய அகாதமிப் பரிசு அந்த நூலுக்குத்தான். அது ஒரு கவிதைக் களஞ்சியம். தத்துவமா, காதலா, சமுதாய உணர்வா, அழகா, ஞானமா, பரிவா, இவையெல்லாம் கடந்த ஏதோ ஒன்றா, எல்லாம் அங்குக் கவிதை மின்னலிடக் காண்கிறோம். அதில்தான் எத்தனை புதுவித யாப்புகள். .. உத்திகள்.

**கடல்நாய்**

அங்கே கடல் ஒரு நாயாகக் குரைக்கும்.
"வெட்டி இருள்வாலைக் கொட்டி முழக்கிவான்
வெற்றுடலைக் குதறும்-வாய்
விட்டு நுரைசிதறும்
ஒட்டிப் புயல் நிசிக் காற்றின் பிடரியை
ஓடிப் பிடித்துலைக்கும்-திசை
கோடி விழக் குலைக்கும் -

**கண்கடல்கட்டி இழுக்குதடா**

அந்தக் கடலிலே , கட்டுமரத்திலே செல்கிறான் ஒருவன். மண்ணைப் பார்க்கிறான். அங்கே அவன் நிற்கிறான்

"மண்ணின் பசுமை இனிக்குதடா , புன்னை
மாமலர்ச் சோலை மயக்குதடா
கண்ணியிலே கயல்கட்டும் நமையொரு
கண்கயல் கட்டி இழுக்குதடா!"

இந்தவாழ்வில்தான் எத்தனை இன்பங்கள்! அதோபார் அதோ ஆடுகிறாளே ,அவளைப் பார்.

"கன்னங் கரிய முகக்குளத்தில்- நீண்ட
கார்விழி வாளை கறங்கிடவே
மன்னப் பெரிய முலைக்குவட்டில்-சேலை
மாட்டி வளைத்துச் சரிந்திடவே
சேற்றில் குனிந்துகால் முள்ளெடுத்தே என்றன்
சிந்தையில் குத்திச் சிரித்திடுவாள்
காற்றினைப் போலவென் கையிற்சிக்காமலே
காட்டில் மறைகுவள் கண்ணாத்தா!"

**பெண்படைத்தான்**

ஒஹோ, அந்த அழகு அத்தனை இனிமையா? பின்னென்ன, பெண்ணென்றால் சாதாரணமா? பெண்ணைப்படைப்பதற்கு எடுத்துவைத்த மண்ணைத் தொலைத்துவிட்ட பிரமன் என்ன செய்தான் தெரியுமா?

"சின்ன முயலின் திகைப்பினை அச்சத்தை,
செந்தளிர் ஒட்டிக் குழைவதனை
மின்னும் கயலின் துடிதுடிப்பை, வண்டின்
மீறிடும் வேட்கைக் கருமுயக்கை
தேனின் இனிமையை,தேளின் கொடுக்கினை
செங்கழுநீர் இதழ்த் தன்மையினை
வானம் நிரம்பி வழிந்திடக் கண்ணீரை
வாரிச் சொரிந்திடும் கார்முகிலை
என்னென்னமோ பொருள் சேர்த்துவைத்தான்-ஒன்றாய்
இங்கிவை பெண்ணென் றுலாவவிட்டான்
கன்னல் பிறந்தது, காதல் பிறந்தது
காலன் படையும் பிறந்ததன்றே!

விந்தையாக இருக்கிறதா? பெண்ணின் அழகு மட்டுந்தானா இன்பம்? அப்படி யார் சொன்னது? அதோபார், அந்த அருவியைப் பார், அந்த இயற்கைக் கொலுவைப்பார்!

**ஆடிவரும் அருவி**

"குத்தாலத்து மலையின் மேலொரு
குறுணி மேகம் கொட்டுது
கோண மூங்கில் ஒடம்பை வளைச்சுக்
கும்மி பாடி வெட்டுது
சித்தாந்தங்கரைத் தோப்பில் அந்தச்
சிறுக்கி வந்து பிலுக்கிறா
சின்ன முல்லைச் சிரிப்பில் என்றன்
சிந்தை தூக்கிக் குலுக்குறா!



அருவி நெளிந்து நெளிந்து விழுவது போன்ற நடையில் கவிதை நடக்கிறது.

**தமிழுக்கு யோகம்**

பேராசிரியர் அ.சீ.ராவின் பொதிகை என்ற கவிதையைப் படித்துவிட்டு டி .கே சி அவர்கள் மகிழ்ச்சியில் திளைத்து தமிழுக்கு யோகம் வந்துவிட்டது என்றார். அவர் எழுதினார்:

'தமிழுக்கு யோகம் வந்துவிட்டது. 'பொதிகை' மாதிரி ஒரு பாட்டுக்கிடைத்தால் ஒரு புதையல் கிடைத்த கணக்குத்தானே!. கவி என்பது அவ்வளவு சாதாரணமாகப் பிறந்தாவிடும்? தங்களுக்கு எப்படியோ கைவந்துவிட்டது"

**குத்துக்கு மறுகுந்து**

பாரதியினுடைய தேசபக்திப் பாடல்கள் நெருப்பாய்ப் பொங்கி, அவன் வாழ்ந்த காலத்திலும் சரி, அவனுக்குப்

பிறகும்சரி, மற்றக் கவிஞர்களின் தேசபக்திப் பாடல்களை எடுபடாமல் செய்து விட்டன. அவற்றிற்கு அவசியமில்லாமல் அவனது பாடல்களே ஆலமரமாகப் பரந்து விரிந்து கிடக்கின்றன.

ஆனால் சுதந்திரம் பெற்ற பிறகு நமது நாட்டைச் சீனன் தாக்கியபோது பாரதி பாடல்களில் பழகிய பேராசிரியர் கொதித்தெழுந்தார். அன்றைய நிலையில் மக்களைத் தட்டி எழுப்பத் தினமணி நாளேட்டில் அவரது கவிதைகள் அன்றாடம் வெளிவந்தன, வ.உ.சி. கல்லூரிக்கு முதலமைச்சர் காமராஜர் வந்தபோது வாசித்த கவிதை.

"குத்துக்கு மறுகுத்து, குண்டர் வீசும்
குண்டுக்கு மறுகுண்டு, கொள்ளை ஆசைப்
பித்துக்குப் பீரங்கி, பிணமே தின்னும்
பேய்களுக்குச் சிதையும் அவர் சிதையே தீனி
தித்திக்கப் பசப்பிப்பொய்ப் பஞ்ச சீலத்
தில்லுமுல்லு பேசியவாய் கிழிய, வீரர்
கத்திக்கூர் முனையினிலே பாடம், எங்கள்
கடவுள்மீ தாணை தாய் நாட்டைக் காப்போம்"

சீன யுத்தத்தின் போது , பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் என்ற தத்துவ ஞானி "இந்தியா சீனாவோடு ஒத்துப்போக வேண்டும்"என்று ஆக்கிரமிப்புச் செய்த சீனாவைக் கண்டிக்காமல் இந்தியாவுக்கு அறிவுரை புகட்டினார். பெர்ட்ரண்ட் ரஸ்ஸலிடம் பெருமதிப்பு வைத்திருந்த பேராசிரியர் அவரைக் கடுமையாகச் சாடிக் கவிதை எழுதினார்

"ஐயா ரஸ்ஸல் அறிவாளி,
அகில உலகைக் காப்பவனே
துய்ய மனத்தாய், சீனர்க்குள்
தூய்மை புகட்டு, பாரதத்தின்

கையைக்கட்டிப் பேயாடும்
காட்டுக் குள்ளே எறியாதே
உய்யும் உலகம், எம்நாட்டின்
உரிமை வென்றால், மறவாதே!

ஊனம் விளைக்க ஊளையிடும்
ஓநாய் விழுங்கி வரும்வரையில்
சீனம் போரை விடுத்துத் தன்
சிறுமை உணர்ந்து செலும்வரையில்
மோனம் இமய மலைமுகட்டில்
முன்போல் நிலவும் நாள் வரையில்
வானம் இடிந்து வீழ்ந்திடினும்
வணங்க மாட்டோம் வென்றிடுவோம்.

என்ன எழுச்சி, என்ன வேகம், அமைதி போர்க்கொடி தூக்கியது போலில்லை?

இதுவரை நாம் பார்த்தவை வெள்ளைப் பறவை என்ற அற்புதக் கவிதைத் தொகுதியின் ஒருசில வீச்சுகள்.

பேராசிரியர் அந்தக்கவிதைத் தொகுதியின் முத்தாய்ப்பாகச் சொல்வது

"யாரும் இதனைக் கவிஞனென
ஏற்கா விட்டால் போகட்டும்
பாரின் முனையில் ஒண்டிப்பின்
பட்டுப்போகும் கோரையிது
வார மாகத் தன்னுளத்தை
வடிக்கத் துடிக்கும் என்பதனை
ஆர அறிவான் முத்றகவியாம்
ஆதி பகவன், அது போதும்.!

# 18. அறிஞர்கள் கூடும் ஆலயம்

பேராசிரியர் வீடு அறிஞர்கள் கூடும் ஆலயம் என்று சொன்னால் மிகையாகாது. அவர் கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்ற பிறகு வசித்த இடம் "மிதிலா" "ஸ்ரீ ராம் நகர்" தூத்துக்குடி அவர் பெயருக்குப் பொருத்தமாக ஊரும் அமைந்தது. அந்தக் காலத்தில் யாரையாவது ஆற்றுப்படுத்த வேண்டுமென்றால் "இந்தத் தெருவழியாகச் சென்றால் ,கிளிகள் வேதம் ஓதிக்கொண்டிருக்கும். அது மறையவர்கள் வாழ்கிற தெரு. அதைத்தாண்டிச் சென்றால் நாவலோ நாவல் என்ற ஒலி கேட்கும். அங்கே சமய விவாதம் நடைபெறும் " என்று சொல்வார்கள். அ.சீ. ரா அவர்களது வீட்டுக்கு யாரையாவது ஆற்றுப்படுத்த வேண்டுமென்றால், " அவர் இருக்கும் தெருவில் எந்த வீட்டில் இலக்கியப் பேச்சுக் கேட்கிறதோ, எங்கே கவிதை ஒலிக்கிறதோ, எங்கே கம்பன், பாரதி என்ற பெயர்கள் அடிபடுகிறதோ அதுதான் அவரது வீடு என்று தெரிந்து கொள்ளலாம்" என்று சொல்லி வழிகாட்டலாம்.

**புலவர் சந்திப்பு**

வ.உ.சி. கல்லூரி வளாகத்தில் இருந்த அவரது வீட்டில் நான் தங்கியிருந்த போது பல புலவர்களைச் சந்தித்திருக்கிறேன். பல அறிஞர்களோடு அளவளாவியிருக்கிறேன். பாரதியாரின் மாமா சாம்பசிவம் ஐயர் அவர்களை அவர் வீட்டில் சந்தித்திருக்கிறேன். சிலேடைப்புலி பிச்சுக்கவிராயரின் உறவினர் அம்பிகாபதி பாரதி அவர்கள் ஒருமுறை அவர் வீட்டிற்கு வந்திருந்தார். பேராசிரியர் என்னை அழைத்து,

"இராமசாமி, இவர் பரம்பரைப் புலவர்கள் வாழும் வேம்பத்தூரைச் சேர்ந்தவர். பெரிய வித்துவான். பெயர் அம்பிகாபதி பாரதி. அவரை நன்கு கவனித்துக்கொள்" என்றார். பிறகு அம்பிகாபதி பாரதியிடம் "இவனும் கவிஞன். நன்றாகக் கவிதை எழுதுவான்' என்றார்

அப்பொழுது எனக்கு வயது 20 தான். அம்பிகாபதி பாரதிக்கு 60 வயது. என்னைப் பார்த்து, 'இராமசாமி, இதுவரை வெளிவராத பாடல் ஒன்றை உனக்குச் சொல்லுகிறேன். எங்கள் ஊருக்குக் காளமேகம் வந்தார். எங்கள் ஊரைச் சேர்ந்தவர்கள்

எல்லோரும் புலவர்கள் ஆகையால் அவரை மடக்க வேண்டும் என்று எண்ணினார்கள். அவரைப் பூரணகும்ப மரியாதையுடன் அழைத்துச் செல்லும் போது வழியிலே கண்டங்கத்திரிச் செடி கொத்துக்கொத்தாய்க் காய்த்திருந்தது. அதைப் பார்த்த ஒருவர் ,காளமேகத்தைப் பார்த்து

"கண்டங்கத்தரிக்கொத்துக்காய்." இதை ஈற்றடியாக வைத்துப் பின்முடுகு வெண்பாப் பாடுங்கள். என்றார். சற்றும் தாமதிக்காமல் காளமேகம்

" விரவு சிறுகுயிலே, வெண்மதியே, மாரன்

வரவு தனித்திருக்க மாட்டாள்- இரவதனில்

கண்டங்கத்தரிக்கொத்துக் காயங்கம் தரிக்கப்பின்

கண்டங்கத்தரிக்கொத்துக் காய்" என்று பாடினார். இந்தப்பாடல் இன்னும் வாய்மொழியாகத்தான் இருக்கிறது. என்றார். நான் அதைக் குறித்துவைத்துக்கொண்டேன்.

பிறகு என்னை வாழ்த்தி ஒரு வெண்பா எழுதிக்கொடுத்தார். பிறகு என்னைப் பார்த்து

"இராமசாமி, கவிஞர்களுக்கு மூப்புக் கிடையாது. எனக்கு அடிக்கடி உடம்பு படுத்துகிறது.

எனவே "நான் தெம்பாக இருக்க வேண்டும் என்று எனக்கு ஒரு வாழ்த்து எழுதிக்கொடு" என்றார். அப்பொழுது அவருக்கு நான் எழுதிக்கொடுத்த வெண்பா இன்னும் நினைவிருக்கிறது

"கம்பனது புத்திரனும் கற்பனைசால் பாரதியும்

நும்பெயரில் வந்து நுழைந்தனரோ- அம்புவியில்

எம்பெருமான் கந்தனது இன்னருளால் நீர்மிகவும்

தெம்புடனே வாழி தினம்."

**தாம்பூல சந்நியாசி**

பேராசிரியர் வீட்டிற்கு சந்நியாசி ஒருவர் வருவார். அவர் சந்நியாசம் வாங்குவதற்கு முன்னரே பேராசிரியருக்குப் பழக்கம்.

அவர் வந்து பேராசிரியர் வீட்டில் சிலநாட்கள் தங்குவார். அவர் போகும் போது பேராசிரியர் அவருக்குப் பணம் கொடுத்து அனுப்புவார்.

ஒருமுறை அவர் வந்திருந்த போது அவர் வெற்றிலைபாக்குப் போடுவதை பேராசிரியரின் மனைவி பார்த்தார். சந்நியாசி ஆனாலும் அவரை “மொட்டை” என்றுதான் அம்மையார் அழைப்பார். பேராசிரியரிடம் சென்று” மொட்டை சந்நியாசி என்கிறார். ஆனால் வெற்றிலை பாக்குப் போடுகிறார்”என்றார்.

“இராஜம். இதெல்லாம் எனக்குத் தெரியும். நான் அவரை எதனால் மதிக்கிறேன் தெரியுமா? ஏதோ ஒரு கணத்தில் இந்த வாழ்க்கையைத் துச்சமாக உதறும் வைராக்யம் வந்ததல்லவா?. அந்த வைராக்யம் வந்த கணத்திற்காகத் தான் அவரை மதிக்கிறேன்” என்றார் பேராசிரியர்.

**வீரசைவர்**

ஒரு சமயம் பழுத்த வீரசைவர் ஒருவர் அவரது இல்லத்துக்கு வந்தார். அவர் கையோடு ஒரு பெட்டி கொண்டு வந்தார். அதில் அன்றாட பூஜைக்குரிய இறை மூர்த்தங்கள் இருந்தன.

அவர் தினமும் சிவபூஜை செய்பவர். பேராசிரியர் வீட்டில் அவரது மாமியார் இருந்தார். அவர் வைணவத்தில் ஊறியவர். ஆனாலும் அடியவரின் பூஜைக்கு எந்த இடர்ப்பாடும் நேரக் கூடாதென்றும் அவருக்கு வேண்டிய சகாயம் அனைத்தும் செய்ய வேண்டும் என்றும் பேராசிரியர் உத்தரவிட்டார். “சைவர்கள் வீட்டில்கூட, .ஏன், எனது வீட்டில் கூட என்னை இந்த அளவுக்கு யாரும் கவனித்துக்கொண்டதில்லை” என்றார் அந்த அடியவர்.

**அறிஞர் குழாம்**



பேராசிரியர் தெ.பொ.மீ அவர்கள் மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தரான பிறகு அடிக்கடி பேராசிரியரின் வீட்டுக்கு வருவதுண்டு. பல்கலைக் கழக நிர்வாகம்

பற்றியும் , கல்வி முறைகள் பற்றியும் அவர்கள் கருத்துப் பரிமாறிக்கொள்வதுண்டு.

அரியக்குடி இராமானுஜம் அய்யங்கார், பாரதியாரின் இரண்டாவது மகள் சகுந்தலா பாரதி, அறிஞர் பாஸ்கரத்தொண்டைமான் ,கவிஞர் துறைவன், தமிழறிஞர் நா. கனகராஜையர், தேசபக்தர் கோமதிசங்கர தீக்ஷிதர் போன்ற பல பெரியவர்களை அவரது இல்லத்தில் சந்தித்திருக்கிறேன்.

அவருடைய வீட்டில் பெரிய நூலகம் உண்டு. அந்நூலகத்தில் உள்ள நூல்களைப் படித்துத்தான் சங்க இலக்கியங்களையும், மேல்நாட்டு இலக்கியங்களையும் தெரிந்துகொண்டேன்.

**தானும் பத்தியம்**

பேராசிரியரின் மனைவிக்கு உடல் நலம் குன்றி இருந்த சமயத்தில் அவர் உப்புப்போட்டுச் சாப்பிடக்கூடாது என்று டாக்டர் சொல்லிவிட்டார். ஆனால் மாமி உப்புப்போட்டுதான் சாப்பிடுவேன் என அடம்பிடித்தார். தனது மனைவியின் நோய் குணமாகும் வரை தானும் உப்புபோட்டுச் சாப்பிடப்போவதில்லை என்றார் பேராசிரியர். அப்படியே பத்திய காலம் முழுவதும் உப்புப்போட்டுச் சாப்பிடாமல் இருந்தார்.

**ராமனுக்கு எதிரான தீர்ப்பு**

திருச்சி வானொலி நிலையத்தில் ஒரு பட்டிமண்டபம். அதற்குப் பேராசிரியர் அ.சீ.ரா தான் தலைமை. பேராசிரியர் எப்பொழுதுமே பட்டிமண்டப வாதங்களின் அடிப்படையில்தான் தீர்ப்புச் சொல்வார். அன்று விவாதத்தின் அடிப்படையில் காவிய நாயகன் இராமனுக்கு எதிராகத் தீர்ப்புச் சொல்ல நேரிட்டது. இது பேராசிரியர் மனத்தைப் பெரிதும் பாதித்தது. நிகழ்ச்சி முடிந்ததும் திருச்சியில் தனது தங்கை மகள் வீட்டிற்குச் சென்றார். மருமகளிடம் அன்று வானொலி நிலையத்தில் வழங்கிய தீர்ப்பைப் பற்றிச் சொல்லி

உடனடியாக ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யும்படி சொன்னார். எத்தனைபேர் கூட்டத்துக்கு வருகிறார்கள் என்பது முக்கியமில்லை. ஆனால் உடனே ஏற்பாடு செய்தாகவேண்டும்" என்றார். அதன் படி திருச்சி கல்குழி ஆஞ்சநேயர் கோவிலில் ஒரு சிறு கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. அந்தக் கூட்டத்தில் இராமபிரானு டைய கல்யாண குணங்களை யெல்லாம் பற்றி மிக உருக்க மாகப் பேசினார். அப்படிப் பேசிய பிறகுதான் அவரது மனம் சமாதானம் அடைந்தது.

**இளைஞர்க்கு ஆதரவு**

1954ல் தூத்துக்குடித் தமிழ் இலக்கியக் கழகத்தைச் சார்ந்த இளைஞர்கள் சுப்பையா வீத்யாலயாவில் ஒரு கவியரங்கம் நடத்தினார்கள். அதற்கு ஒரு தமிழ்ப்பேராசிரியரைத் தலைமை ஏற்குமாறு அழைத்தனர்,. "பெரியகூட்டங்களில் தான் கலந்துகொள்வேன்., இளைஞர்கள் நடத்தும் கூட்டங்களில் கலந்து கொள்வது தனது பெருமைக்குக் குறைவு" என்று கூறிவிட்டார் அவர். தயங்கித் தயங்கி பேராசிரியர் அ,சீ.ரா அவர்களை அணுகினர். அவருக்குத்தான் இளைஞர்கள் என்றால் பிடிக்குமே!. அதுவும் இளைஞர்கள் இலக்கியத்தில் ஆர்வம் காட்டுகிறார்கள் என்றால் அவர் மிகவும் மகிழ்வார். எனவே கவியரங்கிற்குத் தலைமை ஏற்க ஒத்துக்கொண்டார். அந்தக் கவியரங்கில்தான் அவரது புகழ்பெற்ற கவிதை "நிலவும் விஞ்ஞானியும்"படிக்கப்பட்டது. அது பின்னால் கலைமகளில் வெளிவந்தது. கவிமாமணி தமிழழகன் அந்த இலக்கியக் கழகத்தில் முக்கிய பொறுப்பு வகித்தார். நிகழ்ச்சி முடிந்ததும் பேராசிரியரவரிடம் சென்று "கூட்டத்தின் செலவுக்கு என்ன செய்தீர்கள்? பணம் ஏதாவது வேண்டுமா? " என்று கேட்டாராம். பல இலக்கியச் சங்கக்களுக்குப் பேராசிரியர் பணத்தினாலும் வேறுவகையிலும் உதவியிருக்கிறார்.

பேராசிரியர் பம்பாய்த் தமிழ்ச்சங்கத்தில் 1956ம் ஆண்டு அக்டோபர் மாதம் 28,29,30 தேதிகளில் இலக்கியச் சொற்பொழிவாற்றினார்.

இவ்விழாவிற்கென்றே மாதுங்கா நப்பூ கார்டனில் பிரத்தியேகமாக அமைக்கப் பெற்ற விழாப்பந்தலில் அப்போதைய மஹாராஷ்ட்ர முதன் மந்திரி திரு மொரார்ஜி தேசாய் தலைமையில் விழா நடைபெற்றது.

பேசிய தலைப்புகள்

கம்பனும் ஷேக்ஸ்பியரும்

வடித்த சிந்தை

கவிதைத் தொழில்

தெய்வத் தமிழ்

மானும் கழுகும்



புது தில்லியில் நடந்த ஆசிய எழுத்தாளார் மாநாடு, கோலாலம்பூரில் நடந்த உலகத் தமிழ் மாநாடு, இந்தோனேஷியாவில் நடந்த சர்வதேச இராமாயண மாநாடு ஆகியவற்றுக்கு அ.சீ.ரா இந்தியப் பிரதிநிதியாக அனுப்பப்பட்டார். கல்வி, இலக்கியம் ஆகியவற்றுக்காக அவர் ஆற்றிய தொண்டைப் பாராட்டி 1967ம் ஆண்டில் போப் ஆண்டவர் தங்க மெடல் அளித்துக் கௌரவித்தார்.. தருமை ஆதீனம் செந்தமிழ்ச் செம்மல் என்ற பட்டமளித்தது. அகில இந்தியத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவராகப் பலஆண்டுகள் தொண்டாற்றினார்.

பாரதி மணிமண்டபத் திறப்புவிழாவின் போது பேராசிரியர் கல்கியோடு ஏற்பட்ட மனஸ்தாபத்தைப் பற்றி ஏற்கனவே

குறிப்பிட்டிருக்கிறோம். பேராசிரியர் கல்கியுடன் அறிமுகமான நிகழ்ச்சியைப் பற்றி கல்கியின் வரலாற்று நூலான "பொன்னியின் புதல்வரில்' திரு சுந்தா(இவர் அ.சீ.ரா வின் மாணவர் என்பது குறிப்பிடத்தக்கது) எழுதியிருக்கிறார்.

"பால சரஸ்வதியின் கலைச் சிறப்பை முதன்முதல் சென்னையில் கல்கி கண்டபோது உடனிருந்து அக்கலையின் நுட்பங்களை விளக்கிக் கூறினார். ஒரு கல்லூரி ஆசிரியர். அதே ஆங்கிலப் பேராசிரியரை முதன்முதலாகக் கல்கி, தமிழன்பர் மாநாட்டில் சந்தித்த போது, சில ஆங்கிலக் கவிதைகளைச் சொல்லச் செய்து, "பேஷ். பேஷ்" என்று ரசித்தார். அதற்குப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, ஜவஹர்லால் மணிவிழா மலருக்கென 'மோஹினித் தீவு" என்ற கதையை கல்கி எழுதிய போது அதை ஆங்கிலத்தில் ஆக்கித் தரும்படி அவரைக் கேட்டுக்கொண்டார். அந்தப் பேராசிரியர் அ. சீநிவாசராகவன். வட்டத்தொட்டிக்கு மதிப்பூட்டியவர்களில் ஒருவர்"

**அட, ராகவா**

பாரதிமணிமண்டபத் திறப்பின் போது நடந்த நிகழ்ச்சியைப் பற்றியும் அதில் சுந்தா குறிப்பிடுகிறார்.

"பாரதியாரின் மணிமண்டபத் திறப்புவிழாவைப் பற்றி மிகச் சிறப்பாகப் பல பத்திரிகைகள் எழுதியிருந்தன. ஆனால் குற்றங்குறைகளைச் சுட்டிக்காட்டிய கடிதங்கள் கட்டுரைகள் சிலவும் வெளியாயின. அவற்றில் ஒன்றைப் பேராசிரியர் அ. சீநிவாசராகவன் எழுதியிருந்தார். பாரதியாரின் குடும்பத்தார் விழாவில் தக்கபடி கவனிக்கப் படவில்லை என்பது குற்றச்சாட்டு. அந்த ஆவலாதி கடிதத்துக்கு "வெள்ளிமணி" 31-10-47 இதழில் அநாமதேயமாய் ஒரு மறுப்பு வெளியாயிற்று. "அட. ராகவா!' என்பது அதன் தலைப்பு. கோபமும் கேலியும் கலந்ததான அந்த மறுப்பை , சின்ன அண்ணாமலையோ, சாவியோ எழுதியிருக்கவேண்டும் என்று பலரும்

நினைத்தார்கள். ஆனால் கல்கியேதான் அதை எழுதியவர். ஆனாலும் சில குறைகள் நேர்ந்துவிட்டதை அவர் உணராமல் இல்லை. அதற்காக வருத்தப் படாமலும் இல்லை. அதற்குச் சான்றாக சகுந்தலா பாரதிக்கு அவர் எழுதிய கடிதம்.

"29-10-1947 பாரதி மண்டப விழாவின் போது ஜனக்கூட்ட மிகுதியினால் எதிர்பார்த்தபடி சிலகாரியங்களைச் செய்ய முடியவில்லை. ஒருவித துர்ச்சம்பவங்களும் இல்லாமல் விழாவை முடித்துவிடவேண்டும் என்று ராஜாஜி ரொம்பவும் அவசரப்பட்டார்கள். அவர்களுடைய கோபத்துக்கு நான் ஆளாக நேர்ந்தது. இதனால் , நான் எண்ணியிருந்தபடி தங்களையெல்லாம் சரியாகக் கவனித்து மரியாதைசெய்ய முடியாமல் போயிற்று. இந்தக் குறையை நிவர்த்தி செய்ய மற்றொரு சந்தர்ப்பம் கூடிய விரைவில் ஏற்படும் என்று நம்புகிறேன்"

அ.சீ.ரா எழுதிய குற்றச்சாட்டால் கல்கி கோபமுற்றாலும் அவரது தவறும் அவருக்குப் புரியாமலில்லை. அதை உணர்த்துகிற வேலையை அ.சீ.ரா வின் கடிதம் செய்தது.

கல்கி தன்னை இந்த அளவு தாக்கி எழுதவேண்டுமா என்று பேராசிரியர் அ.சீ.ராவுக்கும் முதலில் கோபம் உண்டாயிற்று.

கல்கியைப் பற்றிய தமது நினைவுகளை 1955 அக்டோபர் 11 ந்தேதி வானொலியிலிருந்து பேராசிரியர் ஒலி பரப்புகையில் அந்தச் சம்பவத்தைக் குறிப்பிட்டு

"கட்டிய வீட்டுக்குப் பழுது சொன்ன சென்னைப் புண்ணியவான்களில் நானும் ஒருவன். " என்று ஒப்புக்கொண்டார்.

இருவருக்கும் ஒருவர்மேல் ஒருவருக்குக் கோபம் இருந்தாலும் அதை விரைவில் மறந்து

மீண்டும் நன்பர்களாக விளங்கினர்.

அதைப்பற்றிப் பேராசிரியர் அந்த வானொலி உரையில் குறிப்பிடுகிறார்



"சில மாதங்களுக்குப் பிறகு "சிந்தனை' என்ற எனது பத்திரிகையில் வெளியான"எல்லையிலே" என்ற என் நாடகத்தையும் அந்தப் பத்திரிகையின் ஆண்டுமலரையும் புகழ்ந்து தமது பத்திரிகையில் , தலையங்கக் குறிப்பொன்று எழுதினார். பிறகு சில நாட்களுக்கெல்லாம் சென்னை கம்பர் கழகக் காரியதரிசியாக இருக்க வேண்டும் என்று அன்போடு வற்புறுத்தி எனக்குக் கடிதம் எழுதினார்."

**மணிவிழா**

தூத்துக்குடி வ.உ.சி கல்லூரி மைய அரங்கில் பேராசிரியர் அ.சீ.ராவின் மணி விழா1967ம் வருடம் ஆகஸ்டு மாதம் 3ந்தேதி நடை பெற்றது..மணிவிழா சமயம் அவரது சில புத்தகங்களும் மணிவிழா மலரும் வெளியிடப் பட்டன. ஒரு விளம்பரங்கூட இல்லாமல் வெளியிடப்பட்ட மலர் அது. பல பேரறிஞர்களின் ஆராய்ச்சிக் கட்டுரைகளும் அதில் வெளியிடப்பட்டன. அவ்விழாவில் பல பெரியவர்கள் கலந்து கொண்டனர் கி.வா.ஜ தலைமையில் ஒரு கவியரங்கம் நடைபெற்றது



பேராசிரியரின் இலக்கியத் தொண்டைப் பாராட்டி போப்பாண்டவர் அளித்த தங்கப்பதக்கத்தை தூத்துக்குடி பிஷப் அ.சீ.ரா வுக்கு வழங்கினார் அக் கவியரங்கத்தில் காரைக் குடி சா.கணேசன், கவிஞர்

திருலோக சீதாராம், திருமதி சௌந்தரா கைலாசம் , கவிஞர் மு. உலகநாதன், கவிஞர் அ. சகதீசன் ஆகியோருடன் நானும் கலந்து கொண்டேன். அன்று நான் கவியரங்கத்தில் கவிதையின் தொடக்கமாக அ.சீ.ராவுக்கு அஞ்சலியாகத் தொடங்கினேன்

"நீலவான் பார்த்து, கீழே
நிலத்தையும் பார்த்து, கொள்ளும்
கோலமும் இன்றிக் கொள்கை
குறிப்பெதும் இன்றி, எங்கோ
மூலையில் கிடந்த என்னை
முன்னிலை சேர்த்து வைத்த
சீலனைத் தொழுதே என்றன்
செயலினைத் தொடங்கு கின்றேன்

வந்துநான் நின்ற போது
வாழ்த்தினாய், வளமார் கல்வி
தந்தெனைக் காத்து நின்றாய்
தண்பெரும் தமிழைத் தந்தாய்
தந்தையாய் அமைந்து காத்தாய்
தலைநிமிர்ந் திருக்க வைத்தாய்
செந்தமிழ்ச் செம்ம லே என்
தெய்வமே, நின்தாள் போற்றி!

என்று படித்துக்கொண்டுவரும் போதே என்னால் கட்டுப்படுத்த முடியாமல் அழுகை பொங்கி வந்துவிட்டது. சிறிது நேரம் ஒன்றுமே படிக்கக்கூடவில்லை. பிறகு சமாளித்துக்கொண்டு படித்தேன். பேராசிரியரும் கண்கலங்கிவிட்டார். அன்று திடீரென பித்துக்குளி முருகதாஸ் மேடையில் தோன்றி மிக அற்புதமாகப் பாடினார். இரவு நிகழ்ச்சியில் சாத்தூர்

பிச்சுக்குட்டி சிலப்பதிகார வில்லிசை நிகழ்ச்சி நடத்தினார்.. அன்று பேராசிரியருக்கு ஒரு இலட்ச ரூபாய் பணமுடிப்பு அளிக்கப்பட்டது. அதை வாங்கி அப்படியே தமிழ் இலக்கிய வளர்ச்சிக்காக ஒரு டிரஸ்ட் அமைக்கும் படி அளித்துவிட்டார்.

**எனது திருமணம்**

பேராசிரியர் சென்னைக்கு வந்தால் சைதாப்பேட்டையில் உள்ள அவரது உறவினர் வீட்டில்தான் தங்குவது வழக்கம். அப்படி வந்திருந்த ஒரு சமயத்தில் அவரது உறவினர் பையனுக்குப் பாடம் சொல்வதற்காக பக்கத்துவீட்டிலிருந்து வந்த ஒரு ஆசிரியைப் பார்த்திருக்கிறார். அவரது உறவினர் அவரிடம்" இந்தப் பெண்ணை நமது இராமசாமிக்குப் பார்க்கலாம் என்று நினைக்கிறேன் " என்றாராம். பேராசிரியரைப் பார்க்க நான் சென்ற போது அவர் என்னிடம்,

" இரமணிக்குப் பாடம் சொல்லிக்கொடுக்கும் டீச்சர் பானுமதியைப் பார்த்திருக்கிறாயா?" என்றார்

"பார்த்திருக்கிறேன் " என்றேன்

"அவளை நீ கல்யாணம் செய்து கொள்கிறாயா?" என்றார்.

"நீங்கள் சொன்னால் மறுக்கவா போகிறேன்?" என்றேன். அவர் தேர்ந்தெடுத்த அந்தப்பெண்ணையே நான் திருமணம் செய்துகொண்டேன். மகிழ்ச்சியாக வாழ்கிறேன்.

திருமணத்திற்குப் பிறகு அந்த வீட்டிலேயே சிறிது காலம் குடித்தனம் இருந்தேன். ஒரு சிறு மனஸ்தாபத்தால் அந்த வீட்டை விட்டுச் செல்ல நேர்ந்தது

அதன் பிறகு சென்னைக்குப் பேராசிரியர் வரும்போது அவரை முன்புபோல் சந்திக்க முடியாமல் போயிற்று. ஏதாவது கூட்டத்தில் கலந்துகொள்ள வருகிறார் என்றால் அங்குச் சென்று சந்திப்பேன்.

பேராசிரியர் பணியிலிருந்து ஓய்வு பெற்ற பிறகும் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக்கொடுப்பதை அவர்

நிறுத்தவில்லை. ஆழ்வார்திருநகரிக்கு அடிக்கடி சென்று அங்குள்ள பாஞ்சராத்ர ஆகமப் படசாலையில் மாணவர்களுக்குப் பிரபந்தம் கற்றுக்கொடுத்தார்.

ஆழ்வார் திரு நகரியில் நடந்த மாறன் செந்தமிழ் மாநாட்டில் முக்கிய பங்கேற்றுச் சொற்பொழிவாற்றினார்.

**பெயரைக் காப்பாத்துரா**

1970ம் ஆண்டு எனக்குப் பையன் பிறந்தான். அவனுக்குக்கு அவரது பெயரைத்தான் வைத்திருக்கிறேன். அவனையும் தூக்கிக்கொண்டு அவரை ஒரு கூட்டத்தில் சந்தித்த போது அந்தக் குழந்தையைப் பார்த்து"டே, என் பெயரைக் காப்பத்துரா" என்றார்

**செல்லப்பிள்ளை சீநிவாசன்**

பேராசிரியரின் தம்பி மகன் சீநிவாசனை அவர் தத்துப் புத்திரனாக வளர்த்துவந்தார்.

சீநிவாசன் கோவையில் பொறியியல் படிப்புப் படித்தார். அதனால் பேராசிரியர் அடிக்கடி கோவை செல்ல நேரிட்டது. கோவையில் பல இலக்கிய நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள இது ஒரு வாய்ப்பாய் அமைந்தது. கோவையிலிருந்த மெர்க்குரி பதிப்பக உரிமையாளர் திரு கிருஷ்ணசாமி அவர்கள் பேராசிரியரின் பல புத்தகங்களை வெளியிட்டார்,... அங்கே நன்னெறிக்கழகத்தில் திருப்பாவை திருவெம்பாவை தொடர் சொற்பொழிவு நிகழ்த்தினார் பேராசிரியர். கம்பாராமயணத் தொடர் சொற்பொழிவு 30 நாட்கள் கோவையில் நிகழ்த்தியிருக்கிறார்.

கோவையில் தியாசாபிகல் சொஸைட்டியில் நடந்த பாரதி விழாவில் பேராசிரியர் அ.சீ.ரா அவர்கள் "எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி இருந்ததும் இந்நாடே" என்ற பாரதியின் பாடலைப் பற்றி ஒருமணி நேரத்துக்கும் மேல் நிகழ்த்திய சொற்பொழிவு இன்னும் நினைவில் நிற்கிறது" என்கிறார். கோவை நஞ்சுண்டன் அவர்கள் கோவையில் மாணவர் இலக்கியக் கழகத்தின் இடத்தில் அரச மரத்தடியில் அவர் நடத்திய கூட்டத்திற்கு திரு.கி.வா.ஜ அவர்களை அழைத்திருந்தார்.

அழைப்பிதழ் அச்சடித்துக் கொடுக்கப்பட்டுப் பலரும் நிகழ்சிக்கு வந்திருந்தனர். அ.சீ.ரா அவர்கள் கோவையில் அன்று இருக்கிறார் என்று கேள்விப்பட்டு அவரையும் பேச அழைத்திருக்கிறார். ஏற்கனவே அழைப்பு அச்சடிக்கப்பட்டு கி.வா.ஜ பெயர் மட்டும் அதில் இருக்கும் விஷயத்தை அவரிடம் சொல்லவில்லை. அ.சீ.ராவையும் கி. வா.ஜவையும் குதிரைவண்டியில் அழைத்துவந்தாராம். அன்று அ.சீ.ரா அவர்கள் விராதன் துதி பற்றி அருமையாகச் சொற்பொழிவாற்றினார். தற்செயலாக அழைப்பிதழ் அவர் கண்ணில் பட்டிருக்கிறது. அதில் அவர் பெயர் இல்லை . அதை வெளிக்காட்டிகொள்ளவில்லை. என்ன சொல்வாரோ என்று கவலைப் பட்ட திரு . நஞ்சுண்டனிடம் அ.சீ.ரா" கவலைப்படவேண்டாம். நன் அன்புக்குக் கட்டுப்பட்டவன். அழைப்பிதழில் பெயர் போட்டுத்தான் ஆகவேண்டுமென்பதில்லை. காரில்தான் வரவேண்டும் என்பதில்லை. குதிரைவண்டியிலும் வருவேன். அன்பு மட்டும் இருந்தால் போதும்" என்றாராம். சொல்லி நெகிழ்கிறார் திரு நஞ்சுண்டன்.

திரு.சீநிவாசனுக்கு 1967ம் ஆண்டு நவம்பர் 6ம் நாள் திருவனந்தபுரத்தில் திருமணம் நடந்தது. அங்கே பிரபலமாயிருந்த வக்கீல் கிருஷ்ணசாமி ஐயங்காரின் புதல்வி வசந்தாவை சீனிவாசன் மணந்தார்.



பாதுகாப்பு அரண்

திருமதி வசந்தா சீநிவாசன் இசையில் பட்டம் பெற்றவர். பேராசிரியரின் வீட்டுக்கு அவர் வந்தபோது இங்குள்ள சூழ்நிலை அவர் அதுவரை வாழ்ந்துவந்த சூழ்நிலையிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. கேரளாவில் வாழ்ந்ததனால் அவரது தமிழ் மலையாள மயமாயிருக்கும். பேராசிரியர் தனது மருமகளைத் தனதுசொந்தப் பெண்ணைப் போலப் பாதுகாத்தார். மொழிமாறுபாட்டினாலே ஏற்பட்ட குழப்பங்கள், புதிய

சூழ்நிலைத் தடுமாற்றம் இவையெல்லாம் வசந்தாவைப் பாதிக்கா வண்ணம் ஒரு பாதுகாப்பு வியூகமாக அவரிருந்தார்.

வசந்தா சீநிவாசனுக்குத் தானே பாடம் சொல்லி கொடுத்தார். கல்லூரியில் படிக்கவைத்து ஆங்கிலத்தில் முதுகலைப் பட்டம் பெற வைத்தார். அன்னம்மாள் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் விரிவுரையாளராகச் சேர்ந்து, பேராசிரியரானார் வசந்தா. அவரது முழு வளர்ச்சிக்கும் தாம் பொறுப்பேற்றுக்கொண்டு செயல்பட்டார் பேராசிரியர். திருமதி வசந்தா வாசலில் கோலம் போடுவதை ரசித்து ஊக்கப்படுத்தினார். அவர் இசைப் பயிற்சி பெறுவதற்காக ஆசிரியர்களை வீட்டுக்கே வரவழைத்துக் கற்றுக்கொடுத்தார். கச்சேரிகளில் பாடச்சொல்லி ஊக்கப்படுத்தினார். தானே அவர் பாடவேண்டிய பாடல்களைத் தேர்ந்தெடுத்து கச்சேரி சிறக்கும் வழிமுறைகளைக் கண்டார். ஆரஞ்சுப் பழத்தைத் தோலுரித்துச் சிறிதும் பிசிரின்றிக்கொடுத்தால் அந்தப்பழத்தின் அமைப்பையும் அதை உரித்துவைத்திருக்கும் அழகையும் கண்டு வியப்பாராம்.



# 19. அவர் அமரர்

1974 ம் வருடம் அக்டோபர் மாதம் பேராசிரியருக்குக் கவிதையிலேயே ஒரு கடிதம் எழுதினேன். அவருக்குக் கடிதம் எழுதாமல் பல ஆண்டுகள் இருந்துவிட்டதற்காக வருந்தி எழுதியிருந்தேன். எனது கருமாரி அந்தாதி கையெழுத்துப் பிரதியை அனுப்பி அதற்கு ஒரு வாழ்த்துப்பா கேட்டிருந்தேன். கடிதம் போய்ச் சேர்ந்த ஒருசில நாட்களிலேயே எனக்குக் கவிதையிலேயே கடிதம் எழுதியிருந்தார்.

அந்தக் கடிதம் இதோ:

அன்பார்ந்த இராமசாமிக்கு ஆசீர்வாதம். 9-10-1974

கருமாரி அந்தாதி கண்டேன் அடைந்தேன்
அருமைக் கவிதைதரும் இன்பம்- பெருமையுடன்
உன்னை மனமார வாழ்த்துகிறேன், நன்மகனே
என்றும் மகிழ்வோ டிரு.

அந்தாதி எங்கும் அழகுதமிழ் கொஞ்சுகிற
விந்தையே கண்டேன், வியந்தெழுமென் சிந்தையிலே
அன்னை கருமாரி ஆள வகுத்தாய் உன்
வண்ணச்சொல் வாழ்க வளர்ந்து

எத்தனையோ மாணவர்கள் வந்தார்கள் போனார்கள்
அத்தனை பேருமெனை எண்ணுவரோ- சித்தத்தில்
உன்னைப்போல் அன்பின் ஒளிவளர்ப்பார் யாருமில்லை
உன்றனுக்கு நீயே நிகர்

கடிதம் எழுதவில்லை என்றுனை நீயே
கடிகின்றாய் தேவையில்லை , நாளும் - கடிதம்
எழுதிக் குவிப்பதுவோ அன்பிற் கடையாளம்
பழுதில் உளமோ பகர்.

சென்னை வருவேனோ,செல்வ உனை நேரில்
என்றுநான் காணப் பெறுவேனோ - என்னக்
கனவில் அழுந்துமென் கண்முன்னே உன்னை
வனைந்ததுன் பாடல் மடல்.

அன்புடன்
அ.சீநிவாசராகவன்

இந்தக் கடிதம் கிடைத்ததும் நான் தூத்துக்குடி சென்று அவரைச் சந்தித்திருக்கவேண்டும்.

என் குருநாதர் இந்த உலகை விட்டுச் சென்றுவிடுவார் என்று நான் எண்ணிக்கூடப் பார்க்கவில்லை. அந்தாதிப் புத்தகத்தை அச்சடித்து எடுத்துக்கொண்டு அவரிடம் நேரில் கொண்டு கொடுக்கலாம் என்று எண்ணியிருந்தேன்.

**தள்ளிப்போட்டிருக்கலாமே**

"அவர் சாகித்ய அக்காதமிக்காக நம்மாழ்வார் பற்றிப் புத்தகம் எழுதினார். அதில் நம்மாழ்வார் பாடல்கள் பலவற்றை ஆங்கிலத்தில் மிக அற்புதமாக மொழிபெயர்த்திருக்கிறார். அவர் நம்மாழ்வார் பற்றி எழுதியதைப் பார்த்துவிட்டு வைணவ ஆச்சார்யர் ஒருவர் அவரிடம் சொன்னாராம்

"இராகவன், இந்தப் பணியை நீங்கள் இன்னும் சிறிது காலம் தள்ளிப் போட்டிருக்க வேண்டும். நம்மாழ்வார் பாடல்களில் முழுதும் தோய்ந்துவிட்டால் பிறகு இந்த உலகத்தில் நீண்டநாள் வாழப் பிடிக்காது" என்றாராம்.

"இனி இருந்து என்னதான் செய்யப்போகிறேன். நம்மாழ்வாரை எழுதிய பிறகு இந்தப் பேனா வேறொன்றை எழுதத்தான் வேண்டுமா? " என்றாராம் அ.சீ.ரா

. கருமாரிஅந்தாதி நூல்24-12-1974 அன்று வெளியிடப்பெற்றது.

**மருத்துவ மனையில் பேராசிரியர்**

பேராசிரியர் உடல்நலம் இன்றி மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருக்கிறார் என்ற செய்தி கிட்டியது. உடனே

அலுவலகத்தில் விடுப்பெடுத்துக்கொண்டு தூத்துக்குடி விரைந்தேன். நேராக மருத்துவ மனை சென்றேன். அவர் சுயநினைவின்றிக் கோமாவில் இருந்தார். நான் அவரை நேரில் பார்த்தேன். "உனை நேரில் என்றுநான் காணப் பெறுவேனோ?" என்று எழுதிய அவர் என்னை நேரில் காணக்கூடவில்லை . அந்தாதிப் புத்தகத்தை அவர் காலடியில் வைத்து வணங்கினேன். நாளுக்குநாள் அவர் உடல்நிலை சீர்கெட்டு வந்தது. அவருடைய தங்கை திருமதி கமலா, வளர்ப்பு மகன் சீனிவாசன், சீனிவாசனின் மனைவி டாக்டர் வசந்தா சீனிவாசன், ஆகியோர் மருத்துவ மனையில் இருந்தார்கள். திரு. ஏ.பி. சி வீரபாகு அவர்கள் சிறந்த மருத்துவ உதவி கிடைக்க ஏற்பாடு செய்ததோடு அடிக்கடி வந்து கவனித்துக்கொண்டார். அவரது பணியாளாக நெடுங்காலம் பணியாற்றி வந்த சுப்பையா அவரை உடனிருந்து கவனித்துக்கொண்டான்.

**அமரரானார்**

மூன்றுநாட்கள் நானுமங்கிருந்தேன். நாலாம்நாள் காலையிலே அதாவது 5-1-1975 அன்று அவரது உடல்நிலையில் சிறிது முன்னேற்றம் கண்டிருப்பதாகச் சொன்னார்கள். என்னுடைய ஊர் அங்கிருது 40 மைல் தொலைவில் இருப்பதால் ஊருக்குப் போய்விட்டு மாலையில் திரும்பி வந்துவிடுவதாகச் சொல்லிவிட்டுச் சென்றேன். பேருந்து நிலையத்தை நான் அடைந்த போது கயத்தாறுக்குச் செல்லுகிற பஸ் ஒரு நிமிடத்திற்கு முன்தான் சென்றதாகவும் அடுத்த பஸ் பிற்பகல் 2மணிக்குத்தான் என்றும் சொன்னார்கள். எனவே அருகிலிருந்த தெரிந்தவர்கள் வீட்டிற்குச் சென்றேன் . அங்குச் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் பேராசிரியர் மறைந்துவிட்டதாகச் செய்திவந்தது. பேருந்து கிடைக்காமல் ஏதோ ஒரு சக்தி என்னைத் தடை செய்திருக்கிறது என்பதை உணர்ந்தேன். நேராக அவரது வீட்டுக்குச் சென்றேன். அங்கே அதற்குள் பேராசிரியரின் பூத உடலைக்

கொண்டுவந்திருந்தனர். பத்திரிகைகளுக்கும் வானொலிக்கும் செய்தி தரப்பட்டது. அன்று மாலையே அவரது பூத உடல் நெல்லை தூத்துக்குடி சாலையிலுள்ள மயானத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டது. அங்கே திரு. ஏ பி சி வீரபாகு மிக உருக்கமாகப் பேசினார். நான் இரங்கல் கவிதை சொன்னேன்.

**இரங்கல் கூட்டம்**

மறுநாள் பத்திரிகைகள் அவரது மறைவுச் செய்தியைச் சுமந்து வந்தன. பெரிய இலக்கிய மேதையான அவரது மறைவை ஒரு பிரபல பத்திரிகை " முன்னாள் எம்.எல்.சி மரணம் ' என்று கொட்டை எழுத்தில் வெளியிட்டது. வானொலியில் பல பெரியவர்கள் இரங்கல் தெரிவித்தனர். இரண்டு நாட்கள் கழித்து வ.உ.சி கல்லூரி அரங்கில் பொது மக்களால் நினைவஞ்சலிக் கூட்டம் நடத்தப்பட்டது. அதில் நான் இரங்கல் கவிதை படித்தேன்.

அதில் ஒரு சிறு பகுதி இதோ:

சொல்லெலாம் கவிதைத் தேனில்
தோய்த்திடும் நாணல் எங்கே
கல்லெல்லாம் கனியும் வண்ணம்
கம்பனைத் தருவார் எங்கே
நல்லவர் என்றே யாரும்
நவின்றிடும் சான்றோன் எங்கே
கல்வியைப் புனிதம் செய்த
கண்ணியம் எங்கே எங்கே?

விண்ணவர் கவிதை வேண்டி
விரும்பியே அழைத்த போதும்
புண்ணியா எம்மை விட்டுப்
போகுதல் என்ன நீதி?

விண்ணுயர் நம்மாழ் வாரை
விரித்தது போதும் என்றே
எண்ணியோ எம்மை விட்டு,
ஏகினாய் கவிஞர் ஏறே!

அவைக்கெலாம் அழகு சேர்க்கும்
அ.சீ.ரா மறைய வில்லை
கவிஞர்கள் மறைவ தில்லை
காலத்தை வென்று நிற்பர்
கவிதையாய், கவிதைக் குள்ளே
கனிந்திடும் பொருளாய் என்றும்
நவையிலா எங்கள் ஆசான்
நாணலின் நாமம் வாழும்.!

ஆங்கிலத்திலும் தமிழிலும் மிகுந்த ஆற்றலோடு இலக்கியம் பேசுபவர்கள் எண்ணிக்கை இன்று வெகுவாகக் குறைந்து விட்டது. பேராசிரியர் அ.சீ.ரா அந்த வகையில் முடிசூடா மன்னராகத் திகழ்ந்தார்.

பேராசிரியர் அ.சீ.ரா கலாநிகேதன்



தான் மறைவதற்கு முன் தான் விட்டுச் சென்ற பணிகளைச் சீருற நிறைவேற்றும் வண்ணம் டாக்டர் வசந்தா சீநிவாசனைத் தயார்ப் படுத்தியிருந்தார் பேராசிரியர். சீநிவாசனின் திடீர் மரணம் திருமதி வசந்தாவை நிலைகுலையச் செய்தாலும் அதனின்றும் மீண்டு அ.சீ.ராவின் நினைவைப் போற்றும் பணியில் தீவிரமாக ஈடுபட்டுள்ளார். அ.சீரா. வாழ்ந்த காலத்தில் சங்கீத மும்மூர்த்தி களில் ஒருவரான முத்துசாமி தீக்ஷிதரின் கிருதிகளைப் பரப்புவதிலும் அவரது ஜயந்தியைக் கொண்டாடுவதிலும் ஆர்வம் காட்டினார். அவரது மறைவிற்குப் பின் திரு சீநிவாசன் வருடா

வருடம் அதைப் பெரும்விழாவாகவே கொண்டாடினார். சீநிவாசனின் மறைவிற்குப் பிறகு திருமதி வசந்தா அதைத் தொடர்ந்து கொண்டாடி வருவதோடு பேராசிரியரின் பெயரில் பேராசிரியர் அ.சீ.ரா கலாநிகேதன் என்ற அமைப்பை நிறுவி பேராசிரியருக்கு மிகவும் பிடித்தமான இசை, இலக்கியம், நாட்டியம் வளரப் பாடுபடுகிறார்.

**புத்தக வெளியீடு**



பேராசிரியரின் நூற்றாண்டான இவ்வாண்டில் (2004-2005) நீதியரசர் இரத்தினவேல் பாண்டியனவர்களின் தலைமையில் பேராசிரியர் அ.சீ.ரா நூற்றாண்டு விழாக்குழு அமைக்கப் பட்டுச் சிறப்பாகச் செயல் பட்டு வருகிறது கல்கத்தா மு. சீனிவாசன் அவர்கள் பேராசிரியர் அ.சீ.ராவின் நூல்களைத் தொகுத்துக் கொடுக்க அவற்றை ஏழு தொகுதிகளாக அல்லயன்ஸ் நிறுவனம் வெளியிட்டிருக்கிறது. அல்லயன்ஸ் சீனிவாசன் அவர்கள் நூல் வெளியீட்டிற்காக மிகப்பெரிய விழா எடுத்தார். அவ்விழாவில் பல பெரியவர்கள் கலந்து கொண்டார்கள். அப்பொழுது பிரபல எழுத்தாளர் ஜெயகாந்தன் அவர்கள் 'நாத்திகனாக இருந்த என்னை ஆத்திகனாக மாற்றியவர் பேராசிரியர். அ.சீ.ரா' என்றார். பேராசிரியரின் "கங்குற் பொழுதில் தெறித்த கனற்பொறி காட்டு மலராச்சு" என்ற கவிதையை வெகுவாகப் பாராட்டி மனப்பாடமாக ஒப்புவித்தார். ஞான பீட விருது பேராசிரியர் அ.சீ.ராவுக்குக் கிடைத்திருக்க வேண்டும் என்றார்.பேராசிரியரின் பேச்சைக் கேட்பது ஒரு வீணைக் கச்சேரியைக் கேட்பதுபோலவும் எம். எஸ் சுப்புலக்ஷ்மி அவர்களின் இசைக்கச்சேரியைக் கேட்பது போலும் இருக்கும் என்றார்.

திரு ஔவை நடராஜன் அவர்கள் பேராசிரியன் "குப்பன் பிள்ளைத்தமிழ்" என்னும் நகைச்சுவைப் பாடலைச் சிலாகித்துப்

பேசினார். தூத்துக்குடியில் இந்த ஆண்டின் ஒவ்வொரு மாதத்திலும் பேராசிரியரின் நினைவைப் போற்றிவிழா எடுக்கப்படுகிறது. பேராசிரியர் அவர் எழுத்துக்களில் இன்னும் வாழ்ந்துகொண்டிருக்கிறார். என்றும் வாழ்வார். பேராசிரியர் அ.சீ.ரா நாமம் வழ்க!

அ.சீ.ரா எழுதியுள்ள நூல்களின் பெரும்பகுதி ஏழு தொகுதிகளாக அல்லயன்ஸ் நிறுவனத்தால் வெளியிடப்பட்டுள்ளது

தொகுதி 1- அ.சீ.ரா கவிதைகள்

தொகுதி 2- அ.சீ.ராவின் நாடகங்கள்

தொகுதி 3- காவிய அரங்கில் (கம்பன் கதாபாத்திரங்கள் ஓர் ஆய்வு),

குருதேவரின் குரல் (கல்கியில் தொடராக வந்த கட்டுரைகள். தாகுர் கவிதைகளின் படப்பிடிப்பு), கட்டுரைகள்

தொகுதி 4- ஒருநூற்றாண்டுத் தமிழ்க் கவிதை (கல்கி நினைவுச் சொற்பொழிவு), மேல்காற்று, திருப்பாவை, திருவெம்பாவை

தொகுதி 5- இலக்கிய மலர்கள்(இலக்கியச் செல்வம் என்ற தலைப்பில் கல்கியில் வெளிவந்த கட்டுரைகளின் தொகுப்பு,) புது மெருகு, கட்டுரைகள்

தொகுதி 6- கவியரசர் கண்ட கவிதை(தாகுர் பாடல்களின் தமிழ் வடிவம்), இலக்கியக் கட்டுரைகள்

தொகுதி 7- அ.சீ.ராவின் ஆங்கில ஆக்கங்கள், NAMMAALVAR,THE VOICE OF BHARATHI, LEAVES FROM KAMBAN, ENGLISH ESSAYS



# 20. அ.சீ.ராவின் சிந்தனைகள்

1 நமது தினசரி வாழ்க்கை எவ்வாறு அமைந்திருந்த போதிலும் அதனால் விளையும் சோர்வையும் கஷ்டத்தையும் சமாளித்து அதிலிருந்து இன்பமும் புதுமையும் பெற - நம்மைக் காஞ்சன பத்மங்களாக்கிக்கொள்ள- ஒருவழிதான் உண்டு. அது நம்முடைய தினசரி வாழ்க்கையை ஏதாவது ஒரு இலட்சியத்தோடு ஒட்டி நடத்துவதே!

2 சலசல வென்றே காற்றில் அசைந்து செந்நெல் தாங்கித் தலை வணங்கும் நெற்கதிர்கள் நிறைந்த வயலைத் தன் மனத்தில் பார்த்துக்கொண்டே காய்ந்த வயலுக்குத் தண்ணீர் இறைக்கும் உழவனுக்குக் களைப்பு எவ்வாறு தோன்றும்?

3 தினசரி வாழ்க்கையாகிய களிமண் பொம்மையில் உயிரும் உணர்ச்சியும் காணும் கவிதையுள்ளம் படைத்துவிட்டோமானால், சிறுமை விலங்கு அற்றுவிடும், தினசரி வாழ்க்கையின் மஹாப்பழமையும்,கைப்பும் நீங்கிவிடும். இலட்சியம் தோன்றும். உணர்ச்சி பெருகும். புதுமை உதயமாகும். தினசரி வாழ்க்கை தெய்வ வாழ்க்கையாகிவிடும்.

4 மனித உள்ளம் இங்கே சொர்க்கத்தையும் நரகத்தையும் படைத்துக்கொண்டு வருகிறது.அதன் உயர்வு எல்லையற்றது, அளவை விஞ்சி நிற்பது, அதன் இழிவோ பாதாளம் ஏழின் கீழும் சென்று வாழ்வை நஞ்சாக மாற்றவல்லது.

5 உன்னதம், தாழ்வு, இவ்விரு வரம்புகளுக்குள்ளே எண்ணிறந்த மனிதர்களைப் படைத்து, அவர்களை எங்கோ, நாம் அறிய ஒண்ணாத நிலத்தை நோக்கி, கால நெடுவெளியில் செலுத்திவருகிறது ஒரு பேராற்றல்.

6 கவிஞன் ஒருவனுடைய பார்வை கூர்மையானது. தோற்றத்தை ஊடுருவிச் சென்று விஞ்ஞானியின் ஆராய்ச்சியைப் போல் , ஞானியின் உள்ளுணர்வைப்போல் உண்மையைக் காணவல்லது.

7. இலக்கியம் எல்லாம் நேரடியாகவோ , மறைமுகமாகவோ பிரச்சாரம் என்றே முடிவு கட்டிவிடலாம். பிரச்சாரம்தான். ஆனால் கவிஞனுடைய உள்ளத்திலிருந்து வரும் உண்மையின் ஆற்றல் இப்பாடல்களுக்கு இலக்கியத் தன்மை தருகிறது.

பேசும் பொருள் எதுவாக இருந்தாலும் அதை அனுபவமாகச் செய்யும் தன்மயத் திறத்தால் உணர்ச்சி வேகத்தால் கற்பனையால், கவிதை ஆக்க முடியும்.

8. ஓர் உணர்ச்சியை அல்லது நிலையைக் குறியீடாகப் பயன்படுத்தும் பொழுதே , அது கரைந்து, எதை உணர்த்த அது எழுந்ததோ அதுவாகவே ஆகிவிடும்.

9 குயில் பாட்டில் நாம் காணுகின்ற பயன் அது உணர்த்துவதாக நாம் எண்ணி மயங்கும் தத்துவமன்று.. பிறகு குயில் பாட்டில் நாம் பெறுகின்ற பயன் அதுவேதான். அதைச் சமைத்த கற்பனை, கவியின் தனியாற்றல்தான், கவிதைதான், கவிதையும் கற்பனையும் தம்மைக் கொண்டே தம்மையே பயனாய்க் கருதி சமைத்த கனவுதான்.

10 எளிமையாக இருப்பதால் கவிதை நலம் உள்ள பாடல் இன்னும் சக்தியுடையதாகிறது.

11 போலிப் புலமைக் கோணங்கிகளின் பிடியிலிருந்து மெல்லத் தமிழ்க்கவிதை பா்ரதியார் பேசியதும் இம்மண்ணுலக வாழ்க்கையின் நட்ட நடுவில், கடைத்தெருவின் ஓரத்தில், அரசியல் மேடைகளில் உழவன் பாடும் வயல் வெளியில், இரும்பைக்காய்ச்சி உருக்கும் யந்திர சாலை அரவத்தில், கேணியருகில், தென்னை மரக் கீற்றின் பட்டொளியில்- ஆனால் எங்கும் மனித இதயத்தின் அரவணைப்பில்- வந்து அமர்ந்து கொண்டது.

12 வாழ்க்கையில் துயரத்தையும், இன்பத்தையும், இழிவையும் உயர்வையும், அழுக்கையும், அழகையும் , மனிதப் பண்பு பூரணமாக உள்ளவர்களாலேயே உணரமுடியும்.. நம்மால் முடிவதில்லை- இதைத்தான் சொல்ல வந்தேன் -கவிஞனால் முடிகிறது.

13 கோயிலிலே கடவுள் இருக்கிறார் என்று சொல்லிவிட்டுக் கடவுளை வணங்காமல் இருக்கிறோமே , அதைப்போலவே, கவிதையிலே என்னவோ இருக்கிறது என்று சொல்லளவில் ஒப்புக்கொண்டு கவிஞனுடைய வார்த்தையைக் காதில் வாங்கிக்கொள்ளாமல் வளைய வருகிறோம்.

14 நோயாளியைச் சிலம்பக்கூடத்தில் விட்டு எங்கே சிலம்பம் பழகு என்று சொன்னால் எப்படி இருக்கும்? இதைப்போலத்தான், மனிதப்பண்பு குன்றிய நமக்குக் கவிஞனுடைய பேச்சு கசப்பாய்க்கூட இருக்கிறது. பூரணமான மனித தத்துவத்தை ஒட்டி அவன் காணும் இலட்சியங்களும் நமக்குப் பைத்தியக்காரக் கனவுகளாகத் தோன்றுகின்றன.

15 பொய்மைப் பாம்பைக் பிளந்து அதன் உயிரைக் குடித்த ஜீவன் முக்தனுக்கு , பாம்பின் வால் ஆடுகிறதா என்று பார்ப்பதில் சிரத்தை ஏது? முனைப்பு ஏது?

16 அன்பு உள்ளவரை மனிதன் அமரனாக வாழ்கிறான். அன்பு மாய்ந்தால் அவனும் மாய்கிறான். ஏதோ ஒன்றினிடம் பற்றில்லாமல் ஒருவனும் வாழமுடியாது. பாசத்திலிருந்து பூரணமாக விடுபடவும் முடியாது.

17 ஏதாவது சிறந்த இலட்சியத்தின் விளைவாக அமைந்து வாழ்க்கை அதோடு ஒன்றி இயங்கும் பொழுதுதான் உண்மை பாவம் மனிதனிடம் தோன்றுகிறது.

18 சுயநலம் என்ற சூரபதுமனை எப்பொழுது அழித்து வெற்றி பெறுகிறோமென்றால் அதைப் பிறர் சேவைக்குக் கருவியாக்கும் போதுதான், கருவியைப் பற்றிய உணர்வே நம்மிடம் அற்றுப்போகும் போதுதான்.

19 வீரனிடம் இரண்டு குணங்கள் உண்டு. ஒன்று தனது இலட்சியத்திலே அளவு கடந்த நம்பிக்கை. மற்றொன்று , தன் தருமத்திற்குப் புறம்பானதோ, அதோடு முரண்படுவதோ -அது வேறுவகையில் எவ்வளவு சிறந்ததாக இருந்தபோதிலும்- அதனிடம் அலட்சிய பாவம்.

20 உண்மை பரிபூரணமாயிருக்கும் போது எந்த இலட்சியத்தை ஒட்டி அது எழுந்ததோ அதற்குப் புறம்பான எதற்கும் அதனருகில் இடமில்லை.

21 கவிஞன் ஏன்பாடுகிறான்? அழகும் பரிவும் படைத்த கவிதை உள்ளமே பாட்டாக அவதரிக்கிறது. கவிஞன் ஏன் பாடுகிறான் என்றால் கவிஞனாக இருப்பதனால்தான். குயில் ஏன் பாடுகிறது?

22 கவிதை என்பது ஆத்மாவின் மொழிபெயர்ப்பு

23 உலகப் பொருட்களுக்கு அளவில்லை; அவற்றைப் பெறமுயலும் நம் சக்திக்கு அளவுண்டு. புலன்கள் விளைக்கும் இச்சைக்கு முடிவில்லை; இவ்விச்சையைச் சாந்தி செய்யும் என்று நாம் கருதும் உலகின் சக்திக்கு முடிவுண்டு. ஆகவே நமக்கு ஓய்வில்லை.; சுயேச்சையுமில்லை; புலன்கள் உலகப் பொருள்கள் இரண்டும் சேர்ந்து நமக்கு விலங்கினைப் பூட்டுகின்றன. நாம் கைதிகள்.

24 உலகப் பொருள்கள், அவற்றைத் தொடர்ந்து இயங்கும் நமது புலன்கள் - அந்த இரும்பு, இந்தச் சம்மட்டி- இவைகொண்டு மனமென்கின்ற உலைக் கூடத்திலே இச்சையென்ற பாரவிலங்கைச் செய்யாதிருப்பவன் எவனோ அவனே ப்ரும்மஞானி. உண்மையான விடுதலை பெற்றவன், எல்லையற்ற ஆனந்தம் அடைபவன், நாமோ .. .. நாம் கைதிகள்.

25 அன்பின் தத்துவம் பிறர்க்காக நம்மை மறப்பதே ,நாம் பிறர் என்ற பேதமில்லலாமல் பிறர்க்காக வாழ்கிறோம் என்ற நினைவுகூட இல்லாமல் நம்மை இழந்துவிடுவதே!

26 கவி என்பது மனித அனுபவத்தின் பிரதிபிம்பம். இது சொற்களால் அமைந்தால் கவிதை, ஒலிகளால் அமைந்தால் இசை. சொற்களும் ஒலிகளும் ஒன்றாகக் கலந்து அனுபவ வெளியீட்டுக் கருவிகளாக அமையும் போது இரண்டு கலைகளின் சம்மேளனத்தைப் பெறுகிறோம்.

27 சிறந்த கவிதையோடு இசை கலக்கும் போது கவிதை ஓங்கியும் இசை குறைந்தும் விவரிக்கின்றன.

28 ஒருவன் உண்மையான கவிஞனென்றால் அவனிடம் மஹரிஷி ஒருவருடயை ஞானத்தை, முனிவர் ஒருவருடைய பற்றற்ற சமபாவத்தைக் கண்டுவிடலாம்

29 பறவைகள் மாத்திரம் என்ன , காடும் கடலும் மலையும் உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் கவிதை உலகிலே பேசி வருகின்றன. கவிஞனாக நின்று பேசுகின்றன. அவை பேசுகின்ற பொருள் 'நாம்' என்பது. அந்தப் பொருளைச் சொல்லில் வடிக்கின்ற சிருஷ்டி இன்பமே கவிஞனுடைய களியாட்டம். ஏன் அவன் பாடமாட்டான்

'காக்கை .குருவி எங்கள் ஜாதி- நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்
நோக்கும் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை
நோக்க நோக்கக் களியாட்டம்

இதுவே பண்பட்ட இலக்கிய நாட்டின் தேசிய கீதம்.

30 கற்பனைத் தீயிலே தோய்த்துத் தோய்த்து, நமது நெஞ்சைச் சொல், சந்தம் என்னும் சம்மட்டி கொண்டு அடித்து உருவாக்குகிறான் கவிதைக் கொல்லன். துருப்பிடித்த இரும்புநேர் நெஞ்சு, சூடு பிடித்துக் கனல்கிறது. சேற்றிலே உயிரற்றுக் கிடந்த அது, உணர்ச்சி பெற்று, சௌந்தர்ய உலகைத் தொடுகிறது. அதுவேயாய் ஆகிவிடுகிறது.

31 முகம் தாமரை, கண் தாமரை , கைதாமரை, தாமரை தாமரை தாமரை, ஆமாம் நம்முடைய கவிஞர்கள் இந்தத் தாமரையைப் படாத பாடு படுத்திவிட்டார்கள். கேட்டுக் கேட்டுப் புளித்துப்போய்விட்டது. நம்முடைய நாட்டு இலக்கிய உலகில் , முகத்தின் அழகைப் பளிச்சென்று எடுத்துக்காட்ட , அதை ஆயிரம் மடங்காக தூக்கிக் காட்ட வந்த அந்தத் தாமரை இன்று வாடிவிட்டது.

32 ஒரு பொருளின் தன்மை என்று எதைக் குறிப்பிடுகிறோமோ , எந்தத் தன்மையால் அது மற்றைய பொருள்களினின்றும் தனித்து வேறுபட்டு நிற்கிறதோ அந்தத் தன்மையே தான் அதன் வரம்பு.

33 வரம்பை உணர்வதே அறிவின் முதற்படி. அதற்கப்பால் உள்ளதை எட்டிப்பார்க்க ஓயாமல் முயல்வதே அறிவின் அதிசய சக்தி . இரண்டிற்கும் இடையிலே வரம்பின் இயல்பை உணர்ந்து அதோடு ஒன்றி நின்று தனக்கு அடிமையாக்கிக் கொள்வதே ' அறிவின் பயன்.

34 மிக மிக மெல்லிய தந்திகள் கொண்ட வீணை ஒன்றுண்டு.."காற்று வீணை" என்று சொல்வார்கள். இளந் தென்றலின் மிருதுவான அசைவிற்குக்கூட, அந்த வீணையின் தந்திகள் துடித்து இசையெழுப்பும். இந்த வீணையைப் போல, நமது உள்ளமும் அமைந்து விட்டதானால் , வெளி உலகத்திலே எது நடந்த போதிலும் 'நமது உள்ளத்தின் நரம்புகள்துடிக்க'த் தலைப்படும். உணர்ச்சி நாதம் உதயமாகும். இந்த உணர்ச்சி நாதத்தின் சொல்வடிவமே இலக்கியமென்பது. இந்நாதத்தின் பல்வேறு படிகளைச் சொல்லிலே அமைத்து சொல்லின் மூலமாக நமது உள்ளத்திலே பதிய வைப்பவர்களே இலக்கியத்தைப் படைப்பவர்கள்.

35 அழகு ,பரிவு என்ற எல்லையற்ற இருவரம்புக்குள்ளே எல்லையற்ற பிரபஞ்சத்தையும் கண்டு, கண்டு, கண்டவற்றை யெல்லாம், தனது தனி உள்ளத்தின் வடிவாக்கி, அவ்வுள்ளத்தைப் பிய்த்துச் சொல்லில் வைத்து நமது நெஞ்சத்தில் படைக்கும் அற்புதமே இலக்கியம் ..அது வாழ்க்கையைக் காட்டும் காலக் கண்ணாடி. வாழ்க்கையை நமது அனுபவமாக மாற்றித் தரும் கலாசாதனை. நமது நெஞ்சைத் துடிப்புள்ளதாக மாற்றி, நம்மை மனிதர்களாக உயர்த்தும் பள்ளி. நம்மை மறந்து பிறரோடு ஒன்றி நிற்கும் இன்பத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும் அருட்கரம். இலக்கியம் எதற்கா? எதற்கென்றா கேட்கிறீர்கள்? நாம் வாழவேண்டாமா? வாழ்வாங்கு வாழவேண்டாமா? அதற்குத்தான்.

36 இசையிலே முதலில் தன் அனுபவத்தைத் தேக்கிப் பிறகு இசைக்கும் அனுபவத்திற்கும் பொருத்தமான வார்த்தைகளைக் கலைஞன் தேடுகிறானா? அல்லது அதன் பாவத்தைக் கூர்மையாக்க இசையைத் தேடுகிறானா என்பதுதான் கேள்வி. முன்னதைச் செய்பவன் சிறப்பாக இசைக்கலைஞன். பின்னதைச் செய்பவன் சிறப்பாகக் கவிஞன்.



# 21. பேராசிரியர்அ.சீநிவாசராகவன் இரட்டைமணிமாலை

ஆக்கியோன் - கவிமாமணி இலந்தை சு.இராமசாமி

### வெண்பா

என்னரிய ஆசான் இராகவன்மேல் பாடுகிற
வன்ன இரட்டை மணிமாலை - மன்னிடவே
ஓங்கார் மாக ஒளிரும் கணபதியே
நீங்கா அருள்செய்க நீ!

## நூல்

### வெண்பா

உன்னதமாய் யாரும் உரைக்கும் பணிகளிலே
முன்னதாய் ஆசானே முந்திடுவார்- தன்னலமே
இன்றித்தன் மாணாக்கர் ஏற்றம் நினைத்தவரை
ஒன்றித்தான் நிற்கும் உளம்.

### கட்டளைக் கலித்துறை

உளமே மகிழ, உணர்வே நெகிழ , உயர்வுறவே
வளமே கொடுக்கும் வகையே புகட்டும் வரமுடையார்
தளமே அமைத்துத் தகவாய் வகுப்பினில் தான்படிப்போர்
ஒளியாய் அறிவை உறவே புரிந்தநல் உத்தமரே!

### வெண்பா

உத்தமர், ஓடி உதவிகள் செய்கிற
வித்தகர், நாணல், விளக்குபவர்- இத்தனை
என்றே இயம்ப இயலா விருதுடையார்
நன்றே அவர்சொல் நயம்

### கட்டளைக் கலித்துறை

நயமான பேச்சும், நலிவிலா நோக்கும், நலமுடனே
தயவான நெஞ்சும், தகவான பண்பும் தரமுடைய
சுயமான சிந்தையும் சொல்லில் தெளிவும் சுறுசுறுப்பும்
இயல்பாகக் கொண்ட இராகவ னார்பதம் ஏத்துவமே!

### வெண்பா

ஏத்தும் புகழ்சேர் இராகவன் பாற்கற்றோர்
பூத்துப் பொலிந்து புகழுற்றார்- மூத்தோர்
அவையினில் முன்னிலை ஆண்ட குருவே
புவியில் கிடைத்த புகல்.

### கட்டளைக் கலித்துறை

புகலென்று சென்றேன், புரந்தார், அரிய பொருளுரைத்தார்
அகலின் ஒளியாய் அறியாமை போக்கியே ஆதரித்தார்
சிகரம் எனவே செழுந்தமிழ் தன்னில் திகழ்ந்திருந்த
நிகரில் முதல்வர் நினைவினை என்றும் நிகழ்த்துவனே!

### வெண்பா

நிகழ்கின்ற பாடம் நிகரிலை என்றே
புகழ்கின்ற வண்ணம் புகட்டி- அகழ்கின்ற
ஆய்வில் தமிழுடன் ஆங்கில மும்கொடுத்தார்
தாய்போல் பரிவில் தழைத்து.

## கட்டளைக் கலித்துறை

தழைக்கின்ற மேல்காற்றைத் தண்டமிழ்த் தென்றல்
தனில்புகுத்திக்
கொழிக்கின்ற வண்ணம் கொணர்ந்த பெரியார்,
குறைவிலதாய்
இழைக்கின்ற செஞ்சொல் இசையாய்ப் பரவி எழுந்துவந்தே
அழைக்கின்ற போதில் அடடா அமுதம் அகப்படுமே!

## வெண்பா

அகப்படும் வண்ணம் அகம்படும் சிந்தை
சுகப்படு மாறு துலங்கும் - திகைப்புற
வைக்கின்ற அ.சீ.ரா வாய்மொழியைக் கேட்டவுடன்
கைக்குள் இலக்கியம் காண்.

## கட்டளைக் கலித்துறை

காணலாம் என்றவர் கண்களை நேராகக் கண்டவர்யார்?
வீணென அன்னார் விரித்திடும் பாடம் வெறுப்பவர் யார்?
தூணென மாணவர் தொய்ந்திடா வண்ணம் துலங்கவைத்த
மாணுயர் செம்மலின் மாட்சியை எங்ஙன் வழங்குவதே!

## வெண்பா

வழங்கும் உரைகள் மயங்கிட வைக்கும்
முழங்கும் புதுமை முழக்கம்- பழகிய
சொற்களில் துள்ளும் சுவையினில் ஏ,மனமே
பற்பல காட்சிகள் பார்!

## கட்டளைக் கலித்துறை

பாரதி சொற்படி பற்பல திக்குப் படைப்புகளின்
சார மெடுத்துத் தமிழ்மொழி சேர்த்துத் தழுவியதும்
ஈரத் தமிழின் இலக்கியம் ஆங்கிலம் ஏற்றியதும்
வேரில் பலத்தை விளைத்த இராகவன் வித்தகமே!

### வெண்பா

வித்தகம் தன்னை விளம்புவ தெப்படி?
புத்தகம் இன்றிப் புகட்டுவார் - உத்தம
ஆசிரியர் தன்னை அடைந்திட்ட மாணவர்கள்
நேசத்திற் கில்லை நிகர்!

### கட்டளைக் கலித்துறை

நிகரில் தமிழில் நிகழ்த்திய கல்கி நினைவு உரை
தகர்த்த(து) அதுவரை தாங்கிய ஆங்கிலத் தன்னுரிமை
பகரும் தமிழைப் பளிச்சிட வைக்கும் பணிசெயவே
தகவுடன் ஆங்கிலம் தான்முனம் கற்றதாய்ச் சாற்றினரே!

### வெண்பா

சாற்றும் இராகவனார் தன்பேச்சைக் கேட்டவர்கள்
போற்றிய தெல்லாம் புகலவோ? - ஆற்றினிலே
ஓடுகிற நீரில் ஒருதுளியைக் காட்டுவதோ?
பீடெல்லாம் சொல்லப் பெரிது!

### கட்டளைக் கலித்துறை

பெரியவர், கம்பனைப் பேசிடும் ஆய்வுப் பெருமைகளுக்கு
உரியவர், ஆசான், ஒருவரும் காணாது உதவுகிற
அரியவர், வாதில் அவர்சொல் செவிகொண்ட அன்பரெலாம்
சரி அவர் என்றுதான் சாற்றுவார், ஈதொரு சாதனையே!

### வெண்பா

சாதனைகள் ஒன்றிரண்டா சாற்றுதற்கு? வா ழ்க்கையிலே
சோதனைகள் கண்டு துவளாமல் - ஆதரவாய்
ஆசிரி யப்பணிக்கே அர்ப்பணித்து விட்டவரை
பேசுவது என்ன பிற!

### கட்டளைக் கலித்துறை

பிறந்தோம், புசித்தோம், பிழைத்தோம் மறித்துப்
பிறிதெதையே
அறிந்தோம் எனவே அலமர என்றா அவரிருந்தார்?
சிறந்த படைப்பால், தெளிவால் உயரிய சிந்தனையால்
இறவா திருக்கும் இவர்புகழ் எவ்வா றியம்புவதே!

### வெண்பா

இயம்பியே போற்றிட எத்தனை நூல்கள்
நயமுடன் தந்தார் நமக்கு?- பெயர்பெறும்
வெள்ளைப் பறவை விருதுபெற்று நம்நெஞ்சைக்
கொள்ளையிட்டுச் சென்றவிதம் கூறு!

### கட்டளைக் கலித்துறை

கூறு புகழெந்தைக் கொற்றங்கள் ஒவ்வொன்றும் கொஞ்சமிலை
ஏறும் கவிதை இயல் இசை நாடகம் என்றுபல
வீறுகொள் வித்தகர் செந்தமிழ்ச் செம்மல் விளங்குகவி
ஊறிய நெஞ்சர் உரைத்தவை யாவையும் உன்னதமே!

## நூற்பயன்

செந்தமிழ்ச் செம்மல்மேல் செப்பிய பாமாலை
வந்தனை செய்தே மனங்கொள்வோம்- வந்துவிழும்
சொல்லழகும், செஞ்சொல் சுவையழகும், தீங்கவிதை
நல்லழகும் வாய்க்கும் நலம்.!





கவிமாமணி இலந்தை சு இராமசாமி பேராசிரியர் அ.சீ.ரா வின் மாணவர். பேராசிரியரின் வீட்டில் 5ஆண்டுகள் தங்கிப் படித்தவர். கவிஞர். அவருக்குச் சென்னைப் பாரதிக் கலைக்கழகம் கவிமாமணி என்னும் பட்டம் கொடுத்தது. அன்னை யோக சக்தி நிலையம் அவருக்குச் சமீபத்தில் 'சந்தத் தமிழ்க்கடல்' என்ற பட்டம் அளித்தது .

அவருடைய நூல்களில் சில, பொருநை வெள்ளம், சந்த வசந்தம், பாரதி வாழ்வும் வாக்கும், பாரதியில் அறிவியல். வள்ளுவ வாயில், கண்டுபிடிப்புகளின் கதாநாயகன் எடிசன், அலாஸ்கா அழகின் சிலிர்ப்பு. பனிகண்டேன் பரமன் கண்டேன் கைலாய யாத்திரை பல நூல்களைத் தமிழாக்கம் செய்திருக்கிறார். அமெரிக்கா, கானடா ஆகிய நாடுகளில் பல தமிழ்ச்சங்கங்களிலும் பல்கலைக் கழகங்களிலும் உரையாற்றியிருக்கிறார்.

சந்தவசந்தம் எனும் தமிழ்க்கவிதை குழுமம் மின்னலையில் நடத்திவருகிறார்.. மின்னிணையத்தில் நன்கு அறிமுகமானவர்.

விருத்தம் எழுத வருத்தம் எதற்கு எனும் தொடர் இணையத்தில் வெளிவந்தது.

இந்நூலில் பேராசிரியரின் அருமை பெருமைகளை நமக்குப் படம்பிடித்துக் காட்டுகிறார். பேராசிரியரைப் பற்றிய இரட்டைமணிமாலை அவர் பேராசிரியரிடம் கொண்டிருக்கும் பக்தியைக் காட்டுகிறது.